# இந்து தர்ம சாஸ்திரம்



நர்மதா பதிப்பகம்



அருள்மிகு வேல்முருகன்

ஞான முனீஸ்வரர் ஆலயத்தில்

சிங்கப்பூர் தேசிய தின விழா

ஆராதனை நடந்தபோது,

வேல்முருகன் ஐயப்ப பக்தர்கள்

வழங்கிய அன்பளிப்பு நூல்!

9-8-2001

வியாழக்கிழமை

# இந்து தர்ம சாஸ்திரம்

அருளும், பொருளும் வளர்வதற்குரிய வழிகளை
எளிய தமிழில் சொல்லும் புண்ணிய சாஸ்திர நூல்!

பி.எஸ்.ஆச்சார்யா
('ஆத்மசக்தி தரும் குண்டலினி யோகப் பயிற்சி' நூலாசிரியர்)




நர்மதா பதிப்பகம்
நல்ல நூல் வெளியீட்டாளர்கள்
16/7, ராஜாபாதர் தெரு, பாண்டிபஜார்,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி: 828 0466 தொலை நகல்: 825 3609

## செலவல்ல, மூலதனம்!

"புத்தகங்களுக்காக நாம் தரும் தொகை செலவல்ல, மூலதனம்! அறிவாற்றலைப் பெருக்கவும், இதயத்தை நல்ல பண்புகளால் விசாலமடையச் செய்யவும் உதவும் உலக சாளரங்களே புத்தகங்கள்! சான்றோர்களால் எழுதப்பட்ட நல்ல நூல்களை வாங்கிப் படியுங்கள். அவை பல்லாண்டுகளுக்கு உங்களுக்கு உற்ற துணையாக இருப்பதை பின்பு உணர்வீர்கள்."

Pages: 160

**PRICE: Rs.35-00**

Paper used: 11.6 kg. SPB c/w

☐ Hindu Dharma Sasthiram - Sayings from Hindu Scriptures - A Compilation in Tamil - by P.S.Aacharya ☐ First Edition: 1993 ☐ This Edition: February 2001 ☐ Published by: T.S.Ramalingam, Narmadha Pathipagam, Chennai - 600 017 ☐ D.T.P. Execution by: M/s. Star Graphics, Chennai - 600 017 ☐ Jai Ganesh Printing Works, Chennai - 600 004. ☐

# உலகிலேயே முதிர்ந்த கலாச்சாரம்!

உலகத்தின் மிகத் தொன்மையான
கலாச்சாரம் நமது இந்து
கலாச்சாரம். மனித இனம் முதன்
முதலில் உலகில் தோன்றிய இடம் நமது
பரத கண்டமே. வாழ்ந்து, அனுபவித்து,
சிந்தித்து ஏற்படுத்தப்பட்டவைகளே நமது
இந்து மத சாஸ்திரங்கள்.

சர்ச்சைகளுக்கு அப்பாற்பட்ட
தத்துவங்களின் அடிப்படையிலேயே
இந்த சாஸ்திரங்கள் வகுக்கப்பட்டன.
இந்த கணினி யுகத்தில்
தர்ம நியாயங்கள் சற்றே மறக்கப்பட்டு,
சமூகம் தற்காலிக இன்பங்களின்
பின்னால் சென்று பின்பு வருந்தும்படியான
சூழ்நிலையில் சிக்குற்றிருக்கிறது.
இந்நிலை மாறி, நமது பண்புகளையும்
கலாச்சாரத்தையும் உயிர்ப்பித்துக் கொள்ள
வேண்டிய கட்டாயம் இப்போது
ஏற்பட்டிருக்கிறது. அதற்கான முயற்சிகளில்
ஒன்றே இந்த சிறு நூல். குற்றம் குறைகளை
பொறுத்து, இந்நூலின் நோக்கம்
வெற்றிபெறச் செய்ய வேண்டுகிறோம்.

## வாசித்தீர்களா?

| | | |
|---|---|---|
| ☐ பிள்ளையார் கதைகள் | சரஸ்வதி B.Sc.,M.A., B.Ed., | 27.00 |
| ☐ பிரார்த்தனை களஞ்சியம் | (23 முக்கிய ஸ்லோகங்கள்) | 30.00 |
| ☐ சுந்தரகாண்டம் (வால்மீகி) | பி.எஸ்.ஆச்சார்யா | 30.00 |
| ☐ பரமாச்சார்யர் (காஞ்சி பெரியவர்கள் வரலாற்று நூல்) | பரந்தாமன் | 30.00 |
| ☐ உபநிஷதங்களின் சாரம் (18 உபநிஷதங்களின் சுருக்கம்) | ,, | 20.00 |
| ☐ இந்து சமய பண்டிகைகள் - வழிபாட்டு முறைகள் | சியாமளா ராகவன் | 30.00 |
| ☐ இந்து சமய தத்துவங்கள் 500 | பி.எஸ்.ஆச்சார்யா | 27.00 |
| ☐ இந்து தர்ம சாஸ்திரம் | ,, | 35.00 |
| ☐ இளைஞர்களுக்கு இந்து மதம் | சின்மயானந்தர் | 20.00 |
| ☐ அநுமன் கதை | புலவர் மா.சீதாராமன் M.A. | 55.00 |
| ☐ கருணை பொழியும் ஸ்ரீ சத்திய சாயி | பி.எஸ்.ஆச்சார்யா | 23.00 |
| ☐ சத்திய தரிசனம் (பகவான் பாபாவின் அருளுரைகள், தெளிவு தரும் பதில்கள், பேச்சுக்களின் தொகுப்பு) | லட்சுமி சுப்பிரமணியம் | 16.00 |
| ☐ அம்பாள் அர்ச்சனை 1008 | உமா மகேஸ்வரி | 14.00 |
| ☐ காளிதாசரின் உலக மகாகாவியங்கள் (4 காவியம், 3 நாடகங்கள்) | நாராயணவேலுப் பிள்ளை | 25.00 |
| ☐ திருமலையான் திருவருள் | நாகர்கோவில் கிருஷ்ணன் | 100.00 |





# முன்னுரை

பல மகான்களும், மகரிஷிகளும் அவ்வப்பொழுது கூறிய ஆழ்ந்த கருத்துள்ள வார்த்தைகளே தர்மம் ஆகும்.

மனு, யாக்ஞவல்கியர், பராசரர், கௌதமர், வால்மீகி, வியாசர், வசிஷ்டர் போன்ற பதினெட்டு மகரிஷிகள் அவ்வப்பொழுது பல தர்மங்களைக் கூறி, அவற்றைப் பல சாஸ்திரங்களாகவே படைத்தார்கள். பீஷ்மர் தன் இறுதி நாட்களில் அம்புப் படுக்கையில் படுத்தவாறே பாண்டவர்களுக்குப் பல தர்மங்களை எடுத்துக் கூறினார். கிருஷ்ண பரமாத்மா, அர்ஜுனனுக்கு தேர்த்தட்டில் இருந்து கொண்டே பல தர்மங்களை எடுத்துக் கூறினார்.

தருமர் தன் சகோதரர்களுக்கு அநேக தர்மங்களை எடுத்துரைத்தார். விதுரர் திருதராஷ்டிரனுக்குக் கூறிய புத்திமதிகளும் தர்மமே ஆகும்.

சங்கர பகவத் பாதர் தன் சிஷ்யர்களுக்குக் கூறிய அமுத மொழிகளும் தர்மமே ஆகும்.

அனைத்தையும் தேர்ந்தெடுத்து சாரமாக இதில் கொடுத் துள்ளேன். இதில் உள்ளவை அனைத்தும் சாஸ்திரங்களை ஆதாரமாகக் கொண்டவை. இதிலுள்ள எல்லா தர்மங்களை யும் கடைபிடித்தொழுக முடியாமற் போனாலும், அப்படி முயற்சிப்பதே தர்மம் ஆகும். இதைப் படித்து பிறருக்கு எடுத்துச் சொல்வது கூட தர்மமாகும்.

அனைவரும் இதைப் படித்து இன்புற்று தர்மங்களை அறிந்து பயன் பல பெற்று சகல சௌபாக்கியங்களும் அடைந்து நன்கு வசதியுடன் வாழவேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

**பி.எஸ்.ஆச்சார்யா**





# இந்து தர்ம சாஸ்திரம்

□□ எவன் ஒருவன் சூரிய உதயத்திற்கு முன்பு குளித்து தெய்வ சிந்தனையில் ஈடுபடுகிறானோ அவனுக்கு உடல் பலம், அழகு, நல்ல சரீரம், வாக்குப் பலிதம், நல்ல குணம், தர்மசிந்தனை, பசு, கௌரவம், செல்வாக்கு, புகழ், தனம், வேலையாள் ஆகியன தேடி வருகின்றன.

□□ ஆயுளை விரும்புகிறவன் கிழக்கு முகமாக உட்கார்ந்து கொண்டும், கீர்த்தியை விரும்புகின்றவன் தெற்கு முகமாக உட்கார்ந்து கொண்டும், சம்பத்தை விரும்புகின்றவன் மேற்கு முகமாக உட்கார்ந்து கொண்டும், சத்தியத்தை விரும்புகின்றவன் வடக்கு முகமாக உட்கார்ந்து கொண்டும் சாப்பிட வேண்டியது. சாப்பிடும்போது அதிகமாகப் பேசுவதை தவிர்க்க வேண்டும்.

□□ சகல வித சௌபாக்கியங்களும் ஒருவனுக்கு இருக்கலாம். இவை இருக்கிறதை எண்ணி தர்மத்தை விட்டுவிடக் கூடாது. மூடர்களிடம் ஆலோசனை கேட்பதோ அவர்கள் செய்யும் கெட்ட காரியங்களுக்கு உதவுவதோ தர்மம் கெட வழியாகும். சுகம் இருக்கும் போது இடையிடையில் துக்கமும், கவலையும் வந்தால்தான் உண்மையான சுகத்தின் தராதரத்தை உணர முடியும்.

□□ தனது குருவைக் கண்டவுடன் வணங்க வேண்டும். தனக்கு உதவி செய்தவனையும், நண்பனையும் நால்வருக்குத் தெரிய சபையில் வணங்க வேண்டும். தாசானுதாசர்களை காரியம் கை கொள்ளும் பொழுது வணங்க வேண்டும். மனைவியை காலமான பின்பு வணங்க வேண்டும். பிள்ளைகளை ஒரு போதும் வணங்குதல் கூடாது.

□□ நாள்தோறும் வருமானம், நோயில்லாத உடல், அன்பான மனைவி, பிரியமான வார்த்தை பேசும் உறவினர், தனக்கு அடங்கிய குழந்தைகள், பொருள் வர வழிவகுக்கும் கல்வி, இந்த ஆறும் ஒரு மனிதனுக்கு இருந்தால் அதுவே சொர்க்கம் ஆகும்.

□□ வேதம் தெரியாத பிராமணர்கள் ஒரு லட்சம் பேர்களுக்கு அன்னம் இடுவதைக் காட்டிலும், வேதம் தெரிந்த பிராமணரல்லாத ஒருவருக்கு இடும் அன்னத்தால் கிடைக்கும் பலன் அதிகமாகும்.

□□ அவசரப்பட்டு ஓடும் ஒருவன் வேலியைத் தாண்டி, அதற்கப்பால் அவன் காணாதிருந்த குழியில் விழுந்து காயமுறுகிறான். இவ்வாறே தன் செயல்களின் விளைவுகளை நோக்காது துரிதமாக வேலைகளில் ஈடுபடுபவன் இன்னலுறுகிறான். ஆதலால் நிதானத்தின் குரலுக்கு செவி கொடுப்பாய். அதன் சொற்கள் உன்னத ஞான அறிவுரைகள் ஆகும். அதன் வழிகள் தற்காப்பிற்கும் உண்மைக்கும் அழைத்துச் செல்லும்.

□□ உன்னுடைய மேதையில் பெருமைப்படும் மனிதா! நீ யார்? உன் செயல்களினால் உன்னை பாராட்டிக் கொள்வது ஏன்? அறிவுடையவனாக ஒருவன் ஆவதற்கு

முதல் படி தன் அறிவின்மையை அறிந்து கொள்வதுதான். உன்னைப் பிறர் மூடன் எனக் கருதாமலிருக்க வேண்டுமானால் அறிவாளி என உன்னை நீ கற்பனை செய்து கொள்ளாமலிருக்க வேண்டும்.

□□ மற்றவர்களின் அனுபவங்களிலிருந்து உன் ஞானத்தை விருத்தி செய்து கொள்வாயாக. அவர்களுடைய தவறுகளிலிருந்து உன் தவறுகளை திருத்திக் கொள்வாயாக.

□□ உன் தகுதிக்கேற்ற வசதிகளைச் செய்து கொள்வாயாக! தன் சக்திக்கு மீறிய அளவு எந்த செலவையும் செய்யாதே! இளமையில் கடைப்பிடிக்கும் நிதானம், முதிர்ச்சி தசையில் ஆதாரத்தைத் தரும். உன்னுடைய தொழிலே உன் கவனம் முழுவதையும் பெறட்டும்.

□□ விவேகத்தின் அறிவுரைகளுக்கு மனிதா! நீ செவி சாய்ப்பாயாக! அவளுடைய மொழிகளை இதயத்தில் இருத்துவாயாக. அவளுடைய கருத்துக்கள் உலகத்தில் யாவருக்கும் பொருந்தும். எல்லா நலன்களும் அவளைச் சார்ந்தே நிற்கின்றன. வாழ்க்கைத் துணைவியும் தலைவி யும் அவளே!

□□ கடலில் நிற்கும் பாறை போல அவன் உறுதியுடன் இருக்கிறான். அலைகளின் மோதல் அவனை அசைவுறச் செய்வதில்லை. குன்றின் மீதுள்ள கோபுரம் போன்று அவன் தலையை நிமிர்த்துகிறான். செல்வம் ஏந்திய அம்புகள் அவன் பாதங்களில் வீழ்கின்றன.

□□ ஒருவனையும் சோதிக்காமல் நம்பி விடாதே! காரணமற்றும் ஒருவனையும் சந்தேகிக்காதே! இது

நியாயமற்றது. ஒருவனது நேர்மையை உணர்ந்த பிறகு உன் இதயத்தில் அவனை வைத்து பொக்கிஷம் போல் போற்றுவாயாக. அவனை விலை மதிக்க முடியாத மாணிக்கமாக கருதுவாயாக.

□□ எது நாளை தேவைப்படுமோ அதை இன்று பயன்படுத்தாதே. எதை முன்யோசனையால் பெறக்கூடுமோ, எச்சரிக்கையினால் தவிர்க்கக் கூடுமோ, அதை அசட்டையாக கவனியாமலிராதே. ஆனால் விவேகத்தினின்றும் கூட நிச்சயமாக வெற்றி எப்போதும் உண்டு என்று எண்ணாதே! ஏனெனில் இரவில் என்ன நேரப் போகிறது என்பதை பகல் அறியாது.

□□ உன்னுடைய பொழுது போக்கு கேளிக்கைகள் அதிகம் செலவற்றதாக இருக்கட்டும். ஏனெனில் அதைப் பெறுவதில் அடையும் 'துன்பம்' அதனால் வரும் இன்பத்தை மிஞ்சாமலிருக்க வேண்டும். செழுமை உன்னுடைய முன்யோசனையை பாதிக்காமலிருக்க வேண்டும். செல்வம் சிக்கனத்தின் கரங்களை வெட்டி விடாமலிருக்க வேண்டும். தேவையற்ற ஆடம்பரத்தில் திளைப்பவன் தேவையான பொருள்களுக்கே திண்டாடும் நிலை அடைவான்.

□□ கால் ஊனமுற்றிருப்பவனைப் பார்த்து சிரிப்பவன் தான் ஊனத்துடன் நடக்காமலிருக்க கவனத்துடன் இருக்கட்டும். பிறருடைய குற்றங்களை உற்சாகத்துடன் பேசுபவன் தான் மனம் நொந்து கொள்ளுமாறு தன்னைப் பற்றி பிறர் பேசக் கேட்பான்.

□□ உன்னுடைய சொற்களின் கருத்துக்களை ஆராய்வதற்கு முன் பேசவோ செயல்படவோ துணியாதே!

அதையே நீ எடுக்கும் ஒவ்வொரு நடவடிக்கையிலும் கடைப்பிடிப்பாய். இதனால் அவமானம் உன்னை விட்டு ஓடும். உன் வீட்டில் வெட்கம் தலைகாட்டாது. நீ பச்சாதாபம் அடைய நேரிடாது. சோகமும் உன் முகத்தில் குடி கொள்ளாது.

□□ பொறாமை நிறைந்த மனிதனின் மனம் கோரமாயும் கசப்பாயும் மாறுகிறது. அவனுடைய நா விஷத்தைக் கக்குகிறது. அண்டை வீட்டினரின் வெற்றி அவன் மன அமைதியைக் குலைக்கிறது. தன்னுடைய அறையினுள் துக்கமடைந்து கொண்டிருக்கிறான். மற்றொருவனுக்கு நன்மையாக இருப்பது இவனுக்குத் தீமையாகத் தோன்றுகிறது. குரோதமும் பொச்சரிப்பும் அவன் இதயத்தை அரிக்கின்றன. அவன் அமைதி அடைவதில்லை. இறுதியில் சிலந்திப் பூச்சி தன் கூட்டிலேயே அழிவதைப் போல் நசித்துப் போகிறான்.

□□ ஆர்வத்துடன் தன்னைப் பாராட்டும் மொழிகளுக்கு அடிமையானவன், இச்சகம் பாடுவோர்களுக்கு இரையாகிறான்.

□□ உன்னுடைய நாவிற்கு ஒரு தடை வைப்பாயாக. உதடுகளிலேயே ஒரு காவலனை நிறுத்துவாயாக. இல்லையெனில் உன்னுடைய நாவே உனது அமைதியைக் குலைக்கும்.

□□ மூடன் எப்போதும் அதிருஷ்டமற்றவனாக இருக்க மாட்டான். விவேகமுள்ளவன் எப்போதுமே வெற்றியை அடைந்து கொண்டிருக்க மாட்டான். ஆனால் மூடன் ஒருபோதுமே உண்மையான சந்தோஷத்தைப் பெற்

திருக்கமாட்டான். விவேகமுள்ளவன் ஒருபோதுமே மனங்கலங்கி நிற்கமாட்டான்.

□□ விபத்துக்கள், துரதிர்ஷ்டங்கள், வறுமை, இன்னல், துன்பமுறுதல் இவைகள் உலகில் பிறந்த எந்த ஒரு மனிதனுக்கும் பெரும்பாலும் விதிவசமாக உள்ளன. ஆபத்தால், விபத்திலேயே தோன்றிய குழந்தாய்! உன்னுடைய மனத்திற்கு, தைரியம், பொறுமை என்ற மதில் சுவர்களினால் பாதுகாப்பு அளி. அதனால் நீ அனுபவிக்க வேண்டிய மானிட இன்னல்களை உள்ள உறுதியுடன் சமாளிப்பாய்.

□□ எளிமையான உடை, அழகிய பெண்ணுக்கு அலங்காரமாக அமைவது போல, அடக்கமான செயல் ஞானத்தின் அணிகலனாகும். அடக்கமுடையவனின் மொழி உண்மைக்கு மெருகு தருகிறது. சொற்களில் அவன் வெளிப்படுத்தும் நிதானம் குற்றத்திலிருந்து அவனை விடுவிக்கிறது.

□□ ஒரு ஒட்டகம் எவ்வாறு சுமையை ஏந்தி உஷ்ணம், பசி, தாகம் இவைகளைத் தாங்கிக் கொண்டு மணல் நிரம்பியிருக்கும் பாலைவனத்தை மயக்கமுறாமல் கடந்து செல்கிறதோ, அவ்வாறே மனிதனின் பொறுமையும் எல்லா இன்னல்களுக்கிடையேயும் அவனைக் காக்கும்.

□□ பெருந்தன்மை படைத்த உள்ளம் பணச்செருக்கை வெறுக்கும். உயர்ந்த அவனுடைய ஆன்மா கீழ் நிலையை அடையாது.

□□ எவன் மவுனம் சாதிக்கிறானோ, எவன் அதிகம் பேசாமல் பொறுமையுடன் இருக்கிறானோ, எவன் தன்னிடம் அதிக நியாயமிருந்தும் பிறரைக் கொண்டு

பேசச் செய்யவில்லையோ, எவன் தனக்கு பலமான அடிபட்டும் எதிர்த்துத் தாக்கவில்லையோ, எவன் தனக்கு கெடுதல் செய்தவனை தண்டிக்க விரும்பவில்லையோ, எவன் தன்னிடம் பணம் இல்லாத சமயத்திலும் பிறரிடம் வாங்கி கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி செய்வானோ அவனை தேவாதி தேவர்கள் ஆயுள் முடிந்த உடன் புண்ணியலோகத்திற்கு அழைத்துச் செல்லுகிறார்கள்.

□□ நமது குடும்பத்தில் சுப காரியங்கள் நடப்பதற்கு முன்பும், நடந்த பின்பும் குல வழக்கப்படி குல தெய்வத்திற்கு பூஜை காரியங்களும், பிதுருக்களுக்கு பிரீதி உண்டாக்கும் சிரார்த்தம், தர்ப்பணம் போன்றவைகளையும் செய்வதால்தான், குலதெய்வத்தின் பக்க பலமும் பித்ருக்களின் ஆசீர்வாதமும் கிடைத்து குடும்பம் குதூகலிக்கும். அதே சமயம் இஷ்ட தெய்வத்தையும் மறந்து விடக்கூடாது.

□□ சாப்பிடும்போது அன்னத்தில் மயிர் இருந்தால் அந்த அன்னத்தை கீழே வைத்துவிட்டு மீதி உள்ளதை புசிக்க வேண்டும். தலைமயிரையும், நகத்தையும் வேஷ்டியில் பிரித்த நூலையும் வீட்டு முன் வாசலில் போடுதல் கூடாது; பின் வாசலில் போட வேண்டும்.

□□ இல்லறத்தை இன்பமாக நடத்தும் கிரஹஸ்தன் பிற ஸ்திரீ மீது மோகம் கொள்ளாமல் தன் மனைவியுடன் வம்ச விருத்திக்காக உறவு கொள்ள வேண்டியது. அமாவாசை, பௌர்ணமி, ஏகாதசி, திரயோதசி, அஷ்டமி ஆகிய திதிகளையும், பரணி, கார்த்திகை, பூரம், பூராடம், பூரட்டாதி, திருவாதிரை, ஆயில்யம், சித்திரை, விசாகம், கேட்டை, மூலம் ஆகிய நட்சத்திரங்களையும், எண்ணெய் ஸ்நானம் செய்யும் நாட்கள், மாதவிடாயான முதல் நான்கு

நாட்கள் ஆகிய காலங்களில் மனைவியுடன் உறவு கொள்ளுதல் கூடாது. இவை தவிர மற்ற நாட்களில் மனைவியுடன் எவன் உறவு கொள்ளுகிறானோ அவன் பிரம்மச்சாரியாகவே கருதப்படுவான்.

□□ எவன் பணம் அதிகம் இருந்தும் தானம் செய்யாமல் இருக்கிறானோ, எவன் தரித்திரனாக இருந்து கொண்டு தெய்வதரிசனம் செய்யாமலும் மந்திரங்களை ஜெபம் செய்யாமலும் சோம்பேறியாக இருக்கிறானோ, அவன் பொது மக்களால் ஒதுக்கப்பட்டவன் ஆவான்.

□□ சோதிடத்தில் - ஜாதகத்தில் - நம்பிக்கை வைக்காதவன் குலத்தில் உதித்த பெண், சந்ததியில்லாத குடும்பத்தில் பிறந்த பெண், தெய்வ நம்பிக்கையில்லாத பெண், அநியாய வழியில் பொருள் சம்பாதித்து வைத்தவன் குலத்தில் உதித்த பெண் ஆகிய இந்த ஐவகை குற்றமும் இல்லாதவர்கள் வீட்டில் பெண் கொள்ளல் வேண்டும்.

□□ எப்பொழுதும் இனிமையாகவும் அடுக்குமொழி அலங்காரச் சொற்களாலும் பேசக் கூடியவர்கள் நிறைய கிடைப்பார்கள். ஆனால் ஒருவன் முன்னுக்கு வருவதற்கு நல்ல யோசனை சொல்கிறவனும், புத்திமதி கூறுபவனும் கிடைப்பது மிகவும் அபூர்வம். நல்லவர்கள் இப்படிப் பட்டவர்களின் சினேகிதத்தைப் பெற முயல வேண்டும்.

□□ சோதிடம் கூறும் சோதிஷனும் நீதி வழங்கும் நீதிபதியும், காரணமின்றி பரிகாரம் பண்ணுகிறவனும், தேவாலயத்தில் பூஜை செய்யும் அர்ச்சகனும், சாஸ்திர ரீதியாகச் செய்யாவிட்டால், பிரம்மஹத்தி தோஷம் வரும் என்று மகான்கள் கூறியிருப்பதால் பயபக்தியுடன் முடிவு எடுக்க வேண்டும்.

□□ ஒருவனுக்கு பக்தி மட்டும் இருந்தால் போதாது. ஆசாரமும் வேண்டும். ஆசாரம் இருந்தால் அனுஷ்டானம் தேடி வரும். பணமும் பொருளும் இன்று வரும், நாளை போகும். ஆனால் ஆசாரமும் அனுஷ்டானமும் என்றும் நிலைத்து நிற்கும். பணத்தால் குறைந்தவன் குறைந்த வனல்ல. ஆனால் ஆசார அனுஷ்டானமின்றி கெட்டவன் கெட்டவனே ஆவான். ஆசாரக் குறைவுள்ள குலங்கள் எவ்வளவுதான் வசதியுடன் இருந்தாலும் தீர்க்க முடியாத குறைகள் இல்லாமல் போகாது.

□□ யாத்திரைக்கு குடை எடுத்துக் கொண்டு சென்றால் நாலில் ஒரு பங்கு பலனையும், செருப்பு போட்டுக் கொண்டு போனால் பாதி பலனையும், பல்லக்கு, குதிரை இவற்றில் சென்றால் முழுப் பலனையும் இழந்து விடுகிறான்.

□□ குழந்தைகள், பெண்கள், சரணடைந்தவர்கள், பசுக்கள், தான தர்மம் செய்தவர்கள், அன்னமிட்டவர்கள், ஆபத்தில் உதவியவர்கள் ஆகியோர் அதிக குற்றம் செய்திருந்தாலும் முதன் முறையாக மன்னிக்கத் தக்கவர்களாவார்கள்.

□□ தெய்வத்திற்கு பயந்தவராகவும், சுத்தமான ஆடைகளை அணிபவராகவும், முன் கோபம் இல்லாத வராகவும், கெட்ட பழக்கங்கள் இல்லாதவர்களாகவும், ஆத்ம சாஸ்திர விதிகளை நன்கு உணர்ந்தவராகவும் இருப்பவரே கோயில் அர்ச்சகராக இருக்கத் தகுதி யுடையவர்.

□□ தனது இடது கையால் ஆசனம் போட்டுக் கொண்டால் ஆயுள் நாசம். தனது இடது கையினால்

எண்ணெய் தேய்த்துக் கொண்டால் புத்திர நாசம். தன் இடது கையினால் சாப்பாடு போட்டுக் கொண்டால் தன நாசம். தன் இடது கையினால் படுக்கை போட்டுக் கொண்டால் இருப்பிடம் நாசம் ஏற்படும்.

□□ மதுபானத்தைக் குடித்தல், வீண் சண்டை போடுதல், தன் சக்தி தெரியாமல் பெரிய கூட்டத்தை எதிர்த்தல், கணவன் மனைவி ஆகிய இருவர்களுக்கும் துவேஷம் காட்டிப் பிரித்தல், தாயாதி வகையினருடன் மனஸ்தாபம் கொள்ளுதல், ஒருவருக்கொருவர் ஆகாமல் செய்தல், அரசாங்கத்தை எதிர்த்தல், கலகத்திற்குத் தூண்டுதல் ஆகிய காரியங்களைச் செய்பவன் மானிடப் பதர் ஆவான். அவனுக்கு நிச்சயம் நல்ல கதி கிடைக்காது.

□□ ஒருவனது அழகை கிழட்டுத் தன்மையும், தைரியத்தை பயமும், தர்மத்தை பொறாமையும், சம்பத்தை கோபமும், நல்ல நடத்தையை கெட்ட சேர்க்கையும், வெட்கத்தை காமமும், அஹங்காரம் அனைத்தையுமே அபகரித்துவிடும்.

□□ சிநேகிதனுக்கு துரோகம் செய்தல், தான் அடைந்த சுகத்தை மற்றவர் அடையாமல் தடுத்தல், தன்னிடம் பாதுகாப்பாகக் கொடுத்து வைத்த பொருளை அபகரித்தல், அதிகமாகப் பேசுதல், தர்ம சிந்தனை இல்லாமல் இருந்து கொண்டு தான தர்மம் செய்பவனைத் தடுத்தல் ஆகியன ஒருவன் கெட்டுப் போவதற்கான அறிகுறிகள் ஆகும்.

□□ அமங்கல காரியங்களில்கூட மங்களமான காரியங்களைக் கூறிய பின்பே அமங்கலத்தைக் கூற வேண்டும்.

□□ பொறுமையால் கோபத்தை ஜெயிக்க வேண்டும். துஷ்ட புத்தி உள்ளவனை நல்ல உபதேசத்தால் ஜெயிக்க வேண்டும். கஞ்சனை தர்மத்தால் ஜெயிக்க வேண்டும். பொய்யை சத்தியமான வார்த்தையால் ஜெயிக்க வேண்டும்.

□□ யார் தர்மத்தையும் வேதாந்தங்களையும் சர்வ சாஸ்திரங்களையும் கற்ற பின், பிறருக்கு சொல்லிக் கொடுக்கிறார்களோ அவர்களே 'ஆசாரியன்' எனப்படுவர். யார் வேதம், சாஸ்திரம் இவைகளைச் சொல்லிக் கொடுக்கிறார்களோ, அவர்களே 'உபாத்யாயன்' எனப்படுவர். இந்த உபாத்யாயனைவிட ஆசாரியன் பத்து மடங்கு உயர்ந்தவன். ஆசாரியனைவிட நூறு மடங்கு தகப்பன் உயர்ந்தவன். தகப்பனைவிட ஆயிரம் மடங்கு உயர்ந்தவள் தாயார்.

□□ தாய் மாமன், சிற்றப்பன், பெரியப்பன், மாமனார், குலபுரோகிதன், குரு, வைத்தியன் இவர்கள் வீட்டிற்கு வந்தால் முதலில் வணங்கி வரவேற்று உபசரிக்க வேண்டியது. இவர்கள் தந்தைக்கு அடுத்தவர்கள். இவர்களுக்கு அன்னமிடுதல் மூலம் கிடைக்கும் புண்ணியம் அதிகம்.

□□ குரு பத்தினியை அடைந்தவன், தன் ஆத்ம நண்பனின் மனைவியை ஆசை நாயகியாக வைத்துக் கொள்ளல், தான் ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்கு அல்லது ஸ்தாபனத்திற்கு தலைவனாக இருந்து கொண்டு தனக்கு கீழ் உள்ளவனின் பிழைப்புக்குக் கெடுதல் செய்தல், வேத வித்துக்களைச் சேவகம் செய்ய வைப்பவன், தன்னைச் சரண் அடைந்தவனைக் காட்டிக் கொடுப்பவன் ஆகியோர் பிரம்மஹத்தி தோஷம் செய்தவர்கள் போல் ஆவார்கள்.

□□ மிகவும் ருசி அதிகம் உள்ள ஒரு ஆகாரத்தை தான் மட்டும் தனியாக உண்ணுதல் கூடாது. குழப்பமான விஷயங்களைத் தனியாக ஆலோசனை செய்தல் கூடாது. உள்ளூரில் உள்ள ஆலயங்களில் விசேஷங்களிலும், தேரோட்டம் நடைபெறும் தினத்தன்றும் தனது வீட்டில் திருமணம் போன்ற சுபகாரியங்களைச் செய்வதால் விசேஷ உற்சவங்கள் நடக்கும் சமயத்திலும், திருவிழாக் காலங்களிலும், தேரோட்டம் நடைபெறும் தினத்தன்றும் தனது வீட்டில் திருமணம் போன்ற சுபகாரியங்களைச் செய்வதால் விசேஷ பலன் கிடையாது. அந்நாட்களில் சாஸ்திரம் அறிந்தவர்கள் ஒதுங்கி பகவத் கைங்கரியத்தில் மனதைச் செலுத்துவார்கள்.

□□ எல்லோரும் கூட்டமாக நன்கு தூங்கிக் கொண்டு இருக்கும்போது தான் மட்டும் விழித்துக் கொண்டு இருத்தல் கூடாது. (காவல்காரனுக்கு இது பொருந்தாது) எல்லோரும் பந்தியில் சாப்பிட்டுக் கொண்டு இருக்கும் பொழுது தான் மட்டும் முதலில் எழுந்து செல்லுதல் கூடாது. எல்லோரும் ஒரு விசேஷ சமயத்தில் விருந் துண்ணும் பொழுது தான் மட்டும் பட்டினி இருத்தல் கூடாது.

□□ எந்த அரசனுக்கு தன் சத்துருவை அடக்க தைரியமும் துணிவும் இல்லையோ, எந்த தேவ பிராமணன் வசதியிருந்தும் தீர்த்த யாத்திரை செய்ய வில்லையோ, எவன் அக்கினியில் செய்யும் ஹோமத்தின் பூரண ஆகுதியை குறை கூறுகிறானோ, அவர்கள் விளக்கு வைத்துக் கொண்டு கிணற்றில் விழுபவர்கள் ஆவார்கள்.

□□ மகாலட்சுமிதேவி குணமுள்ளவனிடத்திலும் தங்குவதில்லை. குணமில்லாதவிடத்திலும் தங்குவ

தில்லை. எவனுக்கு யோகம் வரவேண்டியிருக்கிறதோ அங்கு தங்குகிறார்கள். பணத்திற்கும் குணத்திற்கும் சம்பந்தமேயில்லை என்பது எவ்வளவு உண்மையோ அதேபோல் படிப்புக்கும் சம்பாத்தியத்திற்கும் சம்பந்தமே யில்லை.

□□ பிரதிஷ்டை செய்த கோவில்களை வணங்குவதை விட, உயர்நிலைக் கோவில்கள் என்று சமாதியுடன் கூடிய கோவில்களில் உள்ள தெய்வங்களுக்கு பலன் தரும் சக்தி அதிகம்.

□□ யார் என்ன சொன்னாலும், கோபமில்லாமலும் தைரியத்தை இழக்காமலும் எவன் பொறுமையுடன் இருக்கிறானோ அவன் சமர்த்தனாவான். இப்படிப் பட்டவனுக்கு தெய்வ உதவி நினைத்த சமயம் கிடைக்கும்.

□□ பசுவை வீணாகக் கொல்பவன் அப்பசுவுக்கு எத்தனை ரோமங்கள் இருக்கிறதோ அத்தனை ஜென் மங்கள் பசுவாகப் பிறந்து பிறரால் கொல்லப்படுவான். பசுவைக் காப்பாற்றி பேணுவதினால் கிடைக்கும் புண்ணியத்தின் தன்மைக்கு அளவேயில்லை.

□□ சந்நியாசி, மருத்துவன், சோதிடன், குரு, கர்ப்பிணி, நோயாளி ஆகிய இவர்களுக்கு ஆபத்துக் காலத்தில் செய்யும் உதவியால் வரும் புண்ணியம் உயர்ந்தது. தன் வீடு தேடி எந்தக் காரியமாக சுமங்கலி வந்தாலும், அவளை வரவேற்று உபசரித்து அன்னமளிக்க வேண்டியது. இன்றேல் தண்ணீராவது அருந்தக் கொடுக்க வேண்டும். செல்லும் பொழுது மஞ்சள், குங்குமம், புஷ்பம் கொடுத்து அனுப்ப வேண்டும். இதனால்

கொடுப்பவர்களுக்கு மாங்கல்ய பலமும், பெறுபவர்களுக்கு ஐஸ்வரிய பலமும் உண்டாகிறது.

□□ நல்ல சிநேகிதத்திற்கு குலம், ஜாதி இவைகள் குறுக்கே நிற்காது. கெட்ட குலத்தில் பிறந்தவனானாலும் தர்மத்தை அனுசரித்து நியாயத்தை அறிந்து சாதுக்களுக்கும், மருத்துவர்களுக்கும், மாதா, பிதா, பெரியோர்களுக்கும் மரியாதை கொடுத்து எவன் ஆதரிக்கிறானோ அவன் நற்குலத்தில் பிறந்தவனை விட நூறு மடங்கு சிறந்தவன் ஆவான்.

□□ பிறரிடம் சென்று தனது வயிறு வளர்க்க யாசிப்பது தவறு என்றாலும், தெய்வபக்தி அதிகரிக்கவும், ஆஸ்திகம் பெருகவும், தெய்வப் பிரார்த்தனை பெருகவும், தெய்வப் பிரார்த்தனையை நிறைவேற்றவும், கோவில் கட்டவும், வித்தைக் கற்றுக் கொள்ளவும் யாகாதி புண்ணிய காரியம் செய்யவும் யாசிப்பது தவறு இல்லை.

□□ கஜ பூஜை, கோ பூஜை, சுமங்கலி பூஜை, கலச பூஜை செய்பவனும், படிப்புக்கு உதவி செய்பவனும் ஏழைப் பெண்ணின் திருமணத்திற்கு உதவுபவனும் அனாதைப் பிரேதத்தை எவர் உதவியும் இன்றி தானே செலவு செய்து அடக்கம் செய்பவனும், அசுவ மேத யாகப் பலனை அடைகிறார்கள்.

□□ எந்த வீட்டில் சாப்பாட்டு ருசிக்கு துணையாக ஊறுகாய் இருக்கிறதோ அந்த வீட்டில் தரித்திரம் இருக்காது.

□□ இடர் வந்த காலத்தில்தான் சிநேகிதர், பந்துக்கள் முதலியவர்களுடைய அன்பைத் திட்டமாக அளந்தறியலாம். நமக்கு வரும் இடர்தான், சிநேகிதனையும் உறவின்

முறையினையும் அளக்கும் அளவுகோல். ஆதலால் அக்கேட்டிலும் ஒரு பயன் உள்ளது.

□□ எப்போது உன் திட்டங்கள் வெற்றி பெறுகின்றனவோ, அப்போது இறைவன் உனக்கு அனுமதியளித்து விட்டான் என்று பொருளாகும். இதைக் குறித்துதான்-

''ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும் - ஒன்றே
நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்''

என்று முன்னோர் கூறியுள்ளனர். துன்பங்கள் வந்தே தீருமென்றும், அவை இறைவனின் சோதனைகள் என்றும், அவற்றுக்காகக் கலங்குவதும், கணணீர் சிந்துவதும் முட்டாள்தனமென்றும், உன்னை உணரவைத்து, துன்பத்திலும் ஒரு நிம்மதியைக் கொடுக்கவே அவர்கள் இதை எழுதி வைத்தார்கள்.

□□ ஒருவனை எந்த வார்த்தை சொல்லி நீ திட்டுகிறாயோ, அதே வார்த்தையால் எப்போதாவது ஒருமுறை நீ திட்டப்படுவாய் என்பதை நினைவில் வைத்துக்கொள்.

□□ ஒரு கிரஹஸ்தன் தன் அண்டை வீட்டாருடன் சண்டை போடாமல் இருப்பதே புத்திசாலித்தனம் ஆகும். அதேபோல் தன் இன பந்துக்களையும் அனுசரித்துச் செல்ல வேண்டும். இவர்களைப் பகைத்தவர்களுக்கு நிம்மதி எப்பொழுதும் இருக்காது என்பதோடு மெத்தையில் படுத்தாலும் தூக்கம் வராது. சாப்பிட்டாலும் சீரணம் ஆகாது.

□□ அடிக்கடி புண்ணிய தர்ம காரியங்களைச் செய்யும்போது புத்தி வளரும். புத்தி வளரும்போது புண்ணியத்தைத் தவிர பாபத்தைச் செய்ய மனம் வராது. மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் மனதை அடக்கி, கோபத்தைக் குறைத்து தெய்வ நம்பிக்கையுடன் தானதர்ம புண்ணியங்களைச் செய்துவர வேண்டும்.

□□ ஸ்திரீகள், அரசர்கள், பாம்புகள், தான் கற்ற வேததர்ம சாஸ்திரம், சத்ருக்கள், பணக்காரர்கள், சுகபோகம், ஆயுள் இவைகளை ஒருவன் அடிக்கடி கவனித்து வரவேண்டும். அப்பொழுதுதான் வரக்கூடிய தீங்கிலிருந்து பாதுகாத்துக் கொள்ள முடியும்.

□□ ஒருவன் பல காலம் பாபம் செய்தவனாக இருந்தும் திடீரென்று மனம் மாறி நல்ல காரியத்தையும் புண்ணிய காரியத்தையும் செய்யும்போது பலர் பயன் பெறவும், தர்ம சிந்தனை வளரவும், ஆஸ்திகம் வளர்ச்சி அடையவும் வழி பிறக்கிறது. இதன் காரணமாக அவனது பாபம் அவனை விட்டு போகிறது. பாபத்தினால் ஏற்பட்ட கஷ்டம் புண்ணியத்தால் ஏற்பட்ட மகிழ்ச்சியினால் அடிபட்டுப் போகிறது.

□□ ஒருவனுக்கு கஷ்ட நஷ்டமும், தரித்திரமும், ஆபத்தும், உடல் பீடையும் வந்தும்கூட தெய்வத்தை நிந்தனை செய்யாமல் வணங்குபவன், பசியுடன் இருக்கும்போது அதைத் தாங்குபவன், கோபமாக ஒருவன் பேசிய போதிலும் அதைக் கண்டு மனம் கலங்காமல் புன் சிரிப்பு கொள்பவன் சத்துருக்களை ஜெயித்து விடுவான். இப்படிப்பட்டவன் மகாத்மாவுக்கு சமமானவன்.

□□ காலங்களை நிர்ணயிக்கின்றவனும் வாழ்க்கையின் கதியையே உருவாக்குகின்றவனுமான பரம்பொருள் உன் யாக்கைக்கும் பொறுப்பேற்றுக் கொள்ளுகிறான்; ஆத்மாவுக்கும் பொறுப்பேற்றுக் கொள்கிறான்.

□□ ஒருவன் நல்ல வழியில் சம்பாதித்த பணம் தன்னைவிட்டுப் போவதற்கு முக்கிய காரணங்கள் இரண்டு என்பதை அறிவாளிகள் உணரவேண்டும். அதில் ஒரு காரணம் நல்லவனுக்குக் கொடுக்காமல் இருப்பதும், மற்றொன்று அயோக்கியனுக்கு கொடுப்பதும் ஆகும்.

□□ ஜனனத்துக்கு முன்பும், மரணத்துக்குப் பின்பும் நாம் எங்கிருந்தோம், எங்கு போகிறோம் என்று தெரியும் வரை நமக்கு அப்பாற்பட்டது ஒன்று இருக்கிறது. இடைப்பட்ட வாழ்க்கையை அது நடத்துகிறது என்பதைத் தெரிந்து கொள்.

□□ ஆணவத்தின் வெற்றி ஆரவாரங்களையும், அவற்றின் வீழ்ச்சியையும், புராணங்களிலும் இதிகாசங் களிலும் படியுங்கள். கீதையில் கண்ணன் சொல்லும் ஸ்வதர்மங்களில் அடக்கமும் ஒன்று என்பதை அறியுங்கள். குருட்டுத்தனமாக ஏதேனும் வெற்றியோ, பதவியோ கிடைத்துவிட்டால், அதை வைத்துக்கொண்டு ஞானிகளையும் பெரியவர்களையும் அவமதிக்காதீர்கள். அடங்கி வாழ்ந்தால் ஆயுட்காலம் முழுதும் ஓங்கி வாழலாம்.

□□ நல்ல நட்புக்கு என்னென்ன இலக்கணங்கள் உண்டோ அவை எல்லாம் கூடி வாய்க்கப் பெற்ற ஒருவன் நண்பனாக மட்டுமின்றிச் சகோதரனாகவும் ஆகிவிடு கிறான். நண்பர்கள் தனக்கு உதவி செய்தார்கள்

என்பதற்காகத் தன் சொந்த சகோதரர்களையே விரோதித்துக்கொண்டு செஞ்சோற்றுக் கடன் கழித்த ஒருவன் மகாபாரதத்தில். அவனே கர்ணன்!

□□ புலிகளும் வனவிலங்குகளும் இல்லாத காடு கிடையாது. காடு இல்லாமல் இவைகள் இருக்க முடியாது. வனவிலங்குகளால் காடு காக்கப்படுகிறது. இதேபோல் தான் திருடன் இல்லாத ஊர் இல்லை. அதே திருடன் இருப்பதால்தான் காவல்காரனுக்கு வேலை கிடைக்கிறது. இதன் அடிப்படையில் தர்மம் வளர வேண்டுமானால், தர்ம சிந்தனையைத் தூண்டுபவர்கள் வளரவேண்டும்.

□□ மரங்களும் செடிகளும் அசுத்தமான இடங்களில் வளர்ந்தாலும் அதில் விளையும் காய், கனிகளை உண்பது தோஷம் ஆகாது.

□□ சகல காரியங்களும் - இன்பத்திற்கும், துன்பத்திற்கும் - நன்மைக்கும், தீமைக்கும் - இருட்டுக்கும், வெளிச்சத்திற்கும் - பாவத்திற்கும், புண்ணியத்திற்கும் - அன்புக்கும், வெறுப்புக்கும் - மனமே காரணம். மனதின் அலைகளே உடம்பைச் செலுத்துகின்றன.

□□ சாப்பிடும்போது வாயில் மயிர் அகப்படுவது முன் கூட்டியே வரும் கவலையை உணர்த்துவதாகும். அப்படி சந்தர்ப்பம் வந்தால் அதை உமிழ்ந்து விட்டு ஒரு நெல் சாப்பிட்டு விட்டால் எந்தக் கவலையும் வராது. வந்தாலும் சிக்கல் இருக்காது.

□□ ஈரத்துணியுடனும், துண்டுடனும், சாப்பிடுவது கூடாது. தெருக்கதவை சாத்தாமலும், சந்திரனின்

நிழலிலும், கொள்ளிக் கட்டையின் வெளிச்சத்திலும், நடுநிசியிலும், பிரதோஷ காலத்திலும், இருட்டிலும், திறந்த மாடியிலும் சாப்பிடுவதைத் தவிர்க்க வேண்டும். ஆனால் பௌர்ணமியன்று நிலா சாப்பாடு தனியாக சாப்பிடாமல் பலருடன் கூடி சாப்பிடலாம்.

□□ அதர்மத்தாலும் அநியாயத்தாலும் சம்பாதித்த பொருளை தான தர்மம் செய்து அந்த தோஷத்தை மறைத்து விடலாம் என்று எண்ணாதே! அந்த தோஷங்கள் மறையாததோடு, அதிலிருந்து புது தோஷங்கள் உருவாகும் என்பதை கருத்தில் கொள்ள வேண்டும்.

□□ சோகத்தினால் மனிதனின் மனம், குணம் மாறுகின்றன. சக்தி குறைகிறது. மூளை பாதிக்கப்படு கிறது. அதோடு உடல் வியாதியும் தேடி வருகிறது மனித நலனுக்கு ஊறு செய்யும் சோகத்தை வெறுக்க வேண்டும். சதா சிந்தனை செய்வதும், மனக்கோட்டை கட்டுவதும் புத்தி பேதலிக்க வழி செய்துவிடும். சஞ்சலப்படுவதாலும் கவலைப்படுவதாலும் நினைத்த பொருள் கிடைத்து விடாது. சரீரம்தான் மெலிகிறது. ரத்த ஓட்டம் குறைகிறது. மனிதனின் கவலை அதிகமாகும் போது சத்துருக்கள் சந்தோஷப்படுகிறார்கள். அதனால் மனித கஷ்டத்திற்கு காரணமான கவலையை விட்டுவிட வேண்டும்.

□□ நியாயமும் மன்னிப்பும் கடவுளின் கட்டளைப்படி நடக்கக் காத்துக் கொண்டிருக்கின்றன. இரக்கமும் அன்பும் கடவுளிடத்தில் எப்போதும் இருக்கின்றன. அவற்றால் தான் அயோக்கியர்களும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவற்றால்தான் கடவுள் பெருமை உள்ளவரென்று நம்மால் அறிய முடிகின்றது.

□□ ஓ மனிதனே! அறிவுக்கு இடம் கொடு. அதன் துணையுடன் ஆராய்ச்சி செய். நீ ஆராய்ச்சி செய்யாமல் எந்த வேலையையும் செய்யத் தொடங்காதே! அறிவைத் துணை கொண்டு செய்யப்படும் வேலையினால் குற்றம் உண்டாகாது. அறிவு கடவுளால் தரப்பட்டது. அது உண்மையும் பாதுகாப்பும் உள்ள வழியிலேயே எல்லோரையும் அழைத்துச் செல்லும்.

□□ குழந்தையானது பூமியில் ஜனனமான உடன் நெய், தேன் இவற்றில் சொர்ணத்தைத் தேய்த்து அக்குழந்தையின் நாவில் குலதெய்வத்தின் பெயரை வேண்டிக் கொண்டே மூன்று முறை தடவ வேண்டும். அதன் பின்பே தொப்புள் கொடி அறுக்க வேண்டும். நோய் நொடி இன்றி நீண்ட ஆயுளுடன் இருக்க இதுவே வழியாகும்.

□□ பிரேதத்தின் பின் போகுதல், நகத்தை வெட்டுதல், மலை ஏறுதல், சமுத்திரத்தில் குளித்தல், வீடு கட்டுதல், தூரதேச யாத்திரை செய்தல், வீட்டில் விவாஹம் செய்தல், சிரார்த்த வீட்டில் புசித்தல் ஆகிய இவ்வெட்டு காரியங் களையும் கர்ப்பிணியுடன் இருக்கும் கணவன் நீக்க வேண்டும். அதே சமயம் கணவன், கர்ப்பிணியாக இருக்கும் மனைவியை எந்த விதத்திலும் துன்புறுத்தவோ அசிங்கமான வார்த்தை கூறவோ கூடாது. அப்பொழுது தான் ஆரோக்கியமான குழந்தை சுகப் பிரசவமாகும்.

□□ கர்வமுள்ளவர்களும், தற்பெருமைக்காரர்களும் தங்களைப் பிறர் புகழ்வதை அப்படியே ஏற்றுக் கொண்டு மகிழ்ச்சி அடைவார்கள். அதற்கு ஈடாக தங்களைப் புகழ்கின்றவர்கள் நாளடைவில் தங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கெடுத்து விடுவார்கள் என்பதைத் தற்பெருமைக்காரன் அறிய மாட்டான்.

□□ உணவை பூஜித்து உண்டால், தைரியமும் பலமும் ஏற்படுகின்றன. நிந்தித்தால் இவ்விரண்டும் அழிகின்றன. எச்சில் பட்ட உணவை ஒருவருக்கும் கொடுக்கக் கூடாது. உண்ணும் பொழுது பாதியில் எழுந்தால் பின் உண்ண லாகாது. வயிற்றை அரைப்பங்கு உணவாலும், கால் பங்கை ஜலத்தாலும் நிரப்பி, மீதி கால் பங்கை காற்று செல்வதற்கு வழிவகுக்க வேண்டியது. ஐம்பது வயதுக்கு மேல் இரவில் பால், பழம் மட்டும் சாப்பிட வேண்டியது. இதனால் பிணியின்றி - ஆயுள் விருத்தியடையும்.

□□ பெண்களுக்கு விவாகத்தை உபநயனமாகவும், பர்த்தாவுக்குப் பணிவிடை செய்வதை வேகமாகவும், வீட்டைக் காப்பாற்றுவதை தர்மமாகவும் கூறப்பட் டுள்ளது. கணவனே பெண்களுக்கு முதல் தெய்வமாக கூறியிருப்பதால் கணவன் எவ்வளவு மூர்க்கம் உள்ளவ னாக இருந்தாலும் அவனே தெய்வம் ஆவான்.

□□ காலையில் சூரிய உதயம் ஆகும்வரை நின்று கொண்டும் மாலையில் சூரியன் அஸ்தமித்து நட்சத் திரங்கள் தெரியும் வரையில் உட்கார்ந்து கொண்டும் ஜெபம் செய்ய வேண்டியது. காலையில் கிழக்குப் பார்த்தும், மாலையில் மேற்குப் பார்த்தும் ஜெபிக்க வேண்டும்.

□□ மான் தோலில் அமர்ந்து ஜெபித்தால் ஞானம் விருத்தியாகும். புலித்தோலில் உட்கார்ந்து ஜெபித்தால் மோட்ச சித்தியாகும். பெண் யானைத் தோலில் இருந்து ஜெபித்தால் வியாதி நீங்கும். ரத்தினகம்பளத்தில் இருந்து ஜெபித்தால் கஷ்டம் நீங்கும். தர்ப்பையினாலான ஆசனத்திலிருந்து ஜெபித்தால் மனக்குறை நீங்கும்.

மரத்தினாலான ஆசனத்தில் இருந்து ஜெபித்தால் தேகத்திற்கு பலம் கொடுக்கும். பலாமர பலகை ஆசனத்திலிருந்து ஜெபித்தால் சுகம் தரும். இந்த ஆசனங்களை உபயோகிப்பவர்கள் சுயநலத்திற்கு ஜெபிப்பதை விட பொதுநலத்திற்கு ஜெபிக்கும்போது பல மடங்கு பலன் கிடைக்கிறது.

□□ நேர்மையுடன் நல்ல வழியிலே உழைப்பதனால் உண்டாகும் முன்னேற்றம் ஆலமரத்தைப் போல வளர்ந்து பயன் தரும். வான வெளியிலே பறந்து செல்லும் வலிமை மிகுந்த கழுகு சூரியனுடைய ஒளியைக் கண்கூசாமல் பார்ப்பதைப் போல், நேர்மையுடன் கூடிய உழைப்பினால் முன்னேற்றமடைகின்றவனால் தன்னுடைய பெருமையாகிய ஒளியை கூச்சமில்லாமல் பார்க்க முடியும்.

□□ ஒருவன் சகல சுகபோகங்களையும் அடைந்து அனுபவிக்கிறான். ஒருவன் அதையே அற்பமாக எண்ணுகிறான். அனுபவிப்பவனைவிட அற்பமாக எண்ணுகின்றவன் உண்மையில் உயர்ந்தவனாவான். அவன் பொது மக்களால் போற்றப்படுபவன் ஆவான்.

□□ பல்லக்கில் வருகிறவன், யானை மீது வருகிறவன், 90 வயதுக்கு மேற்பட்டவன், வியாதியஸ்தன், தலைச் சுமையுடன் இருப்பவன், பெண்கள், அனுஷ்டானம் தவறாமல் செய்யும் பிராமணன், அரசன், திருமண மாப்பிள்ளை ஆகியவர் எதிரில் வந்தால், ஒதுங்கியிருந்து, பின்னுக்கு வந்தால் முன்னுக்கு செல்ல வழி விட்டும் கொடுக்க வேண்டியது.

□□ தங்கள் சிக்கனத் தன்மையில் கருத்துள்ளவர்கள் பிறருடைய உயர்வு தாழ்வுகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்க மாட்டார்கள். எவரைப் பற்றியும் எதைப் பற்றியும் அதிகமாகப் பேசுகிறவர்கள் துன்பத்தைத் தேடிக் கொள்ளுகிறார்கள். ஆகவே அளவுடன் பேசவேண்டியதை மட்டும் பேசுவது நல்லது.

□□ மனிதனே! உன் அறிவு அதிகமானதென்று நீ கர்வப்படலாமா? உனக்குள்ள திறமையே போதுமானதென்று நீ நினைக்கலாமா? உன்னிடத்தில் உள்ள தவறு என்னவென்று நினைத்துப் பார்ப்பதே நீ அறிவுள்ளவன் என்பதற்கு முதல் அடையாளமாகும். மற்றவர்கள் உன்னை 'முட்டாள்' என்று நினைக்காமல் இருக்க வேண்டுமானால், உன்னை நீயே அறிவாளி என்று சொல்லிக் கொள்ளாதே! சாதாரண உடையை உடுத்தி இருந்தாலும் அழகுள்ள பெண் அழகுள்ளவளாகவே இருப்பாள். அதேபோன்று அறிவுள்ளவன் பொறுமை உள்ளவனாய் இருந்தால் அவன் சிறந்து விளங்குவான்.

□□ காலையில் நின்று கொண்டு செய்யும் ஜெபத்தால் இரவில் செய்த பாவமும், மாலையில் உட்கார்ந்து கொண்டு செய்யும் ஜெபத்தால் பகலில் செய்த பாவமும் தொலைகிறது. இதை அனுபவத்தில் உணர முடியும்.

□□ ஒருவன் பல துன்பங்களை அனுபவித்திருந்தாலும் பிறரைப் பார்த்து துன்பம் வரும்படி பேசக்கூடாது. மரத்தினால் செய்த யானை தோலினால் செய்த மிருகம், அட்டையினால் செய்த சக்தி, காகிதத்தினால் செய்த புஷ்பம், தர்மம் செய்யாதவன், வேதம் ஓதாத பிராமணன் ஆகிய இவ்வைந்தும் உபயோகமில்லாத சரக்குகளாகும்.

□□ மாதர்களின் நடை, உடை, பாவனை, அலங்காரம் இவைகளே மனிதர்களின் சிருங்கார சேஷ்டைக்கு காரணமாக இருப்பதால் இவைகளில் மாதர்கள் சாதாரணமாக இருக்க வேண்டியது. மூடனாக இருப்பவன் கூட காமத்திற்கு விதிவிலக்கல்ல என்று சாஸ்திரம் கூறியிருப்பதால் பெண்கள் காரணமின்றி தன்னை அழகுபடுத்திக் கொள்ளக் கூடாது.

□□ மந்திரிக்குப் பதவியின் பேரிலும், யுவாவுக்குக் காமத்தின் பேரிலும், கற்றவனுக்கு வித்தையின் பேரிலும், சன்யாசிகளுக்கு முக்தியின் பேரிலும், லோபிக்கு பணத்தின் பேரிலும் சிந்தை. ஆனால் தரித்திரனுக்கு கணக்கிலடங்கா சிந்தை. பூர்வ புண்ணிய பலனே தரித்திரனாகப் பிறக்கிறான். தரித்திரனாக இருப்பவன் பொறாமை இல்லாமல் இருக்க வேண்டும்.

□□ ஒருவனது வாகனம், படுக்கை, ஆசனம், கிணறு, தோட்டம், வீடு ஆகியவைகளை உடையவன் அனுமதியின்றி அனுபவிப்பவன் அவனது பாவத்தில் நான்கில் ஒரு பங்கை வாங்கிக் கொள்கிறான்.

□□ இன்பத்தைப் போலவே துன்பமும் மனித வாழ்க்கைக்குத் தேவைதான். துன்பப்படும்போது தான் நல்ல மனிதன் நன்றாகக் கற்றுக்கொள்கிறான். ஆகையால் துன்பத்தையும் இன்பத்தையும் அனுபவிக்கப் பிறந்தவனே! கேள்! எவ்வளவு சீக்கிரமாக முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக நீ இந்த உலகத்தில் உனக்காக ஒதுக்கப்பட்டுள்ள துன்பத்தை ஏற்றுக் கொள்ள உன்னை ஆயத்தப்படுத்திக் கொள். இதனால் திடீரென்று வரக் கூடிய துன்பத்தை உன்னால் தாங்கிக் கொள்ள முடியும்.

□□ ஒரு பெண்ணுக்குத் திருமணம் முடிந்ததும் தன் பொறுப்பு கழிந்து விட்டது என்று தந்தையும் சகோதரனும் எண்ணக்கூடாது. திருமணத்திற்குப் பின்பு அவள் வீட்டிற்கு வரும்போது தன்னை உபசரிக்கவில்லை என்று அப்பெண் ஏங்கினால் அவள் தகப்பனின் குடும்பம் சூனியம் வைத்தது போல் சிதைந்துவிடும் என்று தர்ம சாஸ்திரம் கூறியிருப்பதால், தன்னால் முடிந்த உதவி அப்பெண்ணுக்குச் செய்ய வேண்டும்.

□□ உறுதியுள்ள மனத்தில் கவலை நுழையாது. குன்றின் மீது கட்டப்பட்ட கோட்டையைப் போலக் கலங்காத மனத்தினையுடையவன் எப்போதுமே நிமிர்ந்து நிற்பான். கலங்காமல், கவலைப்படாமல், நேர்வழியில் செய்யவேண்டிய செயலைச் செய்கின்றவன் காலின் கீழ் அம்பைப் போலச் செல்வம் பாய்ந்து வந்து விழும்.

□□ தர்மத்தின் சாரம் கேட்பீராக: கேட்டு மனதில் இருத்திக் கொள்வீராக - தனக்கு எது கெடுதலோ அதைப் பிறருக்குச் செய்யாதீர்.

□□ நவவித பக்திக்கு அஸ்திவாரம் நாம சங்கீர்த்தனம். உள் ஒளியை உணர்ந்தாலன்றி மக்களின் மயக்க இருள் ஒழியாது.

□□ வாழ் நாள் வீழ் நாளாகாமல் உன்னை நீ யாரென்று சிந்தனை செய்து அறிவாயாக. சாந்தமே தெய்வீக காந்தம்.

□□ தனக்குள் சோதித்துத் தன்னைக் கண்டவனே காட்சியுற்றவன். நீசர்களிடத்தில் கருணை வந்தால் ஈஸ்வரப்பற்று உண்டாகும். ஜீவனின் சிற்றறிவு பரத்துடன் சேர்ந்தால் பேரறிவு என்பதாகும்.

□□ ஆகாயத்திலிருந்து பெய்த மழை கடலில் சேர்வது போல நாம் பகவத் நாமாவை ஸ்மரிப்பதனால் நமது மனம் அவர் உருவத்தின் மூலம் பகவானைச் சாரும். அவரது அனுக்ரஹம் கிடைக்கும். தெய்வீகத் தன்மையில் ஈடுபடாமலேயே நமது வாழ்நாளை வீணாகக் கழிக்கக் கூடாது.

□□ இன்பம் உண்மையில் இன்பமன்று. துன்பம் உண்மையில் ஒரு துன்பமன்று. ஆரம்பத்தில் இன்பம் கொடுத்து பிறகு துன்பமாக பரிணாமத்தை அடைகிறது ஒருவகை அனுபவம். முதலில் துன்பத்தைக் கொடுத்து பிறகு இன்பமாக மாறுவது மற்றொரு வகை. உலகப் பொருள்களை இன்பமாகவும் துன்பமாகவும் கற்பனை செய்து கொண்டு ஜீவன் உழல்கிறான். கற்பனைகளைக் கழற்றி அவைகளின் நாம ரூபங்களை நீக்கி சச்சிதானந்த தன்மையைக் கண்டு ஆத்மாவுடன் ஐக்கியப்படுத்திய நிலையில் துன்ப அனுபவமே இன்ப அனுபவமாக மாறுகிறது. துன்பத்தையும் இன்பமாக மாற்றி வேதாந்தம் அளிக்கும் ஒரு அற்புத ரசாயனம் இது.

□□ பெற்றோர்கள் தமது குழந்தையைக் கவனிப்பது போலத்தான் சர்வேசுவரன் கருணாமூர்த்தியாக இருந்து கொண்டு நம்மை கவனித்துக் கொண்டிருக்கிறார். நம்மை அவ்விதம் பரிபாலிக்கும் ஈசுவரனை நாம் மறக்கலாமா?

□□ பிறருக்குத் துன்பம் கொடுத்து அதில் இன்பம் காண்பது மிருக இயல்பு படைத்தவர்களின் குணம். பிறருக்குத் துன்பம் கொடுக்காமல் தனக்கு இன்பம் தேடுவது நாகரீகப் பண்பாடு. பிறருக்கும் இன்பம் கொடுத்து தானும் இன்பமடைவது தெய்வீகம். பிறருடைய துன்பங்களை நீக்கி அவர்களுக்கு இன்பம் தருவது ஆன்மீகம்.

□□ மனிதன் ஒருவன் தான் நல்ல பிறவி எடுத்தும் எல்லாம் ஸ்வாஹா என்ற முறையில் தன்னலப்பற்றுடன் இருக்கிறான். அப்படி இருப்பது சரியல்ல. தன்னலமற்று பிறருக்கு உதவி செய்வதிலேயே ஈடுபட வேண்டும். அப்படிச் செய்தால்தான் அருள் கிடைக்கும். உலக வாழ்க்கையே சிறந்தது போல் தோன்றினாலும் பரமானந் தத்தையே பெரும் பாக்கியமான ஆத்ம ஞானத்தையே லட்சியமாக வைத்துக் கொண்டு அதைச் சார்ந்து வாழ வேண்டும். பிறப்பு இறப்பு இல்லாத நிலை வேண்டுமே என்ற தீவிர எண்ணம் உண்டாக வேண்டும்.

□□ வீட்டில் இருந்து கொண்டு காயத்ரீ அல்லது இஷ்ட மந்திர ஜெபம் செய்தால் ஒரு பங்குதான் பலன். நதிதீரத்தில் ஜெபித்தால் இரு பங்கு பலன். ஹோமம் செய்யுமிடத்தில் ஜெபித்தால் ஆயிரம் மடங்கு பலன். தேவாலயங்களிலும் க்ஷேத்திரங்களிலும் இருந்து ஜெபித்தால் நூறாயிரம் மடங்கு பலன் ஏற்படும். இஷ்டமந்திர ஜெபத்தை விட காயத்ரீ ஜெபம் சிறந்தது. தன் ஆசை காரணமாக எல்லா ஜெபத்தையும் கொஞ்சம் கொஞ்சம் செய்வதைவிட ஒரு குறிப்பிட்ட காயத்ரீ மகா மந்திரத்தை பல லட்சம் செய்வது நற்பலனை வாரி வழங்கும்.

□□ அரசன், குரு, ஆசார்யசுவாமிகள், மகான்கள் ஆகியோர் எந்த ஒரு மனிதனை சன்மானம் தந்து கௌரவிக்கிறார்களோ, அவன் புனிதத் தன்மை அடைந்து விடுவதோடு அவனது கெட்ட பழக்கங்கள் உடனடியாக நீங்க, நல்ல குணம் தானாக வந்து விடுகிறது. பயமும், பக்தியும் வர வர நல்ல குணம் தேடி வரும்.

□□ கடனை அடைப்பதைக் காட்டிலும், தான தர்மங்களில் அதிக மகிழ்ச்சி அடையும் சிலருடைய தாராளம் புத்திசாலித்தனமில்லை.

□□ மனிதர்கள் நம்மை நிந்திக்கும் பொழுது, நாம் நம்மையே சந்தேகித்துக் கொள்ள வேண்டும். அவர்கள் நம்மைப் புகழும் பொழுது, நாம் அவர்களைச் சந்தேகிக்க வேண்டும்.

□□ வண்டியில் பயணம் செய்யும் பொழுது உன் மூட்டையை ஏன் நீ சுமக்கிறாய்? வண்டியே உன்னையும், உன் மூட்டை உன் தலையிலிருந்தாலும் கீழே இருந்தாலும், அதையும் சுமக்கிறது. மூட்டையை உன் தலையில் சுமப்பதால், வண்டியின் பாரத்தை உன்னால் குறைக்க முடியாது. மூட்டையை சுமப்பதால் வீணாக உன்னையே சிரமத்திற்கு உள்ளாக்கிக் கொள்கிறாய். உலக வாழ்வின் ஓட்டத்தில் உன் தலையீடு இத்தகையதே!

□□ யௌவனம், தனச்சேர்க்கை, பிரபுவாக இருத்தல், விவேகமற்றிருத்தல் இவைகளில் ஒன்றே ஒருவன் சீர்கெடக் காரணமாகிறது. நான்கும் சேர்ந்திருந்தால் என்னவாகும்?

□□ ராஜ்யத்தை நான் விரும்பவில்லை. ஸ்வர்க்கத் தையோ பிறப்பின்மையையோ வேண்டவில்லை. துன்பப்படும் பிராணிகளின் துக்கத்தைப் போக்கவே விரும்புகிறேன் என்கிறான் பிரஹலாதன்.

□□ தேகங்கள் அழியக்கூடியவை. செல்வங்கள் நிலைபெற்றிருக்கக் கூடியவையல்ல. எமன் எப்போதும் அருகிலேயே இருக்கிறான். ஆகையால் தர்மத்தை சேமித்துக் கொள்ளுங்கள்.

□□ சத்தியத்தைப் பேசுவாயாக. பிரியத்தைக் கூறுவாயாக. சத்தியமாயும் பிரியமற்றதாயும்இருப்பதைக் கூறாதிருப்பாயாக. சத்தியமற்றதாயும் பிரியமுள்ளதாயும் இருப்பதையும் கூறாதிருப்பாயாக. இதுவே சனாதன தர்மம்.

□□ முயற்சியால் காரியங்கள் வெற்றி பெறுகின்றன மனக்கோட்டையினால் அல்ல. தூங்கிக் கொண்டிருக்கும் சிம்மத்தின் வாயில் மிருகங்கள் நுழைவதில்லை.

□□ அளவுக்கு மிஞ்சிய எதையும் நீக்குவாயாக. அளவுக்கு மிஞ்சி தானம் செய்ததால் பலிச் சக்கரவர்த்தி கட்டுண்டான். அளவுக்கு மிஞ்சிய கர்வம் படைத்ததால் துரியோதனன் மாண்டான். அளவுக்கு மிஞ்சி காம வசப்பட்டதால் இராவணன் இறந்தான்.

□□ ஆசை என்பது ஆச்சரியமான ஒரு விலங்கு! அதனால் கட்டப்பட்டவர்கள் எப்போதும் தாவிக் கொண்டேயிருக்கிறார்கள். அதனால் கட்டப்படாதவர்கள் ஓரிடத்திலேயே அசைவற்று இருக்கிறார்கள்.

□□ உன்னைவிட அதிருஷ்டம் குறைந்தவனிடம் உன் இன்பத்தைப் பற்றிப் பேச வேண்டாம். அது அவனை துன்புறுத்துவதற்கு ஒப்பாகும்.

□□ ஒருவன் தான் நடந்து செல்லும் பொருட்டு வழிநெடுக எல்லா இடத்தையும் துணி முதலியவற்றால் மறைப்பதைவிட, தன் கால்களைச் செருப்பினால் காத்தல் சிறந்ததாகும். சிற்றறிவால் செருக்குறுவதைவிட அறிவின்றி இருப்பதே மேல்.

□□ திருப்தி உள்ளவன் பரிசுத்தம் உள்ளவனாய் இருப்பான். பரிசுத்தமாகிய போட்டிப் பந்தயத்தில் கடவுள் மனிதர்களை ஓடச் செய்கிறான். அதனுடைய முடிவு இன்பமாகும். பரிசுத்த வாழ்க்கையில் வெற்றி பெறுகிறவன் கடவுளை அடைந்து அந்த இன்பத்தை வெகுமதியாக ஏற்றுக் கொள்ளுகிறான்.

□□ ஓ மனிதனே! கடவுளால்தான் நீ இந்த உலகத்திற்கு அனுப்பப்பட்டிருக்கின்றாய் என்பதை மறவாதே, அவர் உன் எண்ணத்தை அறிவார். உன்னுடைய தற்பெருமை காரணமாக நீ விரும்புவதெல்லாம் அவருக்குத் தெரியும். உன் மீதுள்ள இரக்கத்தினால்தான் அடிக்கடி நீ விரும்புவதை அவர் கொடுக்க மறுக்கின்றார். உனக்குத் தேவையானது எது என்று உன்னைப் பார்க்கிலும் அவருக்குத்தான் நன்றாகத் தெரியும்.

□□ ஜெபம் செய்யும் முறைகளையும் வேதத்தையும் சாஸ்திரத்தையும் எவனொருவன் குருவுக்குத் தெரியாமல் ஓதுகிறானோ அவன் வேதத்தைத் திருடிய பாவத்திற்கு ஆளாகிறான். அதனால் அவைகளை குரு முகமாக அறிய வேண்டியது அல்லது குருவை மானசீகமாக நினைத்து குரு தட்சணை அனுப்பிவிட்டு அவர் ஆலோசனை பெற்று அதன்படி செய்ய வேண்டும்.

□□ குடியில்லாத தனி வீட்டில் தனியாக ஒரு பொழுதும் படுக்கக்கூடாது. வேத தர்ம சாஸ்திரம் அறிந்தவன் தூங்கும் சமயம் ஒருவனைத் தட்டி எழுப்பக் கூடாது. மாதவிடாயான ஸ்திரீயுடன் சம்பாஷணை செய்தல் கூடாது. வித்வத்சபை, யாகசாலை, ஹோமம் செய்யும் இடம் ஆகிய இடங்களுக்கு வரவேற்பில்லாமல் போகக் கூடாது.

□□ சிங்கத்தின் பார்வையினால் யானை மயக்க மடைகிறது. அறிவாளியை அச்சம் கெடுத்து விடுகின்றது.

□□ நீ எதைச் செய்தாலும், நீ செய்யும் செயல் நியாயத்துடன் சிறப்படைய வேண்டும். அப்போது நீ எவருக்கும் அஞ்ச வேண்டிய அவசியமே ஏற்படாது. மன உறுதியுடன் எந்தச் செயலையும் செய்யத் தொடங்க வேண்டும். கலக்கத்துடன் தொடங்கப்பெறும் செயல் நிறைவேறுவது இல்லை.

□□ திருமணமான கிரஹஸ்தன் தன் மனைவியுடன் ஒரே பாத்திரத்தில் உணவு உட்கொள்ளலாகாது. மனைவி உணவு அருந்தும்போதும், இருமும் பொழுதும், கொட்டாவி விடும் பொழுதும், தன் இஷ்டப்படி உட்கார்ந்து கொண்டு இருக்கும் பொழுதும், கணவன் பார்க்கக் கூடாது. மற்றும் தன் மனைவி மை இட்டுக் கொள்ளும் பொழுதும், எண்ணெய் தேய்த்துக் கொள்ளும் பொழுதும், குளிக்கும் பொழுதும், மேல் வஸ்திரமில்லாத போதும், பிரசவிக்கும் போதும் கணவன் பக்கத்தில் போகக் கூடாது.

□□ அசிங்கமான வார்த்தைகள் பேசியவனும் உண்ணாத பொருளை உட்கொண்டவனும், மனம் திருந்தி விஷ்ணு ஆலயம் சென்று துளசி தீர்த்தம் உட்கொண்டாலும், துளசி மாலையை சூடினாலும், துளசியால் அர்ச்சனை செய்தாலும் புனிதமடைகிறான்.

□□ தன் சுயபுத்தியை உபயோகிக்காமல் பிறர் கூறுவதை எல்லாம் சரி என்று முன்யோசனை இல்லாமல் எவன் ஈடுபடுகிறானோ அவனது வாழ்க்கை குடத்தினுள் இட்ட விளக்கைப் போன்று பிரகாசம் இல்லாமல் இருக்கும்.

□□ நன்மை தீமைகளை ஆராயும் உன்னுடைய அறிவு முன்னால் செல்ல வேண்டும். அதைத் தொடர்ந்தே உன் செயல் பின்னால் செல்ல வேண்டும். உன்னுடைய சூழ்நிலை, உன்னுடைய செல்வாக்கு, உன்னுடைய செல்வம் ஆகிய இவைகள் எவ்வளவு தூரம் செல்லக்கூடுமோ அவ்வளவு தூரம் உன் நம்பிக்கையும் செல்ல வேண்டும். அவ்வாறு செல்லும் நம்பிக்கை நிறைவேறிய பிறகுதான் நீ மேற்கொண்டு அதே வழியில் செல்லும் நம்பிக்கையை நிறைவேற்ற முயற்சிக்க வேண்டும்.

□□ ஒரு மனிதன் முதலில் தன்னையும், தன் திறமையையும், பலத்தையும் அறிந்து வைத்துக் கொள்ளாமல் எந்த விஷயத்திலும் தலையிடுதல் கூடாது. எதிரியானவன் தன்னைவிட பலசாலியாகவே இருப்பான் என்ற எண்ணம் கொண்டு தான் செயல்பட வேண்டும். எந்த ஒருவன் இவனது விஷயத்தில் எப்படி நடந்து கொள்கிறானோ அதே போல் இவனும் அவன் விஷயத்தில் நடந்து கொள்ள வேண்டும். கபடமாக நடந்து கொள்பவனிடம் கபடமாகவே நடந்துகொள்ள வேண்டும். நேர்மையாக நடப்பவனிடம் நேர்மையாக நடக்க வேண்டும். பொதுவில் ஒருவனது குணம், பலம், வசதி இவைகளை அறியாமல் சிநேகம் கூட செய்ய முயலக்கூடாது.

□□ பிறரால் நமக்குச் செய்யப்படும் வருந்தத்தக்க செயல்களைப் பொறுத்துக் கொள்கிறவர்கள் அறிவுள்ள வர்களாக மதிக்கப்படுவார்கள். நமக்குத் தீமை செய்கிறவர்களை நாம் மறந்துவிட வேண்டும். அப்படி மறந்து விடுவதனால் நமது மனம் துன்பம் அடையாமல்

இருக்கும். கோபங்கொண்டவன் மனத்தில் நன்மை தீமைகளை அறியக்கூடிய சக்தி மறைந்துவிடும். அதனால் கோபத்திற்கு இடம் கொடுத்து உங்கள் அறிவை பாழ்படுத்திக் கொள்ளாதீர்கள்.

□□ கற்பும் அடக்கமும் ஒரு நல்ல மனைவிக்கு அழகைத் தருகின்றன. அத்தகைய மனைவியின் தோற்றம் ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களைப் பார்க்கிலும் சிறந்ததாகும். அவளுடைய நல்ல எண்ணத்தை எதிர்த்து நிற்க எவராலும் முடியாது.

□□ அதிக வியாதியாலும், கர்மரோகத்தினாலும் கஷ்டப்படுகிறவர்களுக்கு எவ்வளவு பணம் இருந்தும் பயன் இல்லை. அதனால் அவர்கள் சந்தோஷப்படுவதும் இல்லை. நல்ல விஷயங்களின் உண்மைகளை இவர்கள் அறிய முடிவதில்லை. சரீர சுகத்தால் நிம்மதியையும், பொருள்கள் வருவதால் சந்தோஷத்தையும் இவர்களால் அடையமுடிவதில்லை. எனவே ஒருவனுக்கு பணம் இருந்தால் மட்டும் போதாது. ஆரோக்கியமான உடல் இருக்க வேண்டும். இதற்கு தர்மங்களையும் தானங் களையும் செய்து புண்யம் சம்பாதிக்க வேண்டும்.

□□ தானும் சாப்பிடாமல் பிறருக்கும் கொடுக்காமல் கஞ்சனாக இருப்பவனிடமும், நிந்தனை செய்கிறவனி டமும், அறிவற்ற மூடனிடமும், நாஸ்திகனிடமும், காட்டில் வசிப்பவனிடமும். சூதாடுகிறவனிடமும், குல ஆசாரத்தை விட்டவனிடமும் பலரிடம் கெட்ட பெயர் பெற்வனிடமும், நன்றி மறந்தவனிடமும், பசுவதை செய்பவனிடமும் ஒருவன் - எவ்வளவு கஷ்டம் வந்த போதிலும் - யோசித்து காரியத்தை சாதித்துக் கொள்ளக் கூடாது.

□□ நல்ல மனைவியின் அன்பு நிறைந்த வார்த்தைகளினாலும், ஆலோசனையினாலும் அவள் கணவனுடைய துன்பம் குறைகின்றது.

□□ மகனே! பெண்கள் பெரும்பாலும் நுட்பமான தன்மை உள்ளவர்கள். ஆகவே, எப்போதும் நீ உன் மனைவியிடம் கடுமையாக நடந்து கொள்ளாதே! நீ அவ்வாறு நடந்து கொள்ள நேர்ந்தால், அப்போது நீ உன்னிடத்தில் உள்ள குறைகளை நினைத்துப் பார். உடனே உன்னுடைய வேகம் அடங்கிடும்.

□□ உன் தாய் தந்தையர்களின் தள்ளாத காலத்தி லாவது, நீ அவர்களின் மனம் மகிழும்படி நடந்து கொள்ள வேண்டும். அவர்கள் கவலை இல்லாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டியது உன் கடமையாகும். நீ எப்படி உன் தாய் தந்தையர்களிடம் நடந்து கொள் கிறாயோ, அப்படித்தான் உன்னுடைய மக்களும் உன்னிடத்தில் நடந்து கொள்ளுவார்கள். இது சத்தியம்! மற்றும் நீ என்னதான் தானம் தர்மம் செய்து வந்தாலும், தாய் தந்தையர்களை நல்லபடியாக வைத்துக் கொள்ளாவிட்டால் உனக்கு நரகமே கிடைக்கும்.

□□ ஒரு மாணவனுக்கு கல்வியை நன்கு சொல்லிக் கொடுக்காத ஆசார்யனையும், வேத மந்திரங்களை நன்கு கூறாத புரோகிதரையும், குடி மக்களை பாதுகாக்க யோக்கியதை இல்லாத அரசனையும், பசுக்களை மந்தை மேய விட்டுவிட்டு தெருவில் திரியும் மாடு மேய்ப் பவனையும், திருமணம் ஆகியும் மனைவியை கவனிக் காமல் காட்டில் திரியும் சம்சாரியையும், கணவனிடத்தில் கடுகடுவென்றும் படபடவென்றும் பிரியமில்லாமல்

பேசும் மனைவியையும், ஓட்டைப் பானையை மூலையில் போட்டு வைப்பது போல் ஒதுக்கி வைத்துவிடலாம். அதனால் பாவம் இல்லை.

□□ தனக்கும் தனது குடிமக்களுக்கும் ஆபத்து வரும் சமயம் குடிகளைக் காக்கும் அரசன், தன் சமயோசித புத்தியைக் கொண்டு எதிரியை வெல்லவோ அல்லது அவனைக் கொல்லவோ அல்லது அவனை சிறையிலிடவோ செய்யலாம். இதனால் தோஷமில்லை; இதுவே ராஜ நீதி ஆகும்.

□□ ஆயுளையும், சுகத்தையும் விரும்புகிறவர்கள் தயிர் சாதம் அல்லது பால் சாதம் சாப்பிட வேண்டும். இப்படிச் சாப்பிட்ட பிறகு தணணீர் அருந்துதல் கூடாது.

□□ மிகவும் அதிக உயரமுள்ளவள், உடலில் அதிக ரோமம் உள்ளவள், பூனைக் கண்ணுள்ளவள், அசிங்கமான வார்த்தை பேசுகிறவள், தெய்வ பக்தியில்லாதவள், அர்த்த ராத்திரியில் அலங்காரம் செய்து கொள்பவள், காரணமில்லாமல் சிரிப்பவள், செம்பட்டை ரோமம் உள்ளவள், நதி, நட்சத்திரம், விருக்ஷம், மலை, பக்ஷி இவைகளின் பெயர்களை உடையவள், பயங்கரமான உச்சரிப்பு தரும் பெயருள்ளவள் ஆகிய இருபத்தி மூன்று வகைத் தன்மையுள்ள கன்னிகைகளை மணம் புரிதல் கூடாது. சாஸ்திரத்தில் இவ்வாறு கூறியுள்ளபடியால், மேற்படி தன்மைகளுடன் பிறந்த கன்னிகைகளுக்கு எப்படி திருமணமாகும் என்ற ஐயம் எழலாம். அவர்களுக்கு இதே தன்மையுடன் கூடிய ஆடவரை திருமணம் செய்து கொடுக்கலாம்.

□□ காயத்ரீயை அல்லது இஷ்ட மந்திர ஜெபத்தை குறைந்தது 27 தடவைகளாவது ஜெபிக்க வேண்டும். எந்த

மந்திரத்தையும் வாயால் உச்சரித்து ஜெபிப்பது ஒரு பங்கு பலன். சப்தமில்லாமல் ஜெபிப்பது பத்து பங்கு பலன். உதடுகளை மட்டும் அசைத்து ஜெபிப்பது நூறு பங்கு பலன். மனதிற்குள்ளேயே ஜெபிப்பது ஆயிரம் பங்கு பலன். புத்தி உள்ளவர்கள் மனதிற்குள் ஜெபிக்க வேண்டும்.

□□ ஒருவன் குளித்துக் கொண்டிருக்கும் போது அவனுக்கு பின்புறம் குளிக்கக் கூடாது; முன்புறமும் குளிக்கக் கூடாது. பக்கவாட்டில் நின்றே குளிக்க வேண்டும். விரோதம் இருக்கும் வீட்டிற்குச் சென்றாலும், பிரேத ஊர்வலத்திற்குச் சென்றாலும், துக்கம் விசாரிக்கும்போது கண்ணீர் சிந்தினாலும், ஒரு பெரிய கும்பலில் அகப்பட்டுக் கொண்டு திக்கு முக்காடி வெளியே வந்த பிறகும், குளித்துவிட்டு வீட்டிற்குள் செல்ல வேண்டும்.

□□ தான் ஆராய்ந்து அறிந்த அளவுக்கு ஓர் அறிவாளி உலகத்தில் மேன்மை அடையாவிட்டாலும், அவன் செய்த ஆராய்ச்சி, அந்த ஆராய்ச்சியின் அளவுக்கு, அவன் மனத்தில் இன்பத்தைப் பெருக்கி இருக்கும் என்பது உண்மையல்லவா! அதனால் அறிவுள்ளவன் தவறாமல் ஆராய்ச்சியில் இறங்க வேண்டும்.

□□ உழைப்பு! உழைப்பு! உழைப்பு! உலகத்தில் எல்லா நன்மைகளையும் தரக்கூடியது உழைப்புத்தான். கடவுள் அவரவர் தகுதிக்கேற்ப ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வழியைக் காட்டி இருக்கின்றார். அவ்வழியில் தளராமல் உழைப்பவரே முன்னேற்றமடைவார். அறிவாளர்கள் ஒப்புக் கொள்ளக்கூடிய வழிகளில் எது ஒருவருக்கு ஏற்றதாகத் தோன்றுகிறதோ அதுவே அவர் உழைப்

பதற்காகக் கடவுள் அவருக்குக் காட்டிய வழியாகும். ஆகையால், ஓ மனிதனே! நீ உழைப்பதற்குப் பின் வாங்காதே! உழைப்பே தெய்வமாகும், உழைப்பே அன்பு நிறைந்த மனைவியும் மக்களும் ஆகும். உழைப்பினால் பல நன்மைகள் உண்டாகின்றன. உழைப்பாளியை எல்லோரும் தேடி வருவார்கள். அவன் எப்பொழுதும் தனித்து நிற்க மாட்டான். கவலையும் கலக்கமும் அவனுக்கு உண்டாகா. ஆகையால் மனிதனே! நீ எப்பொழுதும் உழைத்துக் கொண்டே இரு. நீ கடவுளின் அன்புக் குழந்தையாக ஆவாய்.

□□ கருணை உள்ளவன் தன்னைப் போலவே மற்றவர்களும் இன்பத்துடன் வாழவேண்டுமென்று எண்ணுவான். அந்த எண்ணம் எப்போதும் அவன் மனத்தில் வளர்ந்து கொண்டே இருக்கும். கடவுளும் அவனுக்கு உதவியாக இருப்பார்.

□□ உன்னை நம்புகிறவர்களுக்கு நீ நம்பத் தகுதியுள்ளவனாய் இரு. உன்னை நம்புகிறவர்களை நீ ஒரு போதும் ஏமாற்ற நினையாதே. நீ எப்போதும் எல்லோரும் நம்பத் தகுந்தவனாய் இரு. திருடுவதைப் பார்க்கிலும் நம்பினவர்களை ஏமாற்றுவது கொடுமையாகும். அப்பேர்ப்பட்டவர்களைக் கடவுள் மன்னிக்கவே மாட்டார்.

□□ நீ வாங்கிய கடனை வாங்கியபடியே கொடுத்து விட வேண்டும். உன்னுடைய வாக்குறுதியை நம்பித்தான் உனக்கு கடன் கொடுக்கப்பட்டிருக்கிற தென்பதை மறவாதே! ஆகவே வாங்கிய கடனைக் கொடுக்காமல் இருப்பது அற்பத்தனமும் நியாயமற்ற தன்மையும் ஆகும்.

கடனை அடைக்காமல் நீ இறந்து போனால், உனக்கு நரகம் கிடைப்பதோடு, உன்னைத் துடிக்கத் துடிக்க வைத்து உன் சதையை அறுத்து எடுப்பார்கள் என்பதை மறவாதே!

□□ அறங்கிடந்த நெஞ்சமும் அருளொழுகு கண்ணும் உள்ளவர் தம்மைச் சூழ்ந்துள்ளவர்களிடம் அமைதியையும் நல்லெண்ணத்தையும் வளரச் செய்கின்றார். அதனால் அவர் பெயர் எங்கெங்கும் மரியாதையுடன் பேசப்படுகிறது. அது மாத்திரமா? இறை அவருக்கு எடுத்த காரியத்தில் உறுதுணையாக இருப்பான்.

□□ ஓ மனிதனே! உதவி செய்தவனுடைய செல்வத்தைப் பார்த்துப் பொறாமைப்படாதே! ஒருவன் செய்த உதவியை மறைக்க முயலாதே! உதவி பெறுவதைப் பார்க்கிலும் உதவி அளிப்பதே பெருமையாகும். தாராள குணம் உண்மையான புகழுக்கு அடிப்படையாகும். தான் பெற்ற உதவியைப் பற்றி இழித்துப் பேசுகிறவன் கடவுளின் முன்னாலும் மனிதர்களின் மத்தியிலும் இழிந்தவனாகக் கருதப்படுவான். மற்றும் செய்நன்றி மறந்தவனுக்கு கடவுளிடமிருந்து மன்னிப்பே கிடையாது.

□□ ஒருவன் தான் அறிந்தும், அறியாமலும் செய்த பாவங்களைப் போக்க இஷ்டமந்திர ஜெபம் அல்லது காயத்ரீ ஜெபம் முடிந்த மட்டும் செய்ய வேண்டியது. ஜெபம் செய்யும்போது வேறு சிந்தனைகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது.

□□ தன் குரு, புத்திரன், பணிவிடை செய்பவன், தர்மத்தை அறிந்தவன், ஆபத்து காலத்தில் மதியூகமுள்ள மந்திரி போல் ஆலோசனை கூறுபவன், சொல்லித்

தருவதை கிரகிக்கும் ஆற்றலுள்ளவன், தான தர்மம், ஹோமம், யாகம் செய்பவன், பொய் சொல்லாதவன், உடன் பிறந்த சகோதரன் ஆகிய இவர்கள் வேதங்களைச் சொல்லவும் சாஸ்திரங்களைக் கற்றுக் கொள்ளவும் தகுதி உடையவர்கள். இதில் ஜாதி, மதம் குறுக்கே நிற்காது.

☐☐ சகோதரர்களில் ஒருவன் தாழ்ந்திருந்தால் மற்றவர்கள் அவனைக் கைதூக்கி விடவேண்டும். சகோதரி ஒருத்தி தாழ்ந்திருந்தால் அவளுக்குச் சகோதரர்கள் உதவி செய்ய வேண்டியது கடமையாகும். பெண்ணாகிய அவளைத் தவிக்கவிடுவது ஆண்களுக்கு முக்கியமாக சகோதரனுக்கு அழகாகுமா? ஆகவே அவளை அலட்சியம் செய்து விடாதீர்கள். அது தர்மமாகாது.

☐☐ ஓ மனிதர்களே! நல்ல வழியில் நடந்து ஆண்டவனை வணங்குங்கள். தீய வழியில் நடந்து அவர் கோபத்திற்கு ஆளாகி நீங்களும் அழிந்து உலகத்தையும் அழிக்காதீர்கள். அவரால் படைக்கப்பட்ட எல்லாவற்றின் மீதும் அதிகாரம் செலுத்த அவருக்கு உரிமை இருக்கின்றது. அவர் நம்மால் உணர முடியாத வகையில் எல்லா உயிர்களையும் நடத்திச் செல்லுகின்றார்.

☐☐ எல்லாப் பொருள்களும் வளர்கின்றன. வளருகின்ற பொருள்களில் பல கடவுளுடைய அற்புதங்களை அறிவதுமில்லை. பார்ப்பதுமில்லை. கடவுளுடைய அற்புதங்களை அறிகின்றவர்களும், பார்க்கின்றவர்களும் கடவுளைப் புகழாமல் இருக்க முடியாது. ஓ மனிதனே! கடவுளால் படைக்கப்பட்ட பொருளைப் பார். இடியும் மின்னலும், கடலும் மலையும்,

சூரியனும் சந்திரனும், நட்சத்திரங்களும் பிறவும் அவர் பெருமையை நமக்கு விளக்குகின்றன. ஆகவே, இவைகளையெல்லாம் படைத்த கடவுளின் பெருமையை நினைத்து நீ வணங்குவாயாக!

□□ எல்லா அச்சத்தைப் பார்க்கிலும் தீமை செய்வதற்கு உண்டாகக்கூடிய அச்சம் முகத்தின் அழகைக் கெடுத்து விடும். ஆகவே குற்றம் பொருந்திய செயலை எவரும் செய்யக்கூடாது. குற்றம் உள்ள செயலின் அடியில் அச்சம் ஒளிந்து கொண்டிருக்கிறது. உண்மையாக வீரமுள்ள மனிதன் எவ்விதத் தீய செயல்களுக்கும் இடம் கொடுக்க மாட்டான்.

□□ மரணத்துடன் எல்லாம் தீர்ந்துவிடுகிறது என்று எண்ணாதே! நீ செய்த பாவச் செயல்கள் மறைக்கப்படும் என்றும் நினைக்காதே! எந்தக் கடவுள் உலகத்தைப் படைத்தாரோ, எந்தக் கடவுள் எல்லாவற்றையும் அறிவாரோ அந்தக் கடவுள் உன்னையும் உன் பாவச் செயல்களையும் அவசியம் அறிவார், அதற்கேற்ற தண்டனையும் கொடுப்பார். அதனால் எப்பொழுதும் நல்ல காரியங்களைச் செய்து - புண்ணியம் செய்து - கடவுளின் அன்புக்குப் பாத்திரமாகு.

□□ எதையும் பெரிதாக எண்ணி மயங்கி விடாதே! ஆண்டவன் உனக்குக் கொடுத்துள்ள அறிவை நம்பு. அந்த அறிவை நம்பி அந்த அறிவாகிய கடவுளை வணங்கு. உலகத்தில் எது நிலையானதோ அதை அடைய நீ முயற்சி செய்வாயாக!

□□ சோம்பல், அறியாமை ஆகிய இவை இரண்டும் வாழ்க்கையின் கொடிய விரோதிகள். அலைகள் ஒன்றை

ஒன்று தள்ளிக் கொண்டு வந்து தரையை மோதுவதைப் போலவே இவை இரண்டும் வாழ்க்கையை மோதிக் கொண்டே இருக்கும். இவைகள் காரணமாகத் துன்பம் வேறு ஒன்றின் பின் ஒன்றாகத் தோன்றிக் கொண்டே இருக்கும். இவை போலவே அஞ்ச வேண்டாமைக்கு அஞ்சுவதனாலும் தீமை உண்டாகும். உனக்கு கடவுள் அறிவு கொடுத்து இருப்பது எதற்காகத் தெரியுமா? இவை போன்று தீமை பயக்கும் குணங்களிலிருந்து நீ விலகவேண்டும்.

□□ தன் அண்ணன் மனைவி, தாய்க்கு அடுத்த இடத்தில் இருப்பதால், அவர்களை தினசரி வணங்க வேண்டியது. அத்தை, சித்தி, பெரியம்மா இவர்கள் ஊருக்குச் சென்று வந்தபொழுது மட்டும் வணங்கினால் போதுமானது.

□□ திருமணம் ஆகாத பிரம்மசாரி தேன், மாமிசம், சந்தனம், புஷ்பம், வாசனைத் திரவியங்கள், கூத்து, சூதாட்டம், குடி, வம்பளத்தல், பழிசொல்லுதல், பொய் சொல்லுதல், அகாலத்தில் வீதியில் திரிதல், மாதர்களை விருப்பத்தோடு பார்த்தல், அவர்களைப் பின் தொடரல் ஆகியவைகளை நீக்க வேண்டியது. இன்றேல் அவன் அடுத்த ஜென்மத்தில் ஆண்மையில்லாதவனாகப் பிறப்பான்.

□□ தாயிடம் பக்தி செலுத்துவதால் இம்மையில் சுகத்தையும், தந்தையிடம் பக்தி செலுத்துவதால் மறுமையில் சுவர்க்கத்தையும், குருவிடம் பக்தி செலுத்துவதால் முடிவில் பிரம்மலோக பதவியையும் அடைகிறார்கள்.

□□ நடந்து செல்லும் பொழுது, பசு, தெய்வ சப்பரம், நெய்க்குடம், அரசமரம், வில்வமரம், நெல்லி மரம், அரசுடன் சேர்ந்த வேம்பு ஆகியவைகள் குறுக்கிட்டால், வலது பக்கமாக சுற்றி பிரதட்சணமாகப் போக வேண்டியது சாஸ்திரம்.

□□ கன்றுக்குட்டியின் கயிற்றை தாண்டக் கூடாது. மழை பெய்யும் பொழுது ஓடக்கூடாது. தண்ணீரில் தன் உருவத்தைப் பார்த்தல் கூடாது! நிலைக்கட்டையில் அமரக்கூடாது.

□□ காலந்தவறிப் படிப்பவன், அஜீரணமிருந்தும் அளவுக்கு மீறி உண்பவன், அழகான பெண்களைக் கண்டதும் பல்லைக் காட்டுகிறவன், வியாதியஸ்தனாக இருந்தும் ஸ்திரீ போகம் செய்கிறவன் ஆகிய இந் நால்வரும் விஷத்தை அறிந்தே உண்பவர்களாகின் றார்கள். அதனால் அவர்களுக்குக் கெடுதலே விளையும், வாழ்க்கையில் துன்பம் மிகும்.

□□ தாய் மறைந்தால் வாய்க்கு ருசி நஷ்டம். பிதா மறைந்தால் வித்தை நஷ்டம், சகோதரன் மறைந்தால் தன் உடலில்·பாதி நஷ்டம், தன் மனைவி மறைந்தால் சகலமும் நஷ்டம். இந்த உணர்வுடன் வாழ்ந்தால் வாழ்க்கையில் மேன்மையுறுவான்.

□□ கிரஹஸ்தனாக இருப்பவன் ஒரு வஸ்திரத்துடன் உணவு உட்கொள்ளலாகாது. மற்றும் ஒரு கையைத் தரையில் ஊன்றிக் கொண்டும் சாப்பிடுதல் கூடாது. துணி உடுத்தாமல் குளிக்கக் கூடாது. மற்றும் சூரியனுக்கு எதிரில் உட்கார்ந்து மல ஜலம் கழிக்கக் கூடாது. இவையெல்லாம் பாவகாரியங்களாகும்.

□□ தற்பெருமையில் மிகவும் இழிவானது ஒன்று இருக்கிறது. பணமில்லாதவர்கள் பணக்காரர்களைப் போல் நடிப்பது, படிப்பில்லாதவர்கள் படித்தவர்களைப் போல் நடிப்பது, ஒன்றும் தெரியாதவர்கள் தெரிந்தவர் களைப் போலப் பேசுவது - இவைகளை அறிவுள்ளவர்கள் விரும்ப மாட்டார்கள். மயில் தோகையை விரித்து ஆடுவதற்கு ஈடாகுமா வான்கோழி தன் சிறகுகளை விரித்தாடுவது? தன் இயற்கைக்கு விரோதமாக நடக்கிறவன் தனக்கு இயற்கையாய் உள்ள சில நல்ல தன்மைகளையும் இழந்து விடுகிறான். மற்றும் இறைவனுடைய பார்வையும் இவன் மேல் படாது. அதனால் அவன் வாழ்க்கை முன்னேறாது.

□□ தான் ஆராதிக்கும் தேவதைகள், தான் பக்தி சிரத்தையுடன் வணங்கும் தெய்வங்கள், அதிதிகள், அகதிகள், வேலைக்காரர்கள், தாயார், தந்தை, பிதுர்க்கள், தன் ஆத்மா ஆகிய இவ்வொன்பது வகைக்கும் அன்னம் கொடுத்து திருப்தி செய்ய வேண்டியது. அப்படி திருப்தி செய்யாதவன் இருந்தும் இறந்தவனுக்கு ஒப்பாவான். இவற்றுள் அகதிகளை மட்டும் பொது நிதியிலிருந்து காப்பாற்ற வேண்டியது.

□□ மல, மூத்திரங்களை இரவு நேரத்தில் தெற்கு முகமாகவும், பகலில், காலை மாலையிலும் வடக்கு முகமாகவும் கழிக்க வேண்டும். எந்தக் காலத்திலும் கிழக்கு மேற்கு முகமாக உட்கார்ந்து மலஜலம் கழித்தல் கூடாது. இரவில் திசை தெரியாமல் இருந்தாலும், துஷ்டமிருக பயம், திருடர் பயம் இருந்தாலும் தன் இஷ்டப்படி மலஜலம் கழிக்கலாம்.

□□ நெருப்பை வாயினால் ஊதக்கூடாது. கை அல்லது ஓமக்குழலால் ஊதவேண்டும். அசுத்தமான வஸ்துவை நெருப்பில் போடக்கூடாது. துடிதுடிக்கும் புழுபூச்சி களை நெருப்பில் போட்டு பார்ப்பது பிரம்மஹத்தி தோஷமாகும்.

□□ சமுத்திரத்திற்கும் கப்பலுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறதோ அந்த சம்பந்தந்தான் ஞானிக்கும் உலகத்துக்கும் உண்டு. சமுத்திரத்தில் கப்பலிருக்கலாம். ஆனால் கப்பலில் சமுத்திரம் இருக்கக் கூடாது. கப்பலுக்குள் சமுத்திரம் வந்தால் உடனே அது முழுகிப்போகும். அது போல் ஞானி உலகத்தில் சஞ்சரிக்கலாம். உலகம் ஞானியிடம் இருக்கலாகாது. உலக ஆசைகள் ஞானிக்கு உண்டானால் அவன் அஞ்ஞானியாகிறான்.

□□ அக்கினியின் விதிப்படி செய்யப்பட்ட ஹோமம் சூரியனை அடைகின்றது. சூரியனிடமிருந்து மழையும், மழையிலிருந்து உணவு உற்பத்தியும், உணவு உற்பத்தி பெருக்கத்தால் பிரஜைகளுக்கு சுபிட்சமும் உண்டாகின்றன.

□□ திருமணம் ஆகாமல் துன்பப்படும் கன்னிகைகள், வீட்டில் துளசி கல்யாணம் செய்தாலும், துளசியால் விஷ்ணுவைத் துதித்தாலும், துளசியால் விஷ்ணுவைத் துதித்தாலும், துளசி பத்திரத்தை கோவிலுக்கு அர்ப்பணித்தாலும் விரைவில் திருமணமாகி கணவன் வீடு சென்று சுபிட்சமாக வாழ்வார்கள். துளசி இலை வாடினாலும் கங்கை நீர் போன்று புனிதமானது.

□□ அர்ச்சனை நாமாக்களை அர்த்த புஷ்டியோடு பாராயணம் செய்து முறைப்படி தீட்சை பெற்றவரே பூஜை

செய்ய தகுதி படைத்தவர் என்பதுடன் விபூதியை இடுப்பில் செருகி வைத்துக் கொள்ளவும் தகுதி படைத்தவராவார். அதனால் சிவாச்சாரியர்கள் தீட்சை பெறுவது அவசியம்.

□□ பக்தர்கள் அடிக்கடி கோயிலுக்குச் சென்றால்தான் கோயில் சுத்தமாக இருக்கும். அங்கு பணிபுரி கிறவர்களுக்கும் ஒரு பக்தி சிரத்தை ஏற்படும். இந்த பக்தியால் பகவான் காரியங்கள் தடையின்றி நடக்கும். அதனால் தவறாமல் கோயிலுக்குச் சென்று வாருங்கள்.

□□ ஆறு, நதி, குளம், சமுத்திரம் இவைகளில் கிழக்கு முகமாக நின்று முங்கிக் குளிக்க வேண்டும். அது சமயம் கங்கா, யமுனா, சரஸ்வதி, கோதாவரி, கிருஷ்ணா, சிந்து, நர்மதா, காவேரி, தாமிரபரணி என்று புனித நதிகளின் பெயரைச் சொல்லிக் கொண்டே குளித்தால் மேற்படி நதிகளில் சென்று குளித்த பலன் கிட்டும்.

□□ நல்ல காரியங்களைப் பற்றி பேசும் போதும் சுபகாரியம் முடிவு செய்யும் பேச்சில் ஈடுபட்டு இருக்கும் போதும், எள் அல்லது எண்ணெய் பற்றி பேசுதல் கூடாது. இதனால் சுபத் தடை ஏற்படும்.

□□ நீ பக்தனாக விரும்பினால், கிருஷ்ணன் எங்கே பிறந்தார்? அவர் என்ன செய்தார்? கீதையை எப்போது சொன்னார் என்று இவைகளைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. கீதையில் பக்தியும் ஆசையும் மட்டும் இருந்தால் போதும். வித்வான்கள் பதங்களையும் அர்த்தங்களையும் பற்றி விவாதம் செய்யட்டும். பக்தர்கள் பழத்தை உண்ணட்டும்.

□□ இந்திரிய நிக்கிரகம் செய்வது அவசியம் இந்திரிய சேஷ்டை உள்ளவர்கள் பக்தர்களாக இருப்பது இயலாது.

இந்திரியங்களை மனம்போனபடி விடாமல் புத்தியினிடம் ஸ்வாதீனப்படுத்தி அடக்கியாளவேண்டும். மனம் எப்போதும் பகவானையே தியானிக்க வேண்டும். முதலில் இவ்வாறு செய்வது சற்று கஷ்டமாயிருக்கும். பழக்கத்தினாலும் ஆசையின்மையினாலும் பகவானிடமே நம்முடைய மனதை வைப்பது சாத்தியமாகும்.

□□ இழிந்த அமைச்சரால் அரசனும், இழிந்த மருத்துவரால் நோயாளியும், இழிந்த அரசால் குடிமக்களும், இழிந்த அறிவால் அதை உடையானும் எப்பொழுதும் குறைவெய்துவார்கள். இழிந்த புதல்வனால் அவன் பிறந்த குலமும் இழிவெய்தும்.

□□ ஒருவனுக்கு பழியே நரகமாகும். அந்தப் பழியையன்றி மறுமை உலகத்தில் நரகம் என்பது ஒன்றில்லை. எவரோடும் கலகம் விளைக்கத் தக்க விளையாடல்களைச் செய்யக் கூடாது. ஒருவனை நோக்கி 'உன் மனைவி கற்பில்லாதவள்' என்று விளையாட்டாகவும் கூறக் கூடாது.

□□ பசு முதலியவற்றைத் தன்னைப் போல் ஓம்பவேண்டும். மனிதன் அறம் பொருள் ஈட்டத் தன்னையும், உண்டியமைக்கத் தாயையும், தன்னை நன்னெறியில் பயிற்ற ஆசிரியனையும் நியமனம் செய்ய வேண்டும்.

□□ ஒருவன், ஆற்றல் உடையவனாயினும் அவன் ஒருபொழுதும் மக்கள் வழங்கும் வழியில் தடைசெய்யக் கூடாது. நல்ல ஊர்தியானாலும் அதில் ஏறி அரசன் கடை வீதிக்குச் செல்லக்கூடாது.

□□ 'பிறர் தன்னைவிட சுகமாக வாழ்கிறார்கள்' என்ற எண்ணந்தான் பலரின் எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணமாக இருக்கிறது.

□□ சுமையைத் தாங்கி அலுக்காமல் உழைக்க வேண்டும். வெயிலையும் குளிரையும் பாராட்டக்கூடாது. எப்போதும் ஆனந்தமாக இருக்க வேண்டும். இவை மூன்றையும் கழுதையிடமிருந்து கற்றுக்கொள்.

□□ நட்பும் உடையக் கூடிய பொருளே! மற்ற உடையக் கூடிய அரிய பொருளை எப்படி கைக்கொள்ளுவோமோ, அத்தகைய கவனத்துடன் நட்பையும் கைக்கொள்ள வேண்டும்.

□□ நம்பிக்கையின்றிச் சந்தேகப்பட்டுக் கொண்டே யிருந்தால், மாலுமியில்லாத மரக்கலத்தைப் போல் கடலில் அலைந்து காற்றில் அடிபட்டு கெடுவோம். பிறர் செய்ய வேண்டுமென்று நினைப்பதை நீயே செய்.

□□ மனிதப் பிறவியின் உண்மையான பயன் என்னவென்றால் 'தான்' என்னும் சிறையிலிருந்து விடுதலை பெறுவதேயாகும்.

□□ ஒருவனுக்கு ஒன்றும் தெரியாது; தனக்கு ஒன்றும் தெரியாது என்பதுகூட அவனுக்குத் தெரியாது அவன் முட்டாள். அவனை விட்டுவிடு. ஒருவனுக்கு ஒன்றும் தெரியாது. தனக்கு ஒன்றும் தெரியாது என்பது மட்டும் அவனுக்குத் தெரியும். அவன் எளியவன். அவனுக்குக் கற்றுக் கொடு. ஒருவனுக்கு எல்லாம் தெரியும்; தனக்கு யாவும் தெரியும் என்பது மட்டும் அவனுக்குத் தெரியாது அவன் தூங்குகிறான். அவனை எழுப்பிவிடு. ஒருவனுக்கு எல்லாம் தெரியும். தனக்கு எல்லாம் தெரியும் என்பதும்

அவனுக்குத் தெரியும். அவன்தான் அறிவிற் சிறந்தவன். அவனைப் பின் தொடர்ந்து செல்.

□□ மனிதன் தன் உள்ளத்தில் வள்ளன்மையையும் வெளியில் ஈகையின்மையையும் மேற்கொண்டு உரிய காலத்தில் தகுதியான செலவைச் செய்தல் வேண்டும். உரியதல்லாத காலமும் தகுதியின்மையும் நேர்ந்தபோது செலவிடலாகாது.

□□ ஒரு காரியத்தை வெற்றிகரமாக நாம் நடத்தி முடிப்போம் என்ற நம்பிக்கை இருந்தால்தான் அதில் ஈடுபடவேண்டும். தான் முன் வைத்த காலை பின் வைக்கக் கூடாது என்ற வைராக்ய உணர்வு, தன்னம்பிக்கையும் உழைப்பும் நேர்மையும்தான் ஒருவனுக்கு வெற்றியைத் தேடித் தரும். ஒரு காரியத்தை வெற்றிகரமாக நடத்தி முடிக்காமல் வேறு வழியில்லை என்று நிலை ஏற்படும் போது சாம, பேத, தான, தண்டம் என்ற சதுர்வித உபாயங்களை பிரயோகிக்கத் தயங்கவே கூடாது.

□□ ஆலயத்தினுள் இரவு நேரத்தில் குளிப்பது கூடாது, என்றாலும் கங்கையில் மட்டும் எந்த நேரத்திலும் குளிக்கலாம். கங்கை நீரில் கால் பட்டவுடன் ஒருவன் ஏழு பிறவிகளில் செய்த பாபம் தொலைகிறது.

□□ குளித்த பின்பு ஈரத்துணியை தரையில் வைத்துக் பிழியவேண்டுமே தவிர, தண்ணீரில் வைத்து பிழியக் கூடாது. ஈரத் துணியை உதறக் கூடாது.

□□ கோவில் இல்லாத ஊரில் குடியிருப்பவன், அற்பர்களை வணங்குபவன், அதிக ஆசையால் மாமிசம் உண்பவன், கோபமுள்ள மனைவியை உடையவன்,

அதிகமான பெண்ணைப் பெற்றவன், பொருளிருந்தும் கஞ்சனைப் போலிருப்பவன் ஆகியோர்களுக்கு பூலோகமே நரகமாகும்.

□□ பேராசையானது அநுபோகத்தினால் அடங்குவது கிடையாது. அது அக்னியில் நெய் போல் வளரும். ஆகையால் பேராசையை அறவே மனதில் இருந்து ஒழிக்க வேண்டும். இன்றேல் அவ்வாசையினாலேயே அழித்து விடுவார் கடவுள்.

□□ 'துளசி பத்திரத்தை கையில் எடுத்துக் கொண்டு என் பக்தன் எங்கு சென்றாலும் நான் அவனைப் பின் தொடர்ந்து செல்வேன். இது எப்படி என்றால் பசுதன் கன்றைத் தொடர்ந்து செல்வது போலாகும்' என்று பகவான் கூறியுள்ளார். அதனால் ஒருவன் கையில் துளசி இருக்கும் வரை விஷ்ணுவின் துணை உண்டு.

□□ நீ செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் அஜாக் கிரதை, அறிவு காட்டும் வழியில் வெறுப்பு அடைந்ததில் அதிருப்தி, வஞ்சகம், சுயநலம் முதலியவற்றை அறவே அகற்றி அந்த அந்தக் காரியத்தை உன் வாழ்நாளில் கடைசிக் காரியமாகப் பாவித்துச் செய்தால் உனக்கு யாதொரு துன்பமும் வராது.

□□ கூடிய மட்டில் துன்பம் விளையாமல் தடுத்துக் கொள்வதும், தடுக்க முடியாத துன்பத்தைக் கூடிய மட்டில் பயன்படுத்திக் கொள்வதுமே அறிவு ஆகும். இன்பங்களைப் பெற முயல்வதிலும் இலட்சியங்களைப் பெற முயல்வதே நலம்.

□□ வெறுப்பைக் காட்டுவது அரக்கர் குணம். மன்னிப்பது மனித இயல்பு. அன்பு செலுத்துவது தெய்வத்தின் பண்பு.

□□ பிரார்த்தனை, கடவுளை அடையும் பாதி வழிவரை நம்மைக் கொண்டு செல்கிறது. மத உணர்வு நம்மை அவனது மாளிகையின் வாயில் வரை அழைத்துச் செல்லுகிறது, ஆனால் ஈகைதான் உள்ளே செல்லும் அனுமதியை அளிக்கிறது.

□□ இறைவனின் திருமலரடியும் கரங்களும் எங்கும் இருக்கின்றன. அவனுடைய தலையும் விழிகளும் வாயும் எல்லாத் திசைகளையும் நோக்கியிருக்கின்றன. அவனது செவி எங்கும் சாய்ந்திருக்கிறது. அவன் எங்கும் நிலைத்து, வியாபித்து நிற்கிறான். அதனால் நீயும் எப்போதும் கடவுள் உணர்வோடு இருப்பதே கடமையாகும்.

□□ பேசுவதில் பேராற்றல் பெற்றவன் மனிதன். ஆனால் அவனுடைய பேச்சில் அதிக பாகம் உபயோக மற்றது; முறையற்றது. மிருகங்களுக்குப் பேசும் ஆற்றல் குறைவு; ஆயினும் குறைவான அதுவே உபயோகமானது; சத்தியமானது. அதனால் ஓ, மனிதா! அறிவைப் பயன்படுத்து.

□□ நீ இந்த உலகத்திலிருந்து ஐந்து வருஷம் முன்பு போனால் என்ன? பின்பு போனால் என்ன? எந்தச் சக்தி உன்னை உண்டாக்கிற்றோ அந்தச் சக்தி உன்னைப் 'போ' என்கிறது. இதில் என்ன குற்றம்? நாடகத் தலைவன், நடிகனைப் 'போ' என்பதில் என்ன பிழை? 'ஐயோ! நாடகம் முழுவதும் ஆடவில்லையே!' என்பாய். நாடகம் முடியவில்லை என்பது உண்மை. ஆனால், முடியாத நாடகமே நாடகம். நாடகத் தலைவன் இட்ட முடிவே முடிவு. நாடகத்துக்காவது, நாடகத்தின் முடிவுக்காவது நீ

தனலவன் அல்லவே! ஆகையால் கலங்காமல் உடலை விட்டு நீங்குவாயாக! சாந்தி அடைவாய். தெய்வமே சரண்.

□□ தவறான ஆரம்பம் ஒரு போதும் சரியான முடிவைப் பெறுவதில்லை. வெற்றிக்காக உழைப்பவரைத் தேடியே வெற்றி வருகிறது. பேசாத வார்த்தைகள் எந்த விதமான தீமையும் செய்வதில்லை. முட்டாளைக் களிப்பிக்கச் சிறந்த வழி அவனை ஆமோதிப்பதே! முட்டாள் அலைகிறான்; அறிவாளி பிரயாணம் செய்கிறான்.

□□ கோபம் என்பது மனம் என்னும் விளக்கை அணைத்து விடும். அலையும் மனம் உடையவன், தன்னைத் தானே பிணைக்கும் சங்கிலியை உருவாக்கிக் கொள்கிறான். அலையும் மனத்தைக் கட்டுப்படுத்தியவன் உலகின் துயரத்திலிருந்து காக்கப்படுகிறான்.

□□ நல்லெண்ணம் என்பதே ஒரு சொத்து, ஏன், அது ஒன்றே சொத்து. அதை யாருடைய போட்டியும் புரிந்து கொள்ள முடியாது. அழிக்கவும் முடியாது. நம்மை நாம் வெல்லாதவரையில் அறம் எதுவும் இல்லை. உழைப்பு வேண்டாத செயல் எதுவும் மதிப்பதற்கு உரியதன்று.

□□ பெண்கள் மாதவிடாய் ஆன நான்கு நாட்கள் வரை கோவிலுக்குச் செல்லுதல் கூடாது. பெண்கள் கோவிலினுள் பஞ்சாங்க நமஸ்காரமும், ஆண்கள் அஷ்டாங்க நமஸ்காரமும் செய்தல் வேண்டும். தலை, கை, செவி, முகவாய்க் கட்டை, புஜங்கள் ஆகிய எட்டு உறுப்புகளும் பூமியில் படும்படி வணங்குவது அஷ்டாங்க நமஸ்காரம். தலை, கை, முழந்தாள் ஆகியவை பூமியில் படும்படி வணங்குவது பஞ்சாங்க நமஸ்காரம் ஆகும்.

□□ அயலான் ஒருவனுக்கு ஓர் உதவி செய்து விட்டால் ஒரு மனிதன் அதைத் தான் செய்த ஒரு புண்ணியம் என்று கொண்டு, தான் ஒரு வள்ளல் போல நடந்து கொண்டு விட்டதாக நினைத்துக் கொள்கிறான். மற்றொருவன் அவ்வளவு தூரம் போவதில்லை. ஆனால் உதவி பெற்றவனைத் தன் கடனாளியாகக் கருதுகிறான். தான் செய்த உபகாரத்தை அவன் மறப்பதேயில்லை. மூன்றாவ தொருவன் ஒரு விதத்தில் தான் செய்தது இன்னது என்று கூட அறியான். பழத்தைக் கொடுத்து விட்டு அதற்காக யாதொரு கைம்மாறும் வேண்டாத திராட்சைக் கொடி போன்றவன் அவன். கடவுளுக்குப் பிரியமானவன் இவனே!

□□ தீய செயல் குறித்துத் தெய்வத்தின் முன் நாணாமல் மனிதன் முன் நாணக் கற்றுக் கொள். அது விமோச னத்துக்கு வழி. உண்மை பெரிய தீவர்த்தி. அருகில் செல்லப் பயந்து கண்களை மூடிக் கொண்டே அதைக் கடந்து செல்கிறோம்.

□□ மந்திரத்தன்மை இல்லாத எழுத்தும் மருத்து வத்துக்குப் பயன்படாத வேரும், ஒன்றுக்கும் தகுதி யில்லாத மனிதனும் உலகில் இல்லை. ஆயினும் தகுதியுணர்ந்து இவற்றைப் பயன்படுத்துவோனே உலகில் அருமை. அதனால் மனிதன் எதற்கும் அறிவைப் பயன்படுத்த வேண்டும்.

□□ எதிர்பாராத காரணமாகவும், சந்தர்ப்ப சூழ்நிலை காரணமாகவும் தவறு என்று தெரியாத காரணமாகவும், கற்பை இழந்த பெண்கள் புண்ணிய நதிகளில் ஏதாவது ஒன்றில் பதினெட்டு முறை முங்கிக் குளித்தால் விபசார

தோஷத்திலிருந்து விடுபட்டு புனிதத் தன்மை அடையலாம்.

□□ எவன் ஒருவன் தன் வாக்கு நாணயத்தை காப்பாற்றுகிறானோ அவனைச் சுற்றி நல்லவர்கள் கூட்டமே எப்பொழுதும் இருக்கும். வாக்கு நாணயம் அதிகரிக்க மகா கணபதி, மகாலட்சுமி, சரஸ்வதி தேவிகளை தினசரி வணங்க வேண்டும்.

□□ பந்தயம் ஓடி வென்ற குதிரை 'இதோ என் சாமர்த்தியத்தைப் பார்' என்று சொல்வதில்லை. வேட்டையைப் பிடித்துவிட்ட நாய், 'என் வீரத்தைப் பார்' என்று கூறுவதில்லை. தேன் கூட்டி வைத்து விட்ட தேனீ, 'என் சக்தியைப் பார்' என்று பெருமை பேசிக் கொள்வதில்லை. அவற்றைப் போலவே, சால்புடைய ஒருவன் ஒரு நல்ல காரியம் செய்தவுடன் எல்லோரையும் அழைத்து, 'நான் செய்த காரியத்தைப் பாருங்கள்' என்று மார்பு தட்டிப் பேசமாட்டான். அப்படிப் பேசுவானாகில், கடவுளின் உதவியை அவன் இழந்து விடுவான்.

□□ பெண்களை பால்யத்தில் பிதா காப்பாற்றுவான். திருமணம் ஆனதும் கணவன் காப்பாற்றுவான். கணவனுக்குப் பின் குழந்தைகள் காப்பாற்றுவார்கள். அதனால் பெண்களுக்குச் சுதந்திரமாகச் செயல்படும் உரிமை கிடையாது; தன் இஷ்டப்படி ஒரு பெண் எதையும் செய்தல் கூடாது.

□□ பிள்ளையில்லாதவன், பெண்களையே பெற்றவன், திருமணமாகாமல் ஒரு பெண்ணுடன் வாழ்பவன், மனைவியை இழந்தவன் இவர்கள் எல்லாம் இரண்டாந்தர மனிதர்களே! சுபகாரியங்களுக்கு இவர்களை முன்னிலை செய்வது சரியாகாது.

□□ நீர் நுழைய முடியாத இடத்தில் நெய் நுழையும். நெய் நுழையாத இடத்தில் புகை நுழையும். புகை நுழையாத இடத்தில் தரித்திரம் நுழையும். அதை நுழைய விடாமல் சமாளிப்பவனே உயர்ந்த சம்சாரியாவான். கடவுள் உதவியும் அவனுக்குக் கிட்டும்.

□□ மனிதனிடம் பொருள் இருந்தால் மட்டும் போதாது. அதைப் பாதுகாக்க தைரியமும், வியாதி வராத ஆரோக்கியமான உடலும் வேண்டும். பொருளும் ஆரோக்கிய உடலும் சேர்ந்து இருக்குமிடம் தெய்வங்கள் குடியிருக்கும். உலகில் பொருள் இல்லாதவர்கள் இருந்தும் பயன் இல்லை. நோயினால் துன்பத்தை அடைந்து கஷ்டப்படுகிறவர்கள் உயிருடன் இருந்தும் பயன் இல்லை. இருந்தாலும் இறைவனை வேண்டிப் பயன் அடையலாம்.

□□ பெண்களின் முகம், காக்கை, கிளி முதலிய பறவைகளால் கொத்தித் தள்ளப்பட்ட பழவகை, மாட்டின் மடி, சிறு குழந்தைகளின் வாய் இவைகளுக்கு அசுத்தமில்லை.

□□ ஓ மனிதனே! உன் வாழ்நாள் முழுவதும் நீ கடவுளுக்கு அஞ்சி நடப்பாயாக! கடவுள் வகுத்துள்ள நல்ல வழிகளில் செல்வாயாக! அப்பொழுது முயற்சி உனக்கு துணை நிற்கும். பொறுமை உன்னிடத்தில் பொருந்தி நிற்கும். உன் கைகள் நீதியை வழங்கும். இரக்கம் உன் இருதயத்தில் குடிகொண்டிருக்கும். ஆண்டவனை வணங்குபவன் இவைகளையெல்லாம் எளிதில் பெறுவான்.

□□ கடல் நீர் ஆவியாக மாறி மேகமெனப் பெயர் பெற்று பிறகு மழையாய்ப் பூமியில் இறங்கி ஆற்று நீராகவும், ஊற்று நீராகவும் மீண்டும் கடலுக்கே செல்கின்றது. அதைப் போலவே உன்னிடத்தில் இருந்து புறப்பட்ட செயல்களின் பலன்கள் மீண்டும் உன்னையே வந்தடைகின்றன. ஆதலால் எப்பொழுதும் நன்மையே செய்; நல்லதையே நினை. இறைவன் உன்பால் எப்பொழுதும் இருப்பார்.

□□ தற்பெருமைக்காரன் பணக்காரனாக இருந்தால் அவனுடைய தற்பெருமை வளர்ந்து கொண்டே போகும். அப்போது அவன், தான் பேசுவது என்ன என்று கவனியாமலே பேசுவான். அதனால் அகங்காரமும் ஏற்படும். இவனுக்கெல்லாம் கடவுள் செல்வத்தைக் கொடுத்தே சோதிப்பார். அதனால் அதிலிருந்து மீள வேண்டும். அதுவே தர்மம்.

□□ சதுர்த்தியில் மயிர் கழித்தால் தாயாருக்கும், சதுர்த்தசியில் சகோதரிக்கும், சஷ்டியில் சகோதரனுக்கும், பௌர்ணமி பிதாவுக்கும் பீடை உண்டாக்கும். நவமியன்று மயிர் கழிப்பதால் தனதான்ய சம்பத்து நாசமடையும். ஞாயிறு அல்லது வியாழன் ஆனால் மேற்படி திதி தோஷம் இல்லை.

□□ நல்லவர்களும் சில குறைபாடு உள்ளவர்களாய் இருப்பதற்குக் காரணம் சேர்க்கைதான். ஆகவே எவருக்கும் சேர்க்கை நல்ல சேர்க்கையாய் இருக்க வேண்டும். 'சத் சங்கம் வேண்டும்' என்று சாஸ்திரம் விதித்திருப்பது இதற்காகத்தான்.

□□ குறைபாடு இல்லாத மனிதருக்குத் துன்பம் நேர்ந்தால் அதற்காக அவர் கவலைப்பட மாட்டார்,

இன்பமும் துன்பமும் கலந்தே வரும் என்பதை அவர் அறிவார். துன்பத்தைத் துன்பமாகவும் இன்பத்தை இன்பமாகவும் அவர் நினைக்க மாட்டார். குறைபாடு இல்லாத மனிதனுக்கு குறைபாடு இல்லாமல் இருப்பதே பேரின்பமாகத் தோன்றும். அவனுக்குக் கடவுளும் துணை போவார்.

□□ நேர்மையாக நீதி செலுத்துவதில் ஆளுகிறவர்கள் அக்கறை கொள்ளவேண்டும். பத்துக் கொலையாளிகளை விடுதலை செய்வதைக் காட்டிலும் குற்றமற்ற ஒருவன் தூக்குமேடைக்குச் செல்வது மிகவும் பாவாகும். அப்பேர்ப்பட்ட அரசனுக்குக் கடவுள் துணையாக இருக்க மாட்டார்.

□□ தான் செய்யும் எந்த வேலையையும் நேர்மையுடன் செய்கிறவன், எப்போதும் நல்ல வழியில் உழைக்கின்றவன், வறுமை அடைய மாட்டான். கவலை அவனை எட்டிப் பார்க்காது. கடவுள் அவன்பால் எப்போதும் கருணை காட்டுவார். கவலை இல்லாமல் இருக்கிறவன் அடையும் மரணமே சிறந்த மரணமாகும்.

□□ கிணற்றினால் ஆகக்கூடிய காரியங்கள் அனைத்தும் ஏரியினால் அவசியம் கைகூடும். வேதங்களிலே இருக்கும் பொருள் அனைத்தையும் அறிந்த அறிஞன் ஒருவன், பரப்பிரமத்தைச் சார்ந்து நிற்கும் ஆத்மானுபவத்தால் அடைகிறான். உன் கர்மத்தைச் செய்வதில் மட்டுமே உனக்கு அதிகாரமுண்டு. அதனால் உண்டாகும் பலவிதமான பலன்களிலும் எந்தவிதமான அதிகாரமும் உனக்கில்லை. கடமையை ஆற்றுவதில் பலனை நீ எதிர்பார்க்காதே!

□□ மனத்தைக் கட்டி வைத்த பிறகும், மனிதன் தன் சரீரத்தால், அதாவது கர்மேந்திரியங்கள் மூலம் ஏதாவது செய்தே தீருவான். ஆனாலும் மனத்தைக் கட்டியுள்ள ஒருவன் தன் காதில் விழும் வம்புகளைக் கேட்க மறுத்து ஈஸ்வர பஜனையைக் கேட்பான். நல்லோரின் குணங்களைக் கூறுவோர்க்குச் செவி கொடுப்பான். மனத்தை தன் வசப்படுத்தியவன் வெறும் பதார்த்தங்களில் ருசி கொள்ள மாட்டான். இத்தகைய மனிதன் ஆத்மாவுக்கு அழகூட்டும் வேலையைச் செய்வான். இதுவே தர்ம மார்க்கம்.

□□ பிடித்தமானவர் என்ன தவறு செய்தாலும் அது விருப்பமாகத்தான் இருக்கும். வெறுக்கத்தக்க பல குறைகள் நிறைந்ததானாலும், தன் உடலில் எவருக்குத் தான் விருப்பமில்லாமல் இருக்கிறது? இந்த உலகில் எவருமே இயல்பாகக் கெட்டவரோ, பெருந் தன்மையானவரோ, கர்வியோ, போக்கிரியோ அல்ல. தன் செயல்கள் மூலமாகத்தான் ஒவ்வொரு மனிதனும் பல்வேறு நிலைகளை - புகழ்ச்சி, இகழ்ச்சிகளை அடைகிறான். இருந்தாலும் கடவுள் பக்தியின் மூலம் அவன் நல்வழி காட்டப்படுகிறான். அதனால் நீ எப்பொழுதும் கடவுளைத் தொழுது வா!

□□ தேவர், பித்ருக்கள், அந்தணர், புத்திரர், மனைவி, புகலடைந்தவர் இவர்களை அலட்சியம் செய்து பணம் சம்பாதிப்பதிலேயே குறியாக உள்ளவன் கயவன். ஆடை, ஆபரணம், சந்தனம், மலர்மாலை ஆகிய பொருள்கள் இருந்தும் அனுபவிக்காதவன் தன்னையே ஏமாற்றிக் கொள்ளும் கயவன் ஆகிறான் என்று மத்ஸ்ய புராணம் கூறுகின்றது.

□□ இறைவனிடம் செய்யும் பக்தியை இரண்டு விதமாகக் கூறலாம். குரங்குக் குட்டி குரங்கைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்வது போல் இறைவனின் திருவடிகளை விடாமல் பற்றிக் கொள்வது ஒரு முறை. பூனை தன் குட்டியைக் கவ்விப் பிடித்துக் கொள்வது போல், பக்தன் எல்லாவற்றையும் இறைவனிடம் அர்ப்பணம் செய்யும் போது இறைவனே பக்தனைப் பிடித்துக் கொள்வது பிறிதொரு முறை. நீ இறைவனிடம் சரணாகதியடைந்து பூனைக்குட்டியைப் போல் இருந்து விடு. அதன் பிறகு உன்னை உயர்த்துவது கடவுளின் கடமையாகி விடும்.

□□ அதிகமாக உண்டால் நோய், ஆயுள் குறைவு ஏற்படுவதோடு உணவுப் பஞ்சமும் ஏற்படும். அதனால் அளவோடும் உண்ண வேண்டியது. தர்மத்தையும் ஆஸ்திகத்தையும் விரும்புகின்றவர்கள், சூடு, நுரை இல்லாத ஜலத்தினால் கிழக்கு அல்லது வடக்கு முகமாக இருந்து ஆசமனம் செய்ய வேண்டும். கிழக்கு அல்லது வடக்கு முகமாகப் பார்த்துக் குளிக்க வேண்டும். ஆடிப்பெருக்கன்று உணவை எடுத்து 24 நாழிகைக்கு மேல் கொண்டு போய் ஜலத்தில் அல்லது தடாகத்தில் உள்ள மீனுக்குப் போடுவதால் கிடைக்கும் புண்ணியம் அதிகம்.

□□ பணத்தைத் தீயவழியில் இழப்பது குற்றம். ஆனால் தீய வழியில் தேடுவது அதைவிடப் பெரிய குற்றம். தீய வழியில் செலவிடுவதோ எல்லாவற்றிலும் பெரிய குற்றம். அதனால் நீ செல்வத்தை சத்காரியங்களில் செலவழித்துப் புண்ணியத்தைச் சம்பாதித்துக் கொள்வதே நலம்.

□□ ஒருவன் சாப்பிடும் பொழுது முதலில் இனிப்பு பதார்த்தத்தையும், நடுவில் உவர்ப்பு, புளிப்பு, கைப்பு பதார்த்தங்களை சாப்பிட்டு முடிவில் தண்ணீர் அருந்த வேண்டும்.

□□ கடவுளிடம் குழந்தை உள்ளத்துடன் கொள்ளும் எளிய நம்பிக்கை, நிலத்திலிருந்தோ நீரிலிருந்தோ தோன்றும் எல்லாப் பிரச்சினைகளையும் தீர்த்துவிடும். எங்கே திரும்பினாலும் இன்னல்கள் நம்மை எதிர் நோக்குகின்றன. அவை வாழ்வின் தோழர்கள். தனி மனிதர்களின் குணங்களும் பொதுவான சுபாவங்களும் கலப்பதால் விளைபவையே இந்த இன்னல்கள். இவற்றைத் துணைவர்கள் ஆக்கிக் கொள்வதற்கு நிச்சயமான வழி ஒன்றுதான் உண்டு. அது - 'நாம் சாகாவரம் பெற்றவர்கள். நமக்கொரு நண்பர் இருக்கிறார். அவர் கண்ணயர்வதில்லை. நடு நித்திரையில் ஆழ்வதும் இல்லை. அவர் நம்மை எல்லாம் பரிபாலித்து நமக்கு வழிகாட்டுகிறார்' என்று அனுமானிப்பதே! நம் ஆத்மாவின் அடி ஆழத்தில் இந்த எண்ணம் நன்றாய்ப் பதிந்து விடுமாயின், அநேகமாக நாம் விரும்பும் எந்தக் காரியத்தையும் செய்து விடலாம்.

□□ ஒரு கிருஹஸ்தன், வட்டி ஊதியம் கருதிப் பிறர்பால் கடனாகக் கொடுத்து வைத்த பொருளையும் அங்ஙனமே பிறர்பால் கடனாகக் கொண்ட பொருளையும் அவருக்குப் பிறகு - புதல்வர்கள் பங்கிட்டுக் கொள்ள லாகாது. அப்படிச் செய்ய வேண்டுமாயின் ஒரு பகுதியை இறைவனுக்கு என்று ஒதுக்கிவைத்துவிட வேண்டும்.

□□ ஸ்தீரிகள் ஆண்களுடனும், ஆண்கள் ஸ்தீரிகளுடனும் அருகருகே அமர்ந்து உண்ணக் கூடாது. கணவன் மனைவி இருவரும் சேர்ந்து உண்ணக் கூடாது. கணவன் சாப்பிட்டு முடிந்த பின்பே மனைவி உட்கொள்ள வேண்டும். விவாக சமயத்திலும், பந்தியிலும், யாத்திரை சமயத்திலும், வழிப்பயணத்திலும், மனைவியுடன் சேர்ந்து உண்ணலாம்.

□□ சாப்பிடும்போது இடது கையால் தண்ணீர் குடிக்கும்பொழுது வலது கையால் இலையைப் பிடித்துக் கொண்டு சாப்பிட வேண்டும். தண்ணீர் குடிக்கும் பொழுது முழுவதும் குடிக்காமல் மீதி வைக்கக்கூடாது.

□□ சமூகத்துக்கோ, ராஜ்யத்துக்கோ, ஒரு வர்க்கத்துக்கோ, தலைவர்களாக இருப்பவர்கள், சமய அனுஷ்டானங்களையும் ஆசாரங்களையும் பறக்கணிக்கலாகாது. தனிப்பட்ட முறையில் அவர்களுக்குச் சமயச் சடங்குகள் தேவையில்லாது போகலாம். சமய அனுஷ்டானங்களைப் பின்பற்றும் அவசியத்தைக் கடந்திருக்கலாம். என்றாலும், அவர்கள் அனுஷ்டானங்களை விட்டுவிட்டால், இந்த அனுஷ்டானங்களின் உதவியை அவசியமாகப் பெற வேண்டியவர்களும் அலட்சியம் செய்யத் தொடங்கி விடுவார்கள். அது பாவ காரியமல்லவா!

□□ உயர்ந்த உண்மை மலர்வது ஆழ்ந்த அன்பிலேயே! உள்ளம் மகிழ்ந்து எவனும் உண்மையை விட்டுப் பொய்யில் இறங்கமாட்டான். அப்படியே நீதி, தெளிவான அறிவு, அன்பு முதலியவையும். இதை எப்போதும் மறவாமல் நினைவில் வைக்க வேண்டும். அப்போது எல்லோரிடமும் தயையுடன் நடப்பாய். இதுவே தர்மம்.

□□ பானையில் உலை வைத்து அரிசியைப் போட்டால், அரிசியை வேகவைக்கும் சூடு, நீரினுடையதோ பானையினுடையதோ அன்று. அவ்வாறே மனிதனுடைய சக்தியும் அவனுடையதன்று. இறைவனுடையதே. அதனால் நீ எப்பொழுதும் இறைவன் எண்ணமாக இருப்பதே தர்மம்.

□□ நம்மை உயர்த்துவது செயலன்று; செய்வதிலுள்ள ஆர்வமே! மனிதனைத் துன்பத்துக்கு ஆளாக்குவது பொருள் அன்று. பொருளிலும், அதிகாரத்திலுமுள்ள ஆசையும் பற்றுமே! இவற்றைப் பறறில்லாமல் சரியாக உபயோகிப்பவர்களே மனித இனத்தின் பரோபகாரிகள் ஆவார்கள்.

□□ உடலின் மாசை விட அபாயகரமானது மனத்து அழுக்கு. அதைப் போக்க இறைவன் அருள் வேண்டும். அதனால் நாள்தோறும் அவனை மறவாமல் நினைப்பதே தர்மம்.

□□ மிகப் பெரிய குற்றங்களை ஒருவன் செய்து இருந்த போதிலும், சரணடைந்து 'நீ தான் கதி என்னைக் காப்பாற்று' என்று வந்துவிட்டால் அவனது குற்றங்களை மன்னித்து அடைக்கலம் கொடுத்து காப்பாற்ற மனிதர்களாகிய நாம் கடமைப் பட்டவர்கள் ஆவோம். இதிலிருந்து தவறுவது அதர்மமாகும்.

□□ தவிர்க்க முடியாத பிரயாணங்கள் செய்யும் காரணங்களினாலும், உடல் பீடைகளினாலும், குளிக்க முடியாதவர்கள் புண்ணிய நதிகளின் பெயரைக்

கூறிக்கொண்டே சிறிது நீரை எடுத்து தலையில் தெளித்துக் கொண்டால், குளித்த பலனை அவர்கள் அடைகிறார்கள்.

□□ வயல்களில் காளை மாடு வைத்து உழுவது சிறப்பு. உழவு செய்வதற்கு காளையை முற்பகல்தான் பயன்படுத்த வேண்டும். பிற்பகல் உழவுக்கு பயன்படுத்தக் கூடாது. உழவு முடிந்தவுடன் காளை மாட்டை குளிப்பாட்டாமல் இருப்பது தோஷமாகும்.

□□ சமத்துவம் இல்லாதவனுக்குப் பகுத்தறிவு இல்லை. அவனுக்குப் பக்தியுமில்லை. பக்தி இல்லாதவனுக்கும் சாந்தி இல்லாதவனுக்கும் சுகம் எங்கிருந்து கிடைக்கும்? அதனால் இறைவனைத் தொழ மறக்காதே!

□□ தர்ம சாஸ்திரத்தைக் கேளாதவனுக்கும், தர்க்க வாதம் புரிபவனுக்கும், தர்ம சிந்தனை இல்லாதவனுக்கும், அக்கிரமமாகக் கேட்பவனுக்கும், நாஸ்திகனுக்கும், சோதனை செய்பவனுக்கும், தர்மத்திற்கு விரோதமாக நடப்பவனுக்கும் சாஸ்திரத்தைக் கூறக் கூடாது.

□□ மனிதனுக்கு எத்தனை பொருள்களின் மீது பற்று ஏற்படுகிறதோ, அத்தனை அழுகைக்கு முளை அடித்தாகி விட்டது என்றுதான் அர்த்தம். எந்தப் பொருளாயினும் என்றோ ஒரு நாள் அது நம்மை விடவேண்டும். அல்லது நாம் அதை விட வேண்டியிருக்கும். பிரிவின் போது துக்கம் ஏற்படத்தான் ஏற்படும். ஒரு பொருளின் மீது, பிரியம் தொடர்ந்து அந்தப் பொருளை விட்டுப் பிரிவதும் இயல்பே. பிரிவின்போது துயரம் ஏற்படாமல் செய்து கொள்ள ஒரு வழி உண்டு. அதாவது மனம் ஒப்பிப்பொருள் மீது கொண்ட பற்றிலிருந்து பிரிந்துவிட

வேண்டும். இதற்குத்தான் வைராக்கியம் என்று பெயர். இறைவன் அருளாலே தான் அது ஏற்படும்.

□□ உணவு உண்ணும் முன் - ஒவ்வொரு தடவையும் ஆண்டவனுக்கு அவசியம் வந்தனம் கூறவேண்டும். அப்பொழுதுதான் நமக்கு நாள் தவறாமல் உணவு கிடைத்துக் கொண்டிருக்கும்.

□□ பலனைக் கோராமல், சாஸ்திரத்தில் சொல்லிய முறையில் 'யாகம் செய்வது என் கடமை' என்று மனத்தை ஒரு நிலையில் நிறுத்திக் கொண்டு எந்த யாகமானது செய்யப்படுகிறதோ அது சாத்வீகம் எனப்படும். பலனைக் கோரியாவது, அல்லது ஆடம்பரத்திற்காகவாவது எந்த யாகம் செய்யப்படுகிறதோ அதை ராஜசமென்று அறிவாயாக! சாஸ்திர முறையைப் பின்பற்றாததும், அன்னதானமில்லாததும், மந்திரங்களற்றதும், தட்சணை யில்லாததும், சிரத்தையற்றதுமாக'ச் செய்யப்படும் யாகம் தாமசமெனப்படும். இறைவன் விரும்புவது சாத்வீகமே!

□□ உடலை சொகுசுக்கும் சோம்பலுக்கும் இரை யாக்கி வைத்திருப்பவன் மனிதக் கடமைகளை மறந்தவனாவான். அவனுக்கு இறைவன் துணை போக மாட்டான்.

□□ இல்லறம் நடத்துங்கள். ஆனால் ஒரு கையால் வாழ்க்கைக் கடன்களைச் செய்யுங்கள். ஒரு கை பகவா னின் காலைப் பிடித்துக் கொண்டே இருக்க வேண்டும். வேலை செய்யாமல் இருக்கும் போது இரண்டு கைகளும் ஆண்டவனின் பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கப் பயன்பட வேண்டும்.

□□ செய்திகளின் தொகுப்பே அறிவாகும், செய்திகளை விஸ்தரிப்பது விவேகம். அறிவைப் பாட நூல்களிலிருந்து அகழ்ந்தெடுக்கிறோம். பகுத்தறிவையோ வாழ்விலிருந்து பெறுகிறோம். அதற்கான வாழ்வை அளிப்பது இறைவனே!

□□ பிறர் நிலத்தில் மேயக்கூடாது என்பதற்காக நம் பசுவைக் கட்டிப்போடுகிறோம். அந்த நிலத்தின் பயிர் சேதம் ஆகாமல் இருக்க வேண்டும் என்பதற்காக மட்டும் கட்டிப் போடுவதில்லை. நம் பசு அடிபடாமல் இருக்க வேண்டுமென்று அதைக் காக்கவே கட்டிப் போடு கிறோம். அப்படியே எல்லாச் சமயக் கோட்பாடுகளும் நாம் பிறருக்கு இன்னல் விளைவிக்காமல் காப்பாற்று வதோடு நம்மை நம்மிடமிருந்தே காப்பாற்ற விதித்தவை யாகும்.

□□ கவனமும், பண்பும், புகழும், தர்மவழியில் சம்பாதித்த பணமும் உள்ளவன் எந்த இடத்தில் தங்கியிருந்தாலும் அவனை அனைவரும் போற்றுவது கடமையாகும்.

□□ மீன் சேற்றில் இருந்தாலும் பளபளப்பு மாறாமல் இருப்பது போல், ஸாதுக்கள் குடும்பத்தில் இருந்தாலும் நிர்மலமாக இருப்பார்கள். அவர்களை அசூயை ஒட்டாது. கிரஹஸ்தனும் அந்த நிலையைப் பழகிக் கொள்வது நல்லது.

□□ அன்றாடம் ஜோதிடம் கூறுகின்ற ஜோதிடர் களுக்கு நவக்ரஹ தோஷம் ஏற்படுகிறது. ஜோதிடம் கூறுகின்ற சமயம், அந்தக் கிரஹம் மோசம், இந்தக் கிரஹம் கெடுதல் செய்யும், அது நீசம், இது சத்ரு என்று அடிக்கடி நவக்கிரஹங்களைப் பழித்துச் சொல்கின்ற

காரணத்தினால் ஏற்படும் தோஷத்தை நிவர்த்திக்க ஜோதிடர்கள் தினசரி சூரிய நமஸ்காரமும் நவக்கிரஹமூல மந்திர ஜபமும் செய்தால் அடுத்தவர்களுக்கு சொல்லும் பலன் சிலாக்கியமாக இருக்கும் என்பதோடு ஜோதிடர் களை எந்த தோஷமும் நெருங்காது.

□□ ஒருவனுக்கு வரும் கிழத்தன்மை அவனது அழகைக் கெடுத்து விடுவதுபோல், ஒருவனுக்கு ஏற்படும் கர்வம் அவனையே கெடுத்துவிடும். அதனால் கர்வம் கொள்ளாதே.

□□ உயிரோடு இருக்கையில் எதையும் கொடாமல் இறந்த பிறகு தர்மங்கள் செய்ய ஏற்பாடு செய்வது சுயநலமாகும்! அதனால் கூடுமானவரை உலக வாழ்க்கையிலே தருமம் செய்யத் தொடங்கி விடுவதே நலம் தரும்.

□□ ஒருவனுக்கு ஆகாரம் அளிப்பது தருமம் என்றாலும், அதை அவனே தேடிக்கொள்ள வழிகாட்டுவது, உதவி செய்வது இன்னும் சிறந்ததாகும். அது அவனது வாழ்க்கை முழுவதும் பயன்படுவதாக இருக்குமே! ஒருவனுக்கு உதவி செய்வதை விடப் பிறர்க்கு உதவி செய்ய அவனுக்குக் கற்றுக் கொடுப்பதே சிறந்தது ஆகும்.

□□ புகழையோ, வெற்றியையோ கருதாமல் எந்தத் தொழிலிலும் உழைப்பை மட்டும் விரும்புபவன் கடவுளுக்கு உவப்பானவனாகிறான்.

□□ உன்னையே ஆண்டு கொள்ள உனது மூளையை உபயோகி. பிறரை ஆட்கொள்ள இருதயத்தை உபயோகி. இறைவன் வீற்றிருப்பது அங்கேதான். அதை அறிந்து கொண்டு அனைவரிடமும் அன்பு செய்.

□□ இறைவனே! இந்தத் தீய மனிதனிடமிருந்து என்னைக் காப்பாற்று. இந்தத் தீயவன் நான்தான் என்ற அளவுக்கு உன்னை உணர்ந்து கொண்டால் போதும், அதன் பிறகு நீ நல்லவனாக ஆக இறைவனைத் துதிப்பாய்.

□□ வயல்களுக்கு களை அழிவை உண்டாக்குகிறது. மனிதர்களுக்கு காம இச்சை அழிவை உண்டாக்குகிறது. அதனால், அதை கூடுமானவரை குறைத்துக் கொள்வதே நலம். இறைவன் விரும்புவதும் அதுவே!

□□ காற்று மேகத்தை அடித்துச் செல்வது போலவே, இறைவனது திருநாமம் நம் மனத்தைச் சூழ்ந்துள்ள உலகப் பற்று என்னும் மேகத்தை அழிக்கிறது. அதனால் என்றும் நாம பஜனை செய்து கொண்டிரு.

□□ உலகனைத்தும் ஆத்மாவே! ஆத்மாவுக்குப் புறம்பாக ஒரு சிறிதும் இல்லை. குடம் முதலியவை மண்ணெனக் காண்பது போல் ஞானி அனைத்தையும் ஆத்மாவாகக் காண்கிறான். நீயும் அதையே பயிற்சி செய்தால் மேன்மை அடைவாய்.

□□ 'என் பிள்ளைகள், என் செல்வம்' என்ற சிந்தனையால் மூடன் துயரப்படுகிறான். அவனே அவனுக்குச் சொந்தமில்லை. பிள்ளைகளும் செல்வமும் எப்படிச் சொந்தமாகும்? தாமரை இலை தண்ணீர் போல் வாழ்வதே சாலச் சிறந்ததாகும்.

□□ எல்லா மனிதர்களிடமும் நீ பெருந்தன்மையாக நடந்து கொண்டாலும், சிறந்தவர்களையே நீ நண்பர்களாகக் கொள்ள வேண்டும். அதுவே உன் வாழ்க்கையை உயர்த்தும்.

□□ மனிதன் வாழ்வில் மூன்று சம்பவங்கள். பிறப்பு, வாழ்வு, இறப்பு. மனிதனின் பிறப்பு அவனுக்கே தெரியாது. இறக்கும் பொழுது துன்பப்படுகிறான். வாழ மறந்து விடுகிறான். இறைவனை மறக்காமல் நினைத்து வாழ்ந்தால், வாழ்க்கையும் சுகப்படும், இறப்பதற்கும் வருந்த வேண்டியதில்லை.

□□ எங்கிருந்தோ எந்த வகையிலோ, எப்பொழுதோ செய்யும் நன்மை தீமை, அங்கிருந்து, அந்த வகையில், அப்போது, அப்படியே, அதற்காக அந்த அளவுக்கு விதிவசத்தால் அந்த இடமே திரும்பி வந்து அடையும். அதனால் எப்பொழுதும் நன்மையே புரிந்து நலம் பெற வாழுங்கள்.

□□ பிறரைச் சந்தோஷப்படச் செய்வதில் ஓர் இன்பமுண்டு. ஓர் ஆத்மாவின் ஆழத்தை அறிந்து ஆனந்த மூட்டவும், துன்பப்பட்ட இருதயங்களையும் இன்னலுற்ற உயிர்களையும் கண்டறிந்து உற்சாகம் தரவும் சிலருக்குச் சந்தர்ப்பங்கள் ஏற்படுகின்றன. நிர்மலமான அறிவைப் பலப்படுத்துவதிலும், தைரியமூட்டுவதிலும் ஒரு தூய இன்பம் இருக்கிறது. நமக்குத் துன்பம் தருபவர் மீது வெறுப்புக் கொள்ளாதிருப்பதற்கு ஒரு வழி உண்டு. அவர்களுக்கு நன்மை செய்வதே இந்த வழியாகும். அதுதான் சோகத்துக்கு மாற்று.

□□ இளமைப் பருவம் தவறுகள் நிறைந்தது. முழு வளர்ச்சிப் பருவம் போராட்டங்கள் நிறைந்தது. முதுமைப் பருவம் கவலைகள் நிறைந்தது. எப்பொழுதும் இறைவன் அருள் இல்லாதார்க்குத்தான் இப்படியெல்லாம் ஏற்படும்.

□□ நாற்பது வயது என்பது இளமைக் காலத்தில் முதுமை எய்திவிட்ட மாதிரி. ஐம்பது வயது என்பது

முதுமைக் காலத்தில் இளமையை அனுபவிக்கிற மாதிரி. ஆனால் என்றும் இறைவன் நினைவில் ஆழ்ந்தால் என்றும் இளமையோடிருக்கலாம்.

□□ அகங்காரம் கொள்ளாமலும் அசூயைப்படாமலும் நல்ல புத்தியுடன் ஒருவன் நல்ல காரியங்களைச் செய்தால் அவனைத் துயரம் ஆட்கொள்வதில்லை. இப்படிப் பட்டவன் எங்கும் பிரகாசிப்பான்.

□□ தன்னிச்சையைக் கொல்ல அன்பினாலேயே முடியும். நாம் அன்பு இருக்குமிடத்து நம்பிக்கை கொண்டால்தான் அன்பு நம்மிடம் சுரக்கும். பாடுபடவும், தன்னை மறக்கவும், தியாகம் செய்யவும், விட்டுக் கொடுக்கவும் நாம் கற்றுக் கொள்ள வேண்டும். இந்த உலகம் மனித மயம். மனிதர்கள் அனைவரும் நம் சகோதரர். இந்த உன்னதக் கருத்தை நினைத்தால் அன்பு தானே ஏற்படும். நன்மை செய்து கேட்டை ஒழிப்பதற்கு முதலில் சுத்த புத்தி மிக அவசியமாகும்.

□□ துன்பச் சரக்குகளை வைத்திருக்கும் ஒரு சரக்குப் பைதான் இந்த உடம்பு. நமது உடம்பு 'மெய்' என்று நினையாமல் அதை ஒரு 'பொய்' என்று மறந்து விட்டு, வாழ முடியாமல் தவிப்பவர்களுக்கு உங்களிடம் உள்ளதை அள்ளிக் கொடுங்கள். இந்த மனப்பான்மை உங்களிடம் வளர்ந்து வருமானால் தன்னலப் பற்று நீங்கிப் பாச பந்தமென்னும் வலிய நோயிலிருந்து விடுபட்டுக் கவலையற்று வாழ்வீர்கள். வாழ்க்கையில் நிறைவைக் காணும் பேரின்ப வீடு தானாகவே உங்கள் இருதயத்திற்குத் திறந்து கிடக்கும்.

□□ இருக்கும் பொழுது பேரும் புகழும் உண்டாகத் தக்க செயல்களைச் செய்தவர்கள், இறந்தாலும் அவர்கள் செய்த நற்செயலுக்கு ஏற்ற அளவில் புகழப் பெறுவார்கள். இவர்கள் இறந்தாலும் இறவாதவர்களாகவே இருப் பார்கள். ஒருவர் எவ்வளவு காலம் இந்த உலகத்திலே வாழ்ந்தார் என்பது கவனிக்கக் கூடியதன்று. அவர் எவ்வளவு நற்செயலைச் செய்தார் என்பதே கவனிக்கத்தக்கதாம். அதனால் இப்பொழுதே இன்றே தான தர்மங்களைச் செய்யத் தொடங்கி விடுங்கள். அதனால் இறைவன் உங்களை நோக்கி நெருங்கி வருவான்.

□□ நவக்ரஹங்களை எவனொருவன் தினசரி பூஜித்து வணங்கி வருகிறானோ, அவன் பெரியோர்களின் அன்பையும், ஆதரவையும் தானாகவே பெறுகிறான்.

□□ ஒரு வேலை நடைபெற வேண்டுமானால் மூன்று வகையில் அதைச் செய்யச் சொல்லலாம். உத்தரவு போட்டு 'இந்த வேலையைச் செய்' என்று சொல்வது ஒருவகை. அப்போது உத்தரவுக்குப் பயந்து சிலர் செய்வார்கள். நண்பன் வேண்டுவது போல் 'இந்த வேலையைச் செய்து கொடுத்தால் நன்றாக இருக்கும்' என்று கேட்பது மற்றொரு வகை. தாமே ஏற்றுக் கொண்டு செய்வதால் அப்போது செய்பவருக்கு அதிகச் சிரமம் தோன்றாது. மூன்றாவது பத்தினி சொல்லிச் செய்வது. அது எத்தனை பாரமானதாக இருந்தாலும் விரும்பிச் செய்வதால் மகிழ்வாகத் தோன்றும். வேதம் தர்மத்தைச் செய்யும்படி கட்டளை இடுகிறது. அது பிரபு ஸம்மிதம் - அதாவது எஜமானின் கட்டளை.

□□ புராணம் ஸுஹ்ருத் ஸம்மிதம் - நண்பனின் அறிவுரை. அதாவது சிநேகிதனைப் போல் வேதத்திலுள்ள தர்மங்களை விளக்கிச் சொல்லி நம்மைச் சுலபமாகச் செய்யத் தூண்டுகிறது. 'அப்படிச் செய்' 'இப்படிச் செய்' என்று கட்டளையிடாமல், 'அவன் நல்லதைச் செய்தான். அதனால் கடைசியில் சுகத்தை அடைந்தான். கெடுதலைச் செய்தான். அதனால் கஷ்டப்பட்டான்' என்று எடுத்துச் சொல்லுவதால் 'நாமும் நல்லதைச் செய்வோம்' என்றும், 'கெடுதலைச் செய்யக் கூடாது' என்றும் நமக்குத் தோன்றுகிறது.

□□ இதே விஷயத்தைப் பல விதமான கற்பனை களோடு இன்னும் சுலபமாக எடுத்துச் சொல்வது காவியம். இது காந்தா ஸம்மிதம். மனைவி சொல்லும் அன்பு வார்த்தை. சொல்லாமல் சொல்லி நமக்கு உண்மைகளை. தத்துவார்த்தங்களைப் புரிய வைக்கும். புராணங்கள் நம்முடைய நல்வாழ்வுக்கு சாதனமாக இருப்பதால் அவற்றை நாம் எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டும்.

□□ தினசரி பெரியவர்களையும், தெய்வத்தையும் வணங்கி அலுவல்களில் ஈடுபடுபவனுக்கு புகழ், ஆயுள், தனம் இவைகள் விருத்தியடைகின்றன. அதனால் அன்றாடம் இறைவனைத் தொழத் தவறாதே!

□□ ஒவ்வொருவரும் தங்களால் முடிந்த அளவு மற்றவர்களுக்கு உபகாரம் செய்ய வேண்டும். பலர் ஒன்று சேர்ந்து சாலை ஓரங்களில் சின்னக் கிணறு, குளம் வெட்டலாம். அதனால் எத்தனையோ மக்கள் சௌகரியம் அடைவார்கள். ஆடு, மாடுகள் கூட அந்தத் தண்ணீரைக்

குடித்து ஆனந்தம் அடையும். கோயில் கட்டியோ அல்லது இருக்கும் கோயில்களிலோ பூஜை, உற்சவங்கள் முதலியவை நடக்கத் தர்மம் செய்யலாம். இதனால் ஆண்டவனின் அருளை எல்லோரும் பெற்று ஆயுள் முழுவதும் ஆனந்தம் அடையலாம். நந்தவனம் வைக்கலாம். தண்ணீர்ப்பந்தல் அமைக்கலாம். எல்லாத் தானங்களிலும் உயர்ந்தது வித்யாதானம். நல்லொழுக் கத்தையும் பரோபகார எண்ணத்தையும் ஊட்டுவது கல்வி. சீடர்களின் உள்ளத்தில் பதியும்படி இந்தக் கல்வியைக் புகட்ட வேண்டும். அதனால் எல்லோருக்கும் நன்மை உண்டாகும். இவற்றுள் எது உங்களால் செய்ய முடிகிறதோ, அதைத் தவறாமல் செய்து வாருங்கள். அதுவே தர்மம்.

□□ தாம் துன்பமின்றி மரணமடைய வேண்டுமென்று நினைக்கின்றவர், முதலில் தம்முடைய மனம், வாக்கு, காயம் ஆகியவைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். மரணத்திற்கு முன்னால் தாங்கள் செய்ய வேண்டிய கடமையைச் செய்து முடிப்பவர்கள் மகிழ்ச்சியுடன் மரணமடையலாம். பிறகு பார்த்துக் கொள்ளுவோம் என்று நினைப்பவர்கள் மரணத்தின் போது, மரணத்தைத் தவிர, வேறு எதையும் பார்த்துக் கொள்ள முடியாது. செய்ய வேண்டிய கடமையை உரிய காலத்தில் செய்து விடுவதே தர்மமாகும். கடமைக்காகக் காலம் காத்துக் கொண்டிருக்காது.

□□ பட்டுத் துணியாய் இருந்தாலும் அதைப் பைத்தியக்காரன் கிழித்துவிடுவான். அதன் அருமை அவனுக்குத் தெரியாதே! ஆண்டவனால் நமக்குக் கொடுக்கப்பட்டது நல்ல உடம்பாய் இருந்தாலும்,

அருமை தெரியாதவர்கள் அதைக் கெடுத்துக் கொள் கிறார்கள். அதன் பிறகு வைத்தியம் செய்வது இடிந்த வீட்டைப் பழுது பார்ப்பது போலத்தான். அதனால் இறைவன், ஆத்மா, உள்ளிட்ட உடம்பை பயபக்தியுடன் ஓம்புங்கள். அது உங்களது கடமையாகும்.

□□ மலையின் மீது மழைத் தண்ணீர் அங்கே நில்லாமல் சிதறி வழிந்து ஓடி எங்கெங்கும் பரவி விடுவது போலச் செல்வமும் சேர்ந்த இடத்தில் நில்லாமல் சிதறிப் பரவி எங்கெங்கோ சென்று விடும் என்று சொல்லவும் வேண்டுமா? காற்று எங்கும் தங்காமல் வந்தும் போய்க் கொண்டும் இருப்பதைப் போலவே செல்வமும் வருவதும் போவதுமாகவே இருக்கும். ஆகவே செல்வம் வந்தபோது இறுமாப்புக் கொள்ளாதவர்களும், தரித்திரம் வந்த போது கலங்காதவர்களும் மேன்மை பெறுவார்கள். இறைவன் செல்வத்தைக் கொடுப்பது பல நற்காரியங்கள் செய்வதற்கே!

□□ அதிகமாகக் கஷ்டப்பட்டு வரும் பொருளையும், தர்மத்திற்கு விரோதமாகக் கிடைக்கும் பொருளையும் சத்ருக்களை வணங்கிப் பெறும் பொருளையும் அடைய விரும்பாதே! அதனால் துன்பமே விளையும்.

□□ மனிதர்களுக்கு தெய்வபயம் இருக்கையில் தெய்வபக்தி தானாக வருகிறது. பக்தி வரும் சமயம் ஆசாரமும் அனுஷ்டானமும் இயற்கையாகவே வரு கின்றன. ஆசாரமும் அனுஷ்டானமும் உள்ளவர்கள் எங்கு இருக்கிறார்களோ அங்கு தெய்வங்கள் வாசம் செய்யும். தெய்வங்கள் எங்கு வாசம் செய்கின்றனவோ அங்கு மாதம் மும்மாரி மழை பெய்யும். மழை எங்கு பெய்கிறதோ அங்கு மக்கள் சுபிட்சமாக இருப்பார்கள்.

□□ அரசனின் விரோதி, காமாந்தகாரன், பெருந் தீனிக்காரன், பெருவியாதிக்காரன், தர்ம சிந்தனை இல்லாதவன், பிறரைப் பற்றி சதா குறை கூறுபவன், பெண்களைக் கண்டதும் சிரித்துச் சிரித்துப் பேசுகிறவன், துறவி போல் வேஷம் போடுகிறவன் ஆகியவர்களைத் தன் வீட்டில் கால் மணி நேரத்திற்கு மேல் தங்க விடுவது, கொள்ளிக் கட்டையை தலையில் சொருகுவது போலாகும்.

□□ இருப்பதும் சிறப்பதும் - அதிகாரம் செய்வதும் அடங்கி நடப்பதும் - உழைப்பதும் பிழைப்பதும் மட்டுமே போதுமா? இவற்றில் நீதி நிலைத்திருக்க வேண்டாமா? நீதி இல்லாமல் இவைகளைச் செய்தால் துன்பமே உண்டாகும். இயற்கைக்கு விரோதமாக நீதி தவறி நடப்பவனுக்கு இறைவனுடைய தண்டனை உண்டு.

□□ நல்ல மனிதனே! நான் சொல்வதைக் கேள்! பெருமை பொருந்திய செயலையே செய். எவை நல்லவை என்று தோன்றுகின்றனவோ அவைகளையெல்லாம் செய். உன்னைப் பிறர் புகழவில்லை என்றால் அதைப்பற்றி நீ கவலைப்படாதே! நீ நல்லவனென்று உன் மனசாட்சி சொல்கின்றது. நீ செய்த நல்ல வேலையை அது புகழ் கின்றது. அதனால் ஏற்படும் இன்பமே உனக்கு மேலா னது. பொதுமக்களில் பெரும்பாலோருக்கு உண்மை தெரியாது. அவர்கள் உன்னைப் புகழ வேண்டுமென்று நீ எதிர்பார்க்கலாம். உனக்கு வேண்டுவதெல்லாம் ஆத்மா வின் அனுமதியே!

□□ பாபம் செய்கிறவர்கள் பிறருடைய கெட்ட குணங்களை அறிவதில் அதிக விருப்பம் கொள்வதைப்

போல நல்விஷயங்களை அறிய விருப்பம் கொள்ள மாட்டார்கள். இதிலிருந்து பாவம் செய்கிறவனை எளிதில் புரிந்து கொள்ளலாம். பெரிய பெரிய காரியங்களையும், யாகங்களையும் செய்பவனைத் தேடி அடைந்தால் தர்ம சிந்தனை தானாக வரும். ஸ்வர்கத்திலிருந்து காமதேனுவும், கற்பக விருட்சமும், சிந்தாமணியும், அமிர்தமும் எப்படி விலகாமல் இருக்குமோ, அதே போல் தர்ம சிந்தனை உள்ளவனை விட்டு புண்ணியம் விலகுவதில்லை. அத்தர்ம சிந்தனைக்குக் காரணமானவன் இறைவனே! அதனால் என்றும் இறைவனை மறக்காமல் இரு.

□□ சிந்தனை செய்து செய்யக்கூடிய எந்தக் காரியம் ஆனாலும் அநேகமாகத் துன்பம் தருவது குறைவு. அப்படிச் செய்தும் துன்பம் நேர்ந்தால் அது முற்பிறவியில் செய்த வினையென்று முடிவுகட்ட வேண்டியதுதான். ஆகவே காரியத்திற்கு ஏற்றவாறு பலன் வரக் கூடியது என்பது மனிதப் பிறவி ஒன்றுக்கேதான்.

□□ குளம்-நதி இவைகளில் மூழ்கி ஸ்நானம் செய்வது உத்தமம். கிணற்றிலிருந்து ஜலம் எடுத்து ஸ்நானம் செய்வது மத்திமம். ஸ்நானம் செய்ய முடியாத ஒரு நிலையில் விபூதி ஸ்நானம் விதிக்கப்பட்டிருக்கிறது. சமுத்திர ஸ்நானம் தினந்தோறும் செய்யக் கூடாது. பருவ காலங்களில் செய்ய வேண்டியது. ஆனால் இராமேஸ்வரம் போன்ற பெரிய க்ஷேத்ரங்களில் என்றைக்கும் ஸ்நானம் செய்யலாம். ஸ்நானம் செய்யும் பொழுது இடையில் அவசியம் ஒரு சிறு துணியேனும் உடுத்தியிருக்க வேண்டும்.

□□ வீட்டின் நிலைப்படி தேவிக்கு ஒப்பாவாள். அதனால் கோவணம் இன்றி நிலைப்படியைத் தாண்டுதல் கூடாது.

□□ நிழல் என்பது தனிப் பொருளல்ல. நம் சரீரத்தால் மறைக்கப்பட்ட ஒளியின் பகுதியே. நிழலை ஒருவன் மிதிப்பதனால் நாம் அவதிப்படுவதில்லை. அது போல, மாயா சக்தியினுடைய காரியத்தினால் அதற்கு ஆதாரமான பரமாத்மாவிற்கு எந்த விதமான லௌகீக சுகதுக்கங்களும் ஏற்படாது. பொருளில்லாத பொருள் என்று சொல்ல முடியாத மாயை. அனாதியாய் இருந்து கொண்டு பரமாத்மாவினுடைய ஆதார சக்தியினால் உலகை யெல்லாம் படைத்துக் காத்து, அழித்து வருகிறது. இவ்விதமாக பரமாத்மா ஒன்றுதான் பாரமார்த்திக சத்தியமாகும். மற்றெல்லாம் இல்லாத பொருளின் ஒரு தோற்றமே.

□□ நல்லொழுக்கமும் நல்ல மனமும் ஒன்றை ஒன்று பின்னிக் கொண்டிருக்கின்றன. நல்ல மனமிருந்தால் நல்லொழுக்கம் உண்டாகும். நல்லொழுக்கமிருந்தால் நல்ல மனம் உண்டாகும். ஆனால் மனத்தத்துவத்தை உணர்ந்தவர்கள் ‘நல்ல மனம் இருந்தால்தான் நல்லொழுக்கம்’ என்று மனத்திற்கே அதிகப் பொறுப்பை அளிக்கின்றனர். காரணம்? இறைவன் தொடர்பே.

□□ ஒருவன் அநேகக் கெடுதல்களைச் செய்து கொண்டிருந்தாலும், பெரு வாழ்வு வாழ்பவன் உண்டு. இதைக் கண்டு இப்படிக்கூட ஒரு ஏற்பாடா? என்று இறைவனைக் குறை கூறாதீர்கள். அவன் போன ஜென்மத்தின் நற்பலன்களை இப்பொழுது அனுபவித்து

வருகிறான். இப்பொழுது அவன் புரிந்து வரும் கெடுதல்களுக்கு, அடுத்த ஜென்மத்தில் கேடு அனுபவிப்பான். இது திண்ணம்.

□□ பதியாகிய கடவுள், பசுவாகிய ஆன்மாக்களை உலகில் அனுப்பியிருக்கின்றார். அந்த ஆன்மாக்களை பாசம் என்னும் தீமை பல வித வழிகளில் பிடித்துக் கொள்ளுகிறது. அவைகளில் மிக மிகப் பொல்லாதது கவலை என்பதாகும். கடவுள் ஆன்மாக்களிடம் இரக்கம் உள்ளவர். அவரை நோக்கி அழுதால் அவர் பல வித வழிகளில் ஆன்மாக்களைத் துன்பப்படுத்தும் பாசத்தை ஒழிப்பார்.

□□ ''பிறர் துன்பத்தைத் தன் துன்பமாகவும், பிறர் மகிழ்ச்சியைத் தன் மகிழ்ச்சியாகவும்'' நினைக்கின்றவரே, மனிதரில் சிறந்தவராவார். அவரிடமுள்ள சைதன்யம் விழிப்படைந்து விட்டது என்பதாகும்.

□□ எண்ணும் எண்ணம், செய்யும் செயல், உன் வரையில் நல்லதென்று தோன்றினால் போதாது. உன்னைச் சுற்றிலும் உள்ள நல்லவர்களுக்கும் அவை நல்லனவாகப் பட வேண்டும்.

□□ பூமி முழுவதும் திரிந்து அலைந்தாலும் பரிசுத்தமான உண்மை தர்மத்தைக் கண்டறிய முடியாது. ஏன் தெரியுமா? அது உன் உள்ளத்தைப் புரிந்து கொண்டால் தர்ம சொரூபமாக இறைவன் படிந்திருப்பதைக் காணலாம். அதனால் தான் ஆன்றோர் 'உன்னை அறிந்து கொள்' என்றார்கள்.

□□ எந்தக் காரியத்தைச் செய்தால் பின்னால் மனம் மகிழ்வுறுமோ, எதன் பலனை மனத்திலே உற்சாகத்தோடு

அனுபவிக்க முடியுமோ, அதுவே நற்செயல். தாயையும் தந்தையையும் போற்றுவது, அமைதியான வாழ்க்கையை நடத்துவது - இவை தாம் மாபெரும் நற்பாக்கியமாகும்.

□□ சத்தியமே தெய்வம். எல்லா மதமும் இதையே பின்பற்றுகின்றன. உலகில் அனைத்தும் சத்தியத்தில் - பிறப்பவையே. எதுவும் சத்தியத்தை விட உயர்ந்தது அல்ல. வேதங்கள் சத்தியம் என்ற அஸ்திவாரத்தின் மீது எழுந்த கட்டிடங்கள். ஈகை, தியாகம், பாவத்தை எண்ணி இரங்குதல் இவை அனைத்தும் சத்தியத்தை அடிப் படையாகக் கொண்டு உலகில் பரவி உள்ளன. ஆகையால் நீ என்றும் சத்தியத்தை உனக்கு உறுதுணையாகக் கொள்.

□□ சகல சமயங்களிலும் கோபத்தோடும், துக்கத் தோடும் இருப்பவனிடத்திலும், பொறாமை உள்ளவ னிடத்திலும் சோம்பேறியினிடத்திலும், தன்னிடம் உள்ள குறையை வெளியில் சொல்பவனிடத்திலும், மனோ தைரியம் இல்லாதவனிடத்திலும், மகாலட்சுமி தங்கு வதில்லை.

□□ அதிகமான சுகத்தை அனுபவிக்கும்போது ஏற்கனவே கடைபிடித்து வந்த நற்பழக்கங்க்ளை விட்டு விடக்கூடாது. அதே சமயம் பழைய கஷ்டத்தை அடிக்கடி நினைத்துப் பார்க்கவும் தவறக்கூடாது.

□□ ஜோதிட, வைத்திய சாஸ்திரங்களை எவன் கற்று, அதன்படி பிறருக்கு நன்மை செய்கிறானோ அவன் தன் வயதுக்கு சிறியவனாக இருந்தாலும் வணங்கத் தக்கவன்.

□□ ஸ்திரீகளின் பார்வைக்கு வசியமாகாதவனும் பிறர் பொருளுக்கு ஆசைப்படாதவனும் அசத்தியத்தை ஜெயிப் பவர்கள் ஆவார்கள்.

□□ இரும்பிலிருந்து துரு தோன்றினாலும் இரும்பை அந்தத் துருவே அரித்துத் தின்று விடுகிறது. அது போலவே, நெறியிலிருந்து தவறியவனை அவனுடைய செயல்களே நாளுக்கு நாள் அழிவை நோக்கி நடத்திச் செல்கின்றன. அதனால் எப்பொழுதும் உன் நெறியிலிருந்து தவறாதே!

□□ புயல் காற்று அடிக்கும்போது, 'இது அரசமரம் இது ஆலமரம்' என்று அறிய முடியாது. அது போல்தான் உண்மை ஞானம் என்னும் புயல் காற்று அடிக்கும்போது ஜாதி வித்தியாசத்தைக் காண முடியாது. ஆத்மாவுக்கு ஜாதி கிடையாது என்பதை அறியவும்.

□□ காம இச்சையால் புத்தி இழந்தவனுக்கு அறிவு வேலை செய்வதில்லை. ஆனால் அன்பு ஏற்படும்போது அடக்கமும் உண்டாகிறது. நமக்குத் தாகம் எடுக்கும் போது அடுத்தவரும் தாகம் எடுத்துத் தவிப்பதை பார்த்து நம்முடைய தாகத்தை அடக்கிக் கொண்டு அடுத்தவருக்குக் கொடுக்கிறோம். இதுதான் அன்பு. அன்பு உள்ள நெஞ்சிலே அறன் தங்குவான்.

□□ உலகம் முழுவதும் ஒரே குயிடிருப்பு. தனி உயிரின் சுகத்தையும் துக்கத்தையும் பொதுப் பிரச்சனையாக்கி விசுவரூபமாகக் கொண்டு, விசால புத்தியுடன் நோக்கினால் போதும். சச்சரவுகள் நீங்கிப் பேதமும் பகைமையும் விலகி உண்மை உயர்ந்து அமைதி நிலவும். அதனால் நீ எதையும் விசுவரூபத்தின் அளவு நோக்குவதே தர்மம்.

□□ பெரியோருக்கு வணங்கிப் பழக்கமுள்ளவனுக்கும், தினமும் பெற்றோருக்கும், ஆசிரியருக்கும்

பெரியவர்களுக்கும் பணிவிடை புரிபவனுக்கும் ஆயுளும் கல்வியும் புகழும் பலமும் பெருகுகின்றன. பிள்ளையைப் பெறுவதனால் தாய் தந்தையருக்கு விளையும் நஷ்டத்துக்கு ஈடுசெய்யக் கருதிப் பிள்ளைகள் அவர்களுக்கு நூறு ஆண்டுகள் பணி புரிந்தாலும் அந்தக் கடனிலிருந்து விடுபட முடியாது. தாய் தந்தையருக்கும் ஆசிரியருக்கும் எது உகந்ததோ அதையே பிள்ளை செய்யவேண்டும். இம்மூவரும் மகிழ்ச்சியடைந்தால் போதும். மகன் வேறு தவம் எதுவும் இயற்ற வேண்டாம்; இந்தப் பணி விடைக்கே அவன் எளிதில் மேல் நிலை அடைந்து விடுவான். இறைவன் சுகம் கொடுப்பார்.

□□ எக்காளம், பேரிகை, சங்கு, இயந்திரம், வண்டி, உரல், உலக்கை, செக்கு, ஆனை சண்டை இவைகளின் சப்தம் கேட்கும் போது சாப்பிட உட்காரலாகாது.

□□ சாப்பிடும் பொழுது விளக்கு அணைந்து விட்டால் சூரிய பகவானை தியானம் செய்து, மீண்டும் விளக்கு ஏற்றிவிட்டு சாப்பிட வேண்டும். இருட்டில் அமிர்தமே ஆனாலும் - ஒரு பொழுதும் சாப்பிடக் கூடாது.

□□ ஹோமம் செய்த பின்பு மங்களத் திரவியங்களை தரிசனம் செய்ய வேண்டியது. பிறகுதான் வெளியில் செல்ல வேண்டும். அருகு, பழம், சந்தனம், புஷ்பம், ஜலகும்பம், தயிர், கன்றுடன் கூடிய பசு, எருது, பொன், அட்சதை, தேன், கன்னிப்பெண், சுமங்கலி, மஞ்சள் ஆகியவை மங்களத் திரவியங்கள் ஆகும்.

□□ மூடன் பிறரைக் குறை கூறுவான். அரைகுறை அறிவாளி தன்னைக் குறை கூறிக்கொள்வான். அறிவு

முற்றியவன் தன்னையும் குறை கூறான். பிறரையும் குறை கூறான். அவன் அறிவாய் விளங்குபவன் இறைவனே!

□□ தெய்வ காரியங்களுக்குப் பக்தி வேண்டும். பித்ரு காரியங்களுக்குச் சிரத்தை வேண்டும். தெய்வ காரியங்களைப் பண்ணும்போது சிகையை நன்றாக முடிந்து கொண்டு யக்ஞோபவீதம் இடது தோளில் இருக்கும் படியாகப் பக்தியோடு செய்யவேண்டும். பிரேத காரியங்களைச் செய்யும்போது சிகையை முடியாமல் யக்ஞோபவீதம் வலது தோளில் இருக்கும்படியாகச் சிரத்தையோடு செய்யவேண்டும்.

□□ வேதத்தை ரக்ஷிக்க வேண்டியவன் பொய் சொல்லக்கூடாது. புலால் உண்ணக்கூடாது. கப்பல் ஏறி வெளிநாடுகளுக்குப் போகக்கூடாது. அந்நாட்டுப் பழக்க வழக்கங்களில் அவன் ஈடுபடக் கூடாது. அந்தப் பழக்க வழக்கங்களை இங்கே கொண்டு வந்து மந்த்ர சாந்நியத்துடன் கூடிய வேதத்தை ரட்சிக்கக் கூடிய பொறுப்பு ஏற்பட்டிருக்கும் தன் சுய ஜாதி பந்துக்களிடம் கலக்கும்படி செய்யக்கூடாது. இப்படி அவனுக்கு அநேக தர்மங்கள் இருக்கின்றன.

□□ பொய் சொல்லவே கூடாது என்றபோதிலும், மனைவியின் கற்பை காப்பாற்றும் பொழுதும், தன் உயிருக்கும், பிற உயிருக்கும், பொருளுக்கும் ஆபத்து வரும்போதும், பொய் கூறுவதில் தவறு இல்லை. இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் பொய் சொல்லிவிட்டால், அதற்குப் பரிகாரமாக மீனுக்குப் பொரியும், பசுமாட்டிற்குப் புல்லும், ஏழைக்கு வஸ்திரமும் கொடுக்க

வேண்டும். அதனால் அப்படிப் பொய் சொன்ன பாவம் நிவர்த்தியாகி விடுகிறது.

□□ பிறவி எடுத்திருப்பதன் பிரயோஜனமே யாரிடமாவது ஒருத்தரிடம் மாறாத பிரியம் வைப்பதுதான். ஆனால் நாம் பிரியம் வைக்கிற பொருள் எப்படிப் பட்டதாக இருக்க வேண்டும்? நம்மோடு எந்தக் காலத்திலும் சண்டைக்கு வராததாக இருக்க வேண்டும். நம்மை விட்டு எந்தக் காலத்திலும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். அழியாத வஸ்துவிடத்தில் பிரியம் வைத்தால் அந்தப் பிரியம் அழியாமல் இருக்கும். நம்மை விட்டு அது போகக் கூடாது. அதை விட்டு நாமும் போகக் கூடாது. அப்படிப்பட்ட வஸ்துவினிடத்தில் பிரியம் வைத்தால்தான், நம்முடைய ஜன்மம் பிரயோஜனம் உடையதாகும். பிரியம் இல்லாமல் ஒரு ஜன்மம் இருந்தால் அது வீண். அப்படி பிரியம் வைக்க வேண்டியது இறைவன் பால்தான்.

□□ மனத்தின் மாசைக் கழுவுவதற்காக பெரியோர்கள் பலவித வழிகளைக் கையாண்டிருக்கிறார்கள். இதில் மிக சிறந்தது பிரார்த்தனையாகும். ஆரம்பத்தில் உலக விஷயங்களில் பெரும்பாலும் நேரத்தைப் போக்கினாலும் ஒரு சில மணி நேரமாவது பிரார்த்தனையில் செலவு செய்யும் வழக்கம் ஏற்படின் அந்த நேரம் வரைக்கும் உலகத்தைத் துறந்தவராவோம்.

□□ இம்மைக்கும் மறுமைக்கும் உயிருக்கு உயிராய் ஒரு ஒப்பற்ற பொருள் இருக்கின்றது. அப்பொருளை நாம் காணவேண்டும். அப்பொருள் அறிவுக்கறிவாயும் உணர்வுக்குணர்வாயும் நம் உள்ளத்திலிருந்து உணர்த்திக் கொண்டிருக்கிறது. அப்பொருளைக் காணாமலிருப்பது

நம் குறையாகும். இச்சரீரம் நைந்ததும் மாறுபட்டு மற்றொரு சரீரம் எடுக்கிறது. அச்சரீரத்திலிருந்து ஜீவன் மற்றொரு சரீரத்திற்குள் செல்கிறது. நாம் அந்த உயிரைக் கண்டதில்லை. முதலின் கண் அச்சிவனைக் காண வேண்டும். அதைக் காண்பதே இவ்வுடல் எடுத்ததின் பாக்கியமாகும். அதற்கென தொடர்ந்து தியானமும் பக்தியும் செய்து வரல் வேண்டும்.

□□ சூரியனை உதிக்கும் பொழுதும், அஸ்தமிக்கும் பொழுதும் கிரஹணம் பிடித்திருக்கும் பொழுதும் பார்க்கக் கூடாது. பார்த்தால் கண்ணுக்குக் கெடுதி ஆகும். அதனால் அதைப் பாவம் என்றனர். அதேபோல் சூரிய சந்திர கிரஹணம் சமயத்திலும் பார்த்தல் கூடாது.

□□ நம்முடைய சுகதுக்கங்கள் எல்லாம் என்றைக்கும் இருக்கிறவை. இவற்றையே பெரிதாக நினைத்துக் கொண்டிராமல், நம்மால் இந்த உலகத்திற்குச் சிறிதாவது சந்தோஷம், சுகம் உண்டாகும் என்றால் அதையே பிரார்த்தித்துக் கொள்கிற மனோபாவமுள்ள கொள்கை தான் மிகச் சிறந்தது. பண்டிகைகளைக் கொண்டாடும் கருத்து இதுதான். நமக்குக் கஷ்டம்; நமக்குத் துக்கம் என்பதைப் பாராட்டாமல் லோகம் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்று நாம் எல்லோரும் பிரார்த்தித்துக் கொள்வதே தர்மம்.

□□ கோவிலுக்குச் செல்லும் பக்தர்கள் குளிக்காமலும், கை கால் கழுவாமலும், திருச்சின்னம் அணியாமலும் போகக் கூடாது. மேலும் சட்டை போட்டுக் கொள்ளல், அங்கவஸ்திரத்தை மேலே போர்த்திக் கொண்டு செல்லுதல், பாதரக்ஷை அணிந்து கொண்டு செல்லுதல்,

மூக்கு நீர் சிந்துதல், தலைசீவுதல் ஆகிய காரியங்களை கோவிலினுள் செல்பவர்கள் தவிர்க்க வேண்டும்.

□□ ஞானோபதேசம் பண்ணுவதாக இருந்தால், அதற்குரிய இடத்தில் சப்தமே இருக்கக் கூடாது. நிசப்தமான இடமாக இருக்க வேண்டும். நல்ல அழகான மரங்கள் அடர்ந்த சோலைகளும் நதியின் தீர்த்தங்களும் உள்ள சாந்தமான இடங்களில் கவலையே இல்லாமல் குருவும் நல்ல சாந்தமாக இருக்கிற சமயத்தில் ஞானோபதேசம் நடக்க வேண்டும். ஜலரமணீயம், ஸ்தல ரமணீயம் எல்லாம் அங்கே இருக்க வேண்டும். பொதுவாக இந்த மாதிரியான இடங்களில்தான் மகரிஷிகள் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்திருப்பதாகப் பார்க்கிறோம்.

□□ குழந்தைக்கு ஐந்து வயது ஆனவுடன் உத்தராயணத்தில் மாசி மாதம் தவிர மற்ற ஐந்து மாதங்களில் சுக்ல பட்சத்தில் கணபதி, சரஸ்வதி பூஜை செய்த பின்பு அஷ்டம சுத்தியுள்ள லக்னத்தில் நல்ல சுபமுகூர்த்தத்தில் குழந்தைக்கு வித்யாரம்பம் செய்ய வேண்டும். பள்ளிக்கூடத்தில் சேர்க்கும் தினத்தில் தாம்பூலம், பழம், தக்ஷிணையுடன் குருவை அணுகி நமஸ்கரித்து ஆசி பெறுவது முக்கியம்.

□□ திரவிய நஷ்டம், அவமானம், அநேக விதமான குடும்பச் சிரமங்கள் ஆகியவற்றைக் கண்டு நாம் பயப்படுகிறோம். இப்படிப் பலவிதமான பயத்தையும் கொடுக்கிறவன் ஈஸ்வரன்தான். இளங்குழந்தையாக நாம் இருந்தால் நம்மைத் திருத்தப் பயமுறுத்தித்தானே ஆகவேண்டியிருக்கிறது. அப்படிப் பயமுறுத்துவதும் குழந்தைகளுடைய க்ஷேமத்திற்காகத் தான் என்று

வைத்துக் கொள்ள வேண்டும். ஈஸ்வரன், குழந்தைகளாகிய நம்மைப் பயமுறுத்த வேண்டிய அவசியம் நேர்கிறது. கடைசியில் அவனிடம் நிறைந்த அன்பு வந்துவிட்டால் எல்லாத் துக்கங்களும் நிவர்த்தியாகி விடும்.

□□ நாம் யாரை நினைக்கிறோமோ அவராக மாறிவிடுகிறோம். சர்வக்ஞனாக எல்லாம் உணர்ந்தும் சித்தத்தில் கொஞ்சம் கூட சலனமில்லாமல் சதா ஆனந்த ஸ்வரூபியாக ஈஸ்வரன் இருக்கிறான். அவனை நினைக்க ஆரம்பித்தால் நாமும் அப்படி ஆகலாம். ஆகியும் விடுவோம்.

□□ உலகத்திற்குள் எவன் மகா புத்திமானோ எவன் புத்தி அதிக சூக்ஷ்மமானதோ, நல்ல கத்தியின் கூர் எப்படி இருக்கிறதோ அப்படிப்பட்ட கூர்மையான புத்தி உடையவனாகக் கூர் உடையவனாக எவன் இருக்கிறானோ அவன் பட்ட மரம் மாதிரி சலனம் இல்லாத மனசு உடையவன் ஆக வேண்டும். காமத்தினாலோ குரோதத்தினாலோ அவன் மனம் சலனம் அடையாமல் பேதலிக்காமல் இருந்தால் அதுதான் ஆனந்தம்.

□□ குழந்தைக்கு மேஷ லக்னத்தில் அட்சரப்பியாசம் ஆரம்பித்தால் மூடனாவான்; ரிஷபமானால் வித்தை அதிகம் உண்டாகும். மிதுனமானால் பண்டிதனாவான். கடகமானால் பலமொழி வித்வானாவான். சிம்மமானால் சிற்ப சாஸ்திரனாவான். கன்னியானால் தாய்மொழியில் பிரபலமாவான். துலாமானால் வியாபாரியாவான். விருச்சிகமானால் சஞ்சாரியாவான். தனுசுவானால் எதிலும் ஸ்திர குணம் இருக்காது. மகரமானால் சங்கீத

ஞானமுடையவனாவான். கும்பமானால் பிரகாசமின்றி யிருப்பான். மீனமானால் சகல சாஸ்திரங்களை அறிவ தோடு கடல் கடந்தும் சென்று புகழடைவான். விஜய தசமியன்று சுப லக்னத்தை தேர்ந்தெடுத்து அட்சரப்யாசம் செய்வது மிக மிகச் சிறப்பு ஆகும்.

□□ ஒரு பெரிய ராஜா இருந்தால் எல்லோரும் ராஜாவிடமே நேரில் பேச முடியுமா? அந்த ராஜாவின் பரிபாலனத்திற்கு உட்பட்ட உத்தியோகஸ்தர்களிடம் குடிமக்கள் நெருங்கித் தங்களுக்கு வேண்டிய அனுகூலங்களைப் பெறுகிறார்கள். உத்தியோகஸ்தர் தாங்களாகச் செய்வதில்லை. அரசன் உத்தரவுப்படி மக்களுக்கு அனுகூலம் செய்கிறார்கள். அரசன்தானே செய்கிறான் என்று அரசனிடத்தில் குடிமக்கள் நேராகப் போக முடியாது. அப்படித்தான் நம் மதத்தில் சில வழக்கங்கள் இருக்கின்றன. பரமேஸ்வரன், மகா சக்ரவர்த்தி. ஜனங்கள், குடிமக்கள். வருணன், அக்கினி, வாயு போன்ற பல தேவதைகள்தாம் உத்தியோகஸ்தர்கள். இவர்கள் மூலமாக நாம் பல நன்மைகளை அடைய வேண்டும். அதற்காகவே தேவர்களுக்குச் சக்தி அளிக்க யாகம் பண்ணுகிறோம். அக்கினி மூலமாக நாம் கொடுக்கிற அவிசுகள் தேவர்களுக்குச் சேர்ந்து ஆகாரமா கின்றன.

□□ ஒரு பட்டணத்திலும், கிராமத்திலும் வசிப்ப வர்கள், தன்னைவிட பத்து வயது மூத்தவனோடும், சங்கீத ஞானம் அறிந்தவனானால் ஐந்து வயது மூத்தவனோடும். சாஸ்திரம் வேதம் அறிந்தவனானால் மூன்று வயது மூத்தவனோடும், தன் இனமானால் இரண்டு வயது மூத்தவனோடும், ஜோதிஷம், வைத்தியம் அறிந்தவனா

னால், சம வயதுள்ளவனோடும் சிநேகிதம் செய்து கொள்ள வேண்டியது. தன் வயதுக்கு குறைந்தவர் சிநேகிதமும், அற்பர் சிநேகிதமும், பிராண சங்கடத்தை யும், மான ஹானியையும் ஏற்படுத்தும். தர்ம சாஸ்திரத்தை அறிந்தவன் வயதில் சிறியவனாக இருந்தாலும் அவனது ஆலோசனைகளைப் பெற தயங்கக் கூடாது.

□□ வீட்டுக்கு வந்த ஒருவனுக்கு அவன் கேட்காமலே தாக சாந்திக்கு தண்ணீர் கொடுப்பவனும், சோர்வுடன் வருபவர்களுக்கு ஓய்வு எடுக்க பாய் கொடுப்பவனும். தனக்கு கஷ்டமிருந்தும் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் இனிமையாகப் பேசி சமாளிப்பவனும் பெரிய பூஜை செய்த பலனை அடைகிறார்கள்.

□□ ஒரு மருந்தை வாங்கி உபயோகிக்காமல் கொஞ்ச நாள் வைத்திருந்தால் அதன் வீரிய சக்தி குறைந்துவிடும். அப்படியே வேதத்தை அடிக்கடி அப்பியாசம் பண்ணாமல் இருந்தால் அந்த மந்திரங்களின் சக்தி குறைந்துவிடுகிறது. அந்த வீரிய சக்தியைத் திருப்பி உண்டு பண்ணுவதற்குப் பூஜை பண்ணி ஹோமம் பண்ணி பல அபிவிருத்திகள் உச்சாடனம் பண்ண வேண்டும். தவறுகளுக்கு எல்லாம் பிராயச்சித்தமாக இருப்பது காயத்ரி ஜபம் ஆகும்.

□□ வேறுபாடுகள் எல்லாம் உயர்வு தாழ்வு குறிப்பன அல்ல என்பதை நாம் எப்பொழுதும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். உயர்வு தாழ்வு கற்பியாமல் இருந்தால் எத்தனை வேறுபாடுகள் இருந்தாலும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை. இறைவன் பார்வையில் வேறுபாடு ஏது?

□□ தேகத் தெம்புள்ளவனிடத்தில் கோப தாபங்கள் ஏற்படா. பலவீனந்தான் சீற்றத்துக்குக் காரணம். நோய் நொடியில் அடிபட்டு நிற்பவன் தன்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பான். உலகத்திலுள்ள மற்ற விஷயங்களை அவனது உள்ளம் நாடாது. அவன் மனம் சோர்வுக்கும் துயருக்கும் இடமாய்ப் போய்விடும். எனவே தேகத்தில் தெம்பு வேண்டும். அந்தத் தெம்பிலேதான் இன்பம் பிறக்கும்.

□□ எவனை மோசமும் மாயையும் அணுகாவோ, எவன் மனத்தில் திட வைராக்கியம் குடிகொண்டிருக்குமோ, எவன் வாய் கடவுள் நாமத்தை ஓயாமல் ஓதிக் கொண்டிருக்குமோ, அவனுடைய உடல் எல்லாம் புனித தீர்த்தங்களுக்கும் உறைவிடம் ஆகும்.

□□ அறிஞர்கள் அடியெடுத்து வைக்க அஞ்சுமிடத்திலே முட்டாள்கள் மடமடவென முன்னேறுகிறார்கள். அயலாருக்கு தீங்கிழைக்கக் கருதுபவன் முதலாவது தனக்கே தீங்கிழைக்கிறான்.

□□ எப்பொழுதும் மகிழ்ச்சியோடு இரு. பிறரால் வரும் சாந்தியையாவது பிறருடைய உதவியையாவது தேடும்பொழுதுதான் மகிழ்ச்சி மாசு அடைகிறது. அதனால் எப்பொழுதும் எதற்கும் இறைவனை நாடுவதே முறையாகும்.

□□ தன்னலத்தை அறவே வென்றவர், சாந்தியை அடைந்தவர், மெய்ப்பொருள் கண்டவர் அனைவரும் எப்போதும் ஆனந்தமாய் இருப்பார். ஆனந்தம் அளிப்பவர் இறைவனே ஆவான்.

□□ அறிந்து கொண்டதே அறிவு. அதற்கு வழியும் வலுவும் கொடுப்பது புத்தி. அகமகிழ்ச்சி அடைவதால் ஒருவனது துயரம் அழிகிறது. அக மகிழ்ச்சி உள்ளவனது புத்தி நிரந்த்ரமாகிறது. மகிழ்ச்சியளிப்பவன், மகிழ்ச்சியா யிருப்பன் இறைவனே!

□□ புகழை விற்றே சாவாமையை வாங்க வேண்டும் என்றால் அறிஞர்கள் அந்த சாவாமையை வாங்க மாட்டார்கள். இழிந்த வாழ்க்கை நடத்துவதை விடக் கண்ணியமான சாவு மேலாகும். அன்புடையவனின் வீட்டுக் கூழ் அகந்தை கொண்டனின் வீட்டு அமிர்தத்தை விடச் சிறந்ததாகும். அதனால் அகந்தை கொள்ளாதே!

□□ மழைத் தண்ணீர் எப்போதும் ஸமுத்திரத்தை நோக்கித்தான் போகும். உண்மை ராஜ்யமென்றால் கோடிக்கணக்கான ஏழை எளிய மக்களிடமே அது கவனம் செலுத்தும். நாட்டில் வசதியுள்ளவரெல்லாம் அவ் வளவையும் அவர்களுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டும். கங்கை மிகப் பெரியது. அதிலுள்ள தண்ணீர் மிகவும் வேகமாக ஸமுத்திரத்தை நோக்கி ஓடுகிறது. ஓடை சிறியது. அது குறைவான தண்ணீரை ஸமுத்திரத் துக்கு அனுப்புகிறது. இதேபோல் அவரவரின் சக்திக்குத் தகுந்தாற்போல் அவரவரும் ஏழை எளியவருக்கு உதவவேண்டும். இதுதான் தர்மம்.

□□ நெஞ்சில் உள்ளதையே வாயால் சொல்லு. உனது சொல்லுக்கும் நினைவுக்கும் அத்தியந்த ஒற்றுமை இருக்கட்டும். உன் மனம் உலகத்திலேயே உழன்று கொண்டிருக்கும் போது, எல்லாம் ஈஸ்வரனே என்று வாயால் மாத்திரம் சொல்லிக் கொண்டிருந்தால் உனக்கு யாதொரு நன்மையும் உண்டாகாது.

□□ சந்தனத்தின் சுகந்தத்தையும், அழுகிய பிணத்தின் துர்நாற்றத்தையும் காற்று எங்கே கொண்டு வீசுமாயினும் அவற்றுடன் அது கலந்து விடுவதில்லை. அம்மாதிரி யாகவே முக்தியடைந்த ஜீவனும் உலகத்தில் வாழ்ந்த போதிலும் அதனுடன் கலந்திருப்பதில்லை. அதனால் ஜீவன் முக்தர்கள் புரியும் உலகாயத காரியங்களைக் கண்டு ஏளனம் செய்யாதே!

□□ ஜீவன் முக்தர்கள் உலகத்தில் வாழ்வது எங்ஙனம் தெரியுமா? மீன் குத்திப் பறவைகள் போல் அவர்கள் உலகில் வாழ்கிறார்கள். அந்தப் பறவை நீரில் ஆழ முழுகுகிறது என்றாலும் அதன் சிறகுகள் தண்ணீரால் நனைவதில்லை இரண்டொரு துளிநீர் ஒட்டிக் கொண்டிருக்குமானால் சரீரத்தை அசைத்துச் சுலபமாக அதனை நீக்கிவிடுகிறது. ஜீவன் முக்தர்களும் அவ் வண்ணமேதான் நடந்து கொள்வார்கள். அவர்கள் எதிலும் கலந்திருப்பதில்லை. ஆத்ம ஞானத்தைப் பெற்றவ னுக்கும் பெண்ணாசை பொன்னாசைகளாகிய விஷத்தால் யாதொரு தீங்கும் உண்டாகாது. அதனால் நீயும் இறைவனையணுகி ஆத்மஞானத்தைப் பெறுவதைப் பார். உலகில் பிறந்த ஒவ்வொருவருக்கும் அதுவே தர்மமாகும்.

□□ நியாயத்தினின்று வழுவாது தர்ம காரியங்களைச் செய்து கொண்டிருப்பவன் தர்மாத்மா. பிறர் மனைவியை நாடாமலும் தன்னிடம் கடன் பட்டவனிடம் அவன் பத்திரத்தையும் அடைமானப் பொருளையும் திருப்பித் தந்தும், எவருக்கும் கொடுமை செய்யாமலும், பசித்த வருக்கு உணவும், ஆடையில்லாதவருக்கு ஆடையும் அளித்துக் கொண்டும் நல்லது செய்து கொண்டும்

இருப்பவனே தர்மாத்மா. தவறான காரியம் எதிலும் அவன் இறங்க மாட்டான். உண்மை தவறாமல் நியாயம் வழங்கிக் கொண்டிருந்தால் தர்மாத்மா ஆகலாம்.

□□ நம்பிக்கையுள்ளவனே! நீ ஒன்றைச் சொல்லி விட்டு அதன்படி ஏன் நடப்பதில்லை? சொல் ஒன்றும், செயல் ஒன்றுமாக இருப்பது கடவுளுக்கு அறவே பிடிக்காது. பிறருக்கு என்னவோ நல்லுரைகள் வழங்கு கிறாய். ஆனால் என்னை மறந்து விடுகிறாயே! இது ஏன்? என்னவானாலும் பொய் மட்டும் சொல்லாதே! பொய் மொழிதல் என்ற பாவம் புரியும் ஒவ்வொருவருக்கும் கேடு வரும்.

□□ முக்கியமான வேலையைச் சிரத்தையுடன் செய்து கொண்டிருக்கும் ஒருவன் தனது சரீரத்திலுள்ள ரோகத்தின் கொடுமையையும் மறந்து தான் செய்யும் வேலையின் வடிவமாகவே ஆகிவிடுகிறான். இந்தச் சந்தர்ப்பங்களில் எல்லாம் மரணம் மரணத்தை அடைகின்றது. ஸ்தூல சரீரத்தை விட்டுப் பிரியும் காலத்தில்தான் ஒருவன் மரணமடைகிறான் என்று சாதாரண மக்கள் சொல்லுவது மரணத்தைப் பற்றிய உண்மையான கருத்தல்ல. பின்போ, நாம் மரணமடைவது எப்பொழுது என்றால், எந்த நிமிஷத்தில் நமது சரீரத்துக்காகவும் அதற்கு வேண்டிய சுகங்களைச் சம்பாதிப்பதற்காகவும் சுயநலத்தால் தூண்டப்பெற்று அறிவீனமாயும் இழிவாயும் வாழ்கிறோமோ அந்த நிமிஷத்திலேதான் நாம் மரணம் அடைந்தவர்களாகிறோம்.

□□ நோயாளி, நீண்ட காலம் வெளியூரில் வசிப்பவன், பிறர் சோற்றை உண்பவன், பிறர் வீட்டில் படுப்பவன்

இவர்கள் பிழைத்திருப்பதே மரணமாகும். மரணமே இவர்களுக்கு ஆறுதல் அளிப்பது.

□□ வாழ்க்கையில் நேரும் நிகழ்ச்சிகள் எத்தகையவை என்பதைவிட, அவற்றை நாம் எப்படி ஏற்றுக் கொள்கிறோம் என்பதைப் பொறுத்ததே இன்பம். தூய்மையான பக்தி உள்ளவனின் உள்ளத்தில் எல்லாத் தெய்வங்களும் குடிகொண்டிருக்கும்.

□□ சாத்திரம் அறிவுப் பெட்டகம். பகுத்தறிவை வளர்த்துக் கொள்ளவும், ஒழுக்க நெறியை மேற்கொள் ளவும், தீய சிந்தனைகளைப் போக்கிக் கொள்ளவும், மெய்யறிவு பெறவும், சாத்திரம் பயில வேண்டும். பகுத்தறிவால் ஏற்பதும் ஒதுக்குவதும் புரியும். ஒழுக்க நெறியால் நன்மை தீமை, பகை தெளிந்து பிறவிப் பயன் புலப்படும். அதனால் சாத்திரங்களைப் புறக்கணிக்காதே!

□□ அழகு, அழகு என்றால் எது அழகு? அன்புதான் அழகு. காருண்யம் தான் லாவண்யம். ஒருவேளை சாப்பிடாவிட்டால், ஒரு நாள் ஜுரம் அடித்தால், சிறிது கோபதாபம் வந்தால் முகத்தின் அழகு போய்விடுகிறது. ஆனால் லாவண்யமாகவும் காருண்யமாகவும் உள்ள அம்பாளின் அருளைப் பெற்றால் அதன் அழகு மறையாமல் நிற்கிறது. அந்த அழகு குழந்தையின் அழகு. தெய்வத்தை ஏன் அம்பாளாகப் பாவிக்க வேண்டு மென்றால் அம்மாவின் எதிரில்தான் காம உணர்ச்சி நாசமாகிறது; நாம் குழந்தையாகிறோம்.

□□ பேச்சில் வல்லவர்கள் நாம். ஆனால் செயலில் தாழ்ந்தவர்கள். நாம் உள்ளங் கறுத்தவர்கள். அழுக் கேறியவர்கள். உடல் சிவந்தவர்கள் வெளிப்பகட்டில்

சிறந்தவர்கள். இறைவனிடம் உண்மையான பக்தி கொண்டிருப்போரைப் பின் பற்றுவது போலப் பாசாங்கு செய்து, போலி பக்தி செய்கிறோம். இறைவனிடம் உண்மையான பக்தி சிரத்தை கொண்டு, அவன் அருளால் இன்பம் அடைவோர் பல்வகைச் சக்திகள் படைத்திருந்தும் சுய சக்தியைப் புலப்படுத்துவதில்லை. எல்லாக் காரியங்களிலும் செருக்கின்றிச் செயல்படுகிறார்கள். நாம் அத்தகைய இறையாட்சியின் உறவு பெற்றாலே, நம் வாழ்வைப் பயனுள்ளதாக்கிக் கொள்ள முடியும். வயது, நகை, பணம், பங்களா, வாகனம் ஆகியவைகளை வைத்துக் கொண்டிருப்பவன் பெரியவனாகமாட்டான். அவன் கொஞ்சமாவது தர்மத்தை அறிந்து இருந்தால் மட்டுமே பெரிய மனிதனாக போற்றத்தக்கவன். சிறுவனாக இருந்தாலும் வேத தர்மம், தர்க்க தாஸ்திரங்கள் அறிந்திருந்தால் போற்றத்தக்கவனாவான்.

□□ மூடனிடம் புஸ்தகமும், பெண்ணிடம் பேடிமையும், கஞ்சனிடம் பொருளும், ஊமையிடம் ரகசியமும் இருந்தால் எப்படி உபயோகப்படாதோ, அதே போல் வேதமில்லாத பிராமணன் உபயோகப்படாதவன் என்று சாஸ்திரத்தில் கூறியிருப்பதால் கொஞ்சமாவது வேதம் கற்றுக்கொள்ள வேண்டும்.

□□ அக்கினியிருந்தால் அதன் வெளிச்சம் தூரத்திலிருப்பவர்களுக்கும் தெரியும். ஆனால் அதன் உஷ்ணத்தைப் பக்கத்தில் இருப்பவர்கள் தாம் உணர முடியும். இதைப் போலவே நம்முடைய நோக்கம் நாலு பக்கமும் அன்பு உள்ளதாக இருக்க வேண்டும். ஆனால் பிரத்யட்சமாய்ப் பணிபுரியும் போது அக்கம் பக்கத்திலிருப்பவர்க்கே அதைப் புரிய முடியும். பணியைக் கையினால்

செய்கிறோம். அன்பையோ உள்ளம் செலுத்துகிறது. கருத்தோ அறிவிலே உதிக்கிறது. அன்பும் கருத்தும் மிகப் பரந்த முறையில் இருக்க வேண்டும். ஆனால் கை அப்படிப் பரந்ததாக இருக்க முடியாது. பக்கத்தி லிருப்பவர்களுக்கே அதனால் பணிபுரிய முடியும். அன்பிலும் கருத்திலும் அமைந்திருப்பவன் இறைவனே!

□□ அல்லிப் பூவின் இதழ்கள் உதிர்ந்து போனாலும், அதன் வடு மட்டும் தெரியும். அது மாதிரியே மனிதனின் அகங்காரம் முற்றும் நீங்கினும் அதன் முந்திய அடையாளங்கள் இருக்கும். ஆயினும் அதனால் யாதொரு கெடுதியும் உண்டாவதில்லை.

□□ நாக்குக்குக் குழம்பின் சுவை தெரியும். அதே போல் கருத்துள்ளவன் சொற்ப நேரமே அறிஞரோடு பழகினாலும் அறவழியின் தன்மையை அறிந்து கொண்டு விடுகிறான். அகப்பைக்குக் குழம்பின் சுவை தெரியாது. அதே போல், மூடனொருவன் வாழ்நாளெல்லாம் அறிஞ ரோடு பழகினாலும் அறத்தை அவன் அறிவதில்லை.

□□ பசுவின் பின்பாகத்துக்கு பூஜை செய்கிறார்களே! கோயிலில் விஸ்வரூப தரிசனத்தின் போது பகவானுக்கு எதிரில் பசுவைப் பின்புறமாகத் திருப்பி நிறுத்தி வைக்கிறார்கள்! பசுவின் பின் பக்கத்தில் மகாலட்சுமி வாசம் செய்கிறாள் என்பது ஐதீகம். மேலும் 'பசு' என்னும் இரண்டெழுத்தை திருப்பி எழுதுங்கள். 'சுப'மாகி விடவில்லையா! ஆகையால் பசுவைத் திருப்பி நிறுத்தி பின் பாகத்துக்குப் பூஜை செய்து சுபத்தை அடைகிறோம்.

□□ அன்பாய் இருப்பதைக் காட்டிலும் உயர்ந்த அறிவு வேறென்ன இருக்கிறது? நீ வருவதை விரும்பாமல்

ஒருவர் கதவையடைத்தால் சாவியின் துளை வழியே எட்டிப் பார்க்காதே; துணிவிருந்தால் கதவை உடைத்து எறி! இல்லாவிட்டால் வெளியே போய்விடு.

□□ நம்மிடம் உள்ள நற்செல்வமும், பெருங் கெடுதியும் நமது நாக்குத்தான். நாக்கு நம் கட்டுக்கு அடங்கினால் அதைவிடச் சிறந்தது வேறு இல்லை. நாம் அதன் கட்டுக்கு அடங்கினால் அதைவிடத் தீயதும் இல்லை. இறைவனை பூஜிக்க நாக்கே உதவுகிறது!

□□ ஆசையானது நற்குணத்தையும் ஆத்ம லாபத்தையும் கெடுக்கும். வெப்பத்தையும் பயத்தையும் கொடுக்கும். நல்ல கண்களை குருடாக்கும். எதிலும் கொஞ்சமும் அமைதியின்றி அலைவிக்கும். அதனால் ஆசையை விடு.

□□ எவன் ஒருவன் நாள்தோறும் தன் சக்திக்குத் தகுந்தாற் போல் கிடைக்கும் நேரத்தில் சாஸ்திரத்திலோ, கீதையிலோ உள்ள நான்கு வாக்கியங்களைப் படிக் கிறானோ, அவன் தவம் செய்ததாகவே கருதப்படுகிறான். அவனுக்கு எந்தக் கஷ்டம் வந்தாலும் அது சுலபமாகவே நிவர்த்தி ஆகும்.

□□ தாய் தந்தை, குரு இவர்களின் கஷ்டத்தை அறிந்து அதைப் போக்குகிறவன் தவம் செய்த பலனை அடை கிறான். மூவரும் மும்மூர்த்திகளாகவும், முப்பெரும் தேவர்களாகவும் போற்றத் தகுந்தவர்களாவார்கள்.

□□ விளையாட்டிற்காகக்கூட யாரிடமும் கோபிக் காதே! ஏனெனில் விளையாட்டிற்கென்று விஷம்

சாப்பிடலாமா? தண்ணீரில் காறி உமிழாதே, தண்ணீரில் ரத்தத்தைப் பெருக்காதே! மயிர், நகம், எலும்பு, சாம்பல் இவற்றைத் தண்ணீரில் எரியாதே! குடிநீரில் அழுக்குத் துணியைத் தோய்க்காதே. அப்படிச் செய்தால் நமக்குத் கடவுள் கொடுத்திருக்கும் நன்கொடைகளைத் துர்விநியோகப்படுத்தி அவரை அவமதிப்பதாகும்.

□□ பழிவாங்குவது ஆரம்பத்தில் இனிக்கும். சிறிது போதில் கசப்பாக மாறும். இறுதியில் எய்தவனையே திரும்பி வந்து கொல்லும். அதனால் அந்த எண்ணத்தை அடியோடு விடு. தனக்காக மட்டும் வாழ்கிற மனிதன், மனிதர்களிலே மிகக் கேவலமானவன்.

□□ மனிதனுக்கு வியாதி என்பதே வரக் கூடாது. தலைவலி வந்தால் தாங்க முடியாது. அவதிப்படும் போது, பல்வலி வந்தால் தலைவலி பரவாயில்லை என்று தோன்றும். வயிற்று வலி வந்தால் இவை இரண்டும் பரவாயில்லையே என்று தோன்றும். இதேபோல் மனிதன் பொருளாதாரத்தினாலும், சாப்பாட்டுக்கும் கஷ்டப்படும் போது தன்னைவிட தன் தகுதிக்கும் அந்தஸ்துக்கும் குறைந்தவனை நினைத்தால் நமது கஷ்டம் பரவாயில்லை என்று தோன்றும். ஒருவனுக்கு பெரிய கஷ்டம் அல்லது ஆபத்து வரும்போது இதைவிட பெரிய ஆபத்திலும் கஷ்டத்திலும் உள்ளவனை நினைத்தால் இந்தக் கஷ்டம் பெரிதாகத் தெரியாது. இதற்கெல்லாம் பொறுமையும், தன்னடக்கமும், தெய்வ நம்பிக்கையும் வேண்டும். இன்று என்ன செய்வது என்று யோசிப்பதைவிட நாளை நம் கஷ்டம் தீரும் என்ற நம்பிக்கையே ஒருவனது வாழ்க்கையை உயர்த்தும்.

□□ மாதா பிதாக்கள் பிள்ளை பெறுகின்ற விஷயத்தில் பிரசவ வேதனை தொடங்குவதில் இருந்து, வித்தையும் அறிவும் கற்பிக்கிறவரை எவ்வளவு கஷ்டப்படு கிறார்களோ அதற்கு ஈடாக நாம் எத்துணை ஜன்மம் எடுத்து அவர்களுக்கு உதவி செய்தாலும் காணாது. அதனால் பெற்றோர்களை ஆயுள் வரை அவமரியாதை செய்யாமல் காப்பாற்றும் பொறுப்பு பிள்ளைகளைச் சேர்ந்தது.

□□ ஒருவன் தன் சண்டித்தனத்தையும், வேகத்தையும் கோபத்தையும் தனது குணபாவம் உள்ளவனிடம் தான் காட்ட வேண்டுமே தவிர பசுக்களிடத்திலும், பிராமணர் களிடத்திலும், ஸ்திரீகளிடத்திலும், அனாதைகளிடத் திலும், புத்தி சுவாதீனம் இல்லாதவர்களிடத்திலும், பேடியினிடத்திலும் காட்டக் கூடாது. இப்படிக் காட்டினால் இலையுதிர் காலத்தில் பழுத்த இலை மரத்திலிருந்து உதிர்வது போல் இவர்களது செல்வாக்கும், மரியாதையும் போய்விடும். இது எதுபோல் என்றால். நன்கு வேர் ஊன்றிய மரமாக இருந்தாலும் வேகமாக அடிக்கும் காற்றால் ஒடிந்து விழுவது போலாகும்.

□□ மன்னிப்பு; மன்னிப்பு; மன்னிப்பு; தீமை செய்தவர்களை மன்னித்து விடுவதே சிறந்த செயலாகும்; பெருமையும் ஆகும். பழிக்குப் பழி வாங்குவது நியாயம் என்று அறிவாளிகள் சொல்ல மாட்டார்கள். பழிக்குப் பழி வாங்குவது நியாயம் என்று காரணத்துடன் சொல்ல எவராலும் முடியாது. ஒரு சமயம் பழிக்குப் பழி வாங்குவது நியாயம் என்று தோன்றினால் அப்போதும் மன்னித்து விடுவதுதான் மிகவும் பெருமையாகும்.

□□ மறுபடியும் சொல்கிறேன். ஓ! மனிதனே கேள். உண்மையான வெற்றி எது என்றால் விரோதிகளை மன்னித்து விடுவதுதான். அது மட்டுமல்ல; அவர்களுக்கு உதவி செய்து அவர்கள் வெட்கப்படும்படியும் நாம் நடந்து கொள்ள வேண்டும்.

□□ பணத்தைத் தேடித் தேடிக் குவித்து வைத்துக் கொண்டிருப்பதால் உண்மை இன்பம் உண்டாகாது. உண்மையான இன்பம் நல்லவர்களுக்கு உதவி செய்வதனால்தான் உண்டாகிறது. அதனால் ஓ! மனிதனே! கொடுத்துக் கொடுத்து இன்பம் அடைவாயாக!

□□ நல்ல வழியில் தம் பொருளைச் செலவிடுகின்ற பணக்காரர் படிப்படியாகத் தம்முடைய துன்பம் தம்மை விட்டு நீங்குவதைக் காண்பார். நல்ல வழியில் பொருளைச் செலவிடாமல் தேவைக்கு மேலும் பொருளைச் சேர்த்துக் கொண்டு போகின்றவன் துன்பத்தையும் கூடவே சேர்த்துக் கொண்டு போவதைக் காணலாம்.

□□ தங்கம் மனிதனுடைய வாழ்க்கைக்கு அவ்வளவு முக்கியமானதல்ல என்ற காரணத்தினால்தான் கடவுள் அதைப் பூமிக்குள் மறைத்து வைத்திருக்கின்றார். வெள்ளியும் மேலானதல்ல என்பதனால்தான் பல மக்கள் அதைக் காலில் அணியாக அணிகிறார்கள். இதனால் பொன்னும் வெள்ளியும் ஆண்டவன் விரும்பாதவைகள் என்று தோன்றவில்லையா? அதனால் பொன்னும் வெள்ளியும் ஒதுக்கப்பட வேண்டியவையாகும்.

□□ தேவைக்கு மேற்பட்ட பொருளைத் தேடுதல் பிசாசைத் தேடுவது போல ஆகும். இது எவருக்கும் நல்லதல்ல. ஆகவே இரவும் பகலும் தேவைக்கு மேல்

பொருளைத் தேடுகின்றவர் செயல் நியாயமானதல்ல. அப்படி இறைவன் அதிகமாகக் கொடுத்தால், தான தர்மம் செய்து மகிழ்ச்சி அடைவாயாக!

□□ தம் இல்லத்தையும், உடலையும் எப்படி நாகரிக உலகிற்கு அழகு படுத்துகின்றோமோ, அதைப் போல நம் அகத்தினையும் அன்பென்னும் சத்திய நியதியில் அழகுறச் செய்து, நல் ஞானம் பெறுங்கள். உடல் அழகைக் கண்டு மகிழ்வதைப் போல் அக அழகை அழகுபடுத்திடுங்கள். இன்றைய காலநிலையிலிருந்தே ஞான உபதேசம் பெறுங்கள்.

□□ ஒவ்வொரு நாளும் பலதரப்பட்ட எண்ணத்தின் மோதலில் இருந்தும் நாம் தப்பி, நல்லுணர்வையே நம் ஆத்மா சேமிக்கும் அமிர்தமாய் நம்மை நாம் பக்குவப்படுத்திப் பல ஆத்மாக்களை அப்பக்குவ ஜெயத்திற்கு ஈர்த்துச் செயல்படுத்திட வேண்டும். இதை உணர்ந்து 'நான்' என்ற தனித்த நிலையை விட்டு எல்லாமுடனும் எல்லாமாய் நம் ஆத்மாவும் ஒளிரும் வழி முறை பெற்று எல்லாமே ஒளிரச் செய்ய வேண்டும். அதுவே ஒவ்வொருவருடைய 'தர்மமாக' அமையும்.

□□ நாம் உறங்குவதற்கு முன் ஒரு நிமிடம் நம்மை ஜெபத்துடன் கலக்கும் நிலைப்படுத்தி, நம் தாய் தந்தையரை வணங்கி, நம் இஷ்டத் தெய்வத்தை 'ஓம்' என்ற நாதத்துடன் ஒரே எண்ணத்திலிருந்து பக்தி பூண்டு ஜெபித்துக் கொண்டே உறங்கினால், உறக்கத்தில் உள்ள நிலையில் நம் உயிரைச் சுற்றியுள்ள நம் ஆத்மாவுடன் நாம் எடுக்கும் சுவாசத்தினால் 'ஓம்' என்ற ஆண்டவனின் ஜெபமே சுழன்று கொண்டிருக்கும். அதனால் நமக்குத் தேவ சொப்பனங்கள் தோன்றும்.

□□ அதிக வசதி உள்ள பணக்காரர் தன் வீட்டில் மூன்று வகையினருக்கு இடவசதி கொடுத்து சம்ரட்சணை செய்யக் கடமைப்பட்டவர் ஆவர். இதனால் நன்மையே அதிகம்! வயது அதிகமான தாயாதிகாரரை வைத்திருப்ப தால் அதன் மூலம் குல தர்மங்களையும் குல ஆசாரங்களை யும், முன்னோர்கள் செய்த தான தர்மத்தையும் அடிக்கடி தெரிந்து கொள்ள முடியும்; நல்ல குலத்தில் உதித்த தரித்திரனான சிநேகிதன் மூலம் நல்ல நன்மையான உபதேசங்களைப் பெறமுடியும். குழந்தைகள் இல்லாத சகோதரர் இவர்களது பொருள்களை பாதுகாத்து வசதி குறையாமல் இருக்கப் பாடுபடுவர்.

□□ எவன் ஒருவன் வசதியிருந்தும் தன்னிடம் வேலை செய்யும் பணியாட்களுக்குக் கொடுக்காமல் தான் மட்டும் நல் உணவை உட்கொள்ளுகிறானோ, எவன் கன்று குட்டிக்குப் பால் கொடுக்காமல் பசுமாட்டின் பாலை கறந்து குடிப்பானோ அவன் மாபாவம் செய்தவனுக்கு ஒப்பாவான். இவைகளைச் செய்து கொண்டே தான தர்மம் செய்தும் பயனில்லை; நரகம்தான் கிடைக்கும்.

□□ சுண்ணாம்பு தடவிய வெற்றிலை, பாக்கு இவற்றை உட்கொள்ளாமல் வெறும் வெற்றிலையையோ அல்லது வெறும் பாக்கையோ போடக் கூடாது. வெற் றிலையின் பின்பக்கம்தான் சுண்ணாம்பு தடவ வேண்டும். முன்புறம் தடவக் கூடாது.

□□ வெற்றிலையை வெளிப்புறமாக மடிக்கக் கூடாது. காலையில் பாக்கை அதிகமாகவும், பகலில் சுண் ணாம்பை அதிகமாக உட்கொள்ளுவது ஆயுளை விருத்தி செய்ய உதவும், மனைவி கணவனுக்கு வெற்றிலை

மடித்துக் கொடுக்கலாமே தவிர, கணவன் மனைவிக்கும், பையன் தாயாருக்கும், பெண் தந்தைக்கும் மடித்துத் தரக்கூடாது.

□□ பைத்தியக்காரனிடமும், சிறு குழந்தைகளின் மழலையிலும், சூது வாது தெரியாத பெண்ணிடமும் உண்மை இருக்கும். இந்த உண்மையை சாம்பிராணியிலிருந்து வாசனை போலவும், மோரிலிருந்து வெண்ணெய் போலவும் சிரமமின்றி வரவழைக்க வேண்டும்.

□□ சாப்பிட்டவுடன் கிரகஸ்தன் தாம்பூலம் போட வேண்டியது. வெற்றிலையின் நுனியில் பாவமும், மூலத்தில் வியாதியும், நரம்பில் புத்திக் குறைவும் உள்ளதால் இவற்றை தள்ளிவிட வேண்டும்.

□□ எல்லோரையும் படைத்த கடவுள்தான் உன்னையும் படைத்திருக்கிறார். எல்லோருக்கும் உள்ள ஆண்டவன் கட்டளை உனக்கும் உண்டு. ஆகவே எவரையும் நீ தாழ்ந்தவன் என்றோ உயர்ந்தவன் என்றோ தாழ்த்தியோ உயர்த்தியோ பேசாதே! அப்படிப் பேசுவது கடவுளின் கட்டளையை மீறுவதாகும்.

□□ பகையாளி நண்பனாக மாறினாலும் நீ அவனை நம்பாதே. ஆனால் தான் செய்த தீமைக்காக வருத்தப்படுகிறவனை மன்னித்து விடு. தீமையைச் செய்துவிட்டு அதைப் பற்றி கவலைப்படாமல் இருப்பவனை நண்பனாகக் கொள்வதும் குற்றமாகும்.

□□ ஒருவருடைய பட்டம், பதவி முதலியவைகளைக் கொண்டு மதிப்பதும், அவை இல்லாதவர்களை அவமதிப்பதுமாகிய வேலையைச் செய்யாதே! பசுவை

அதன் அழகிய தோற்றத்தைக் கொண்டு மதிப்பிடலாமா? அதனால் உண்டாகும் பயனைக் கொண்டுதானே அதை மதிப்பிட வேண்டும். பெருமை பெரிதல்ல; பயன்தான் பெரிது.

□□ எவன் ஒருவன் தன்னை அழைக்காமல் இருக்கும் திருமண வீட்டுக்குச் செல்கிறானோ, எவன் குல தெய்வம் அருகிலிருந்தும் வணங்காமல் இருக்கிறானோ, எவன் தன் இரகசியங்களை பிறர் கேளாமல் இருக்கும் போது சொல்கிறானோ, எவன் வசதி இருந்தும் பிதுரர்களை திருப்திப் படுத்தவில்லையோ, எவன் நல்ல குணம் உள்ளவனை சிநேகிதம் செய்து கொள்ள வில்லையோ, எவன் சத்துருவை நம்பிக் கொண்டு சிநேகிதனை வெறுக்கிறானோ. எவன் தனது கலகலப்பாக உள்ள மனைவி மீது வீண் சந்தேகப்படுகிறானோ, எவன் உடனடியாகச் செய்ய வேண்டிய காரியத்துக்கு தாமதிக்கிறானோ, எவன் படிக்காமல் கர்வம் கொள்ளுகிறானோ, எவன் சோம்பேறியாக இருந்து கொண்டு சம்பாதிக்க ஆசைப்படுகிறானோ, குடும்ப குல கௌரவத்தை எவன் அழிக்க முற்படுகிறானோ, எவன் தனக்கு பக்க பலமாக உள்ள பலசாலியை துவேஷம் செய்கிறானோ, எவன் நாத்திக வாதம் புரிபவனிடம் சிநேகம் கொள்ளுகிறானோ, எவன் குருபக்தியை தன் இஷ்ட காரியத்திற்கு பயன் படுத்துவானோ அவனவன் எல்லாம் தான் விரித்த வலையில் தானாக விழுந்து மீள முடியாமல் தவிப்பவர்கள் ஆவார்கள். கடைசியில் வருத்தப்படுவதைவிட முதலிலேயே கவனமாக இருப்பது சரியாகும்.

□□ நாம் அடிக்கடி உண்மையான இன்பத்தை விட்டு விலகுகின்றோம். இன்பம் இருப்பதாக எண்ணிப்

பணத்தைச் செலவிடுகின்றோம். கடைசியில் அதனால் நாம் செலவழித்த பொருளுக்கு ஏற்ற இன்பத்தைப் பெறுவதில்லை. அதனால் நம்மிடம் துன்பமும் வறுமையும் வந்து சேருகின்றன.

□□ ஒருவன் குற்றம் செய்திருப்பினும், அக்குற்றம் அவன் அறியாமை காரணமாகச் செய்யப் பெற்றதாயின் அவன் மன்னிக்கப்பட வேண்டும். அவன் அறியாமை காரணமாகக் குற்றம் செய்தானா, அறிந்தே குற்றம் செய்தானா என்பதை அறிவதற்கு நீதிபதிகள் தகுதி உள்ளவர்களாய் இருத்தல் வேண்டும். ஆகவே ஆளுகின்ற அரசன் தகுந்த நீதிபதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அதற்கு அவ்வரசன் நிறைந்த அறிவுள்ளவனாயிருத்தல் வேண்டும். கோன் கெட்டால் குடி கெடும் என்பது இதற்காகத்தான்.

□□ என்றைக்கும் உண்மை உண்மைதான்! பொய் பொய்தான். பொய்யை மெய்யாகவோ மெய்யைப் பொய்யாகவோ நிரந்தரமாக மாற்றிவிட முடியாது. ஆகவே எப்போதும் மனசாட்சிக்கு விரோதமில்லாமல் நடக்கிறவர் எவ்விதக் குறைபாடும் இன்றி நலமடைவர்.

□□ வாழ்வதென்றால் என்ன? எந்த இன்பம் நிலை அற்றதோ அந்த இன்பத்திலே குளித்துக் கொண்டிருப்பதல்ல. நிலையான இன்பம் - நிலையான செயல் ஆகியவைகளில் ஈடுபட்டிருப்பதே இன்பமாகும். சிறந்த வாழ்க்கையாகும். எவ்வளவு நன்றாக வாழ முடியுமோ அவ்வளவு நன்றாக வாழக் கற்றுக் கொள்வது நல்லது. தம்மால் வாழ முடிந்த அளவுக்கு வாழத் தெரிந்து கொள்ளாதவர்கள் தங்கள் வாழ்க்கையை வீணாக்கியவர்களாவார்கள்.

□□ சமய வாழ்விற்கு உயிர் போன்றது சமய தத்துவ அறிவு. சமய வளர்ச்சிக்கு அதுவே அடித்தளம். எனவே அனைவரும் தத்துவங்களை அறிந்து, வாழ்க்கையை அமைத்து இம்மையிலும், மறுமையிலும் பயன்பெற வேண்டும். அதுவே இந்து மத தர்மம்.

□□ அறிவுள்ள பொருள்கள் இரண்டுதான்: பேரறிவுடைய இறைவன் ஒருவன். மற்றது சிற்றறிவுடைய எண்ணற்ற உயிர்கள். இவற்றுள் உயிர்கள் அறிவு மயங்கிக் கேவல நிலையில் இருக்கின்றன. அவற்றிற்கு ஏதேனும் உதவி செய்ய வேண்டுமாயின் இறைவன் ஒருவனைத் தவிர, அதைச் செய்வதற்கு அங்கு வேறு ஒருவரும் இல்லை. இந் நிலையில் உயிர்களுக்கு இறைவன் துணைபுரிய வேண்டுமென்பதில்லை, அதனால் அவன் ஒரு பயனையும் அடையப்போவது இல்லை. இருப்பினும் துன்புறும் உயிர்களைக் கண்டு இரக்கங் கொண்டே கருணை காட்ட உள்ளங் கொண்டான் இறைவன். அதனால் நாம் இறைவனுக்கு மிகவும் கடமைப்பட்டவர்களாவோம்.

□□ எவரொருவர் நல்லனவற்றையே நினைத்து நல்லனவற்றையே செய்கின்றாரோ அவரே நிலையான பெயரையும் புகழையும் பெறுவார். பட்டம் பதவிகளால் மட்டும் ஒருவர் அடையும் புகழே நல்லவர்களிடத்தில் சிறந்து விளங்கும். ஆகவே, ஒவ்வொருவரும் ஒழுக்கமும் நல்ல நடத்தையும் உள்ளவர்களாய் இருக்க வேண்டும்.

□□ முட்டாள்களிடம் எப்போதும் ஆலோசனை கேட்காதே! அவர்களைத் தவிர ஆலோசனை கேட்பதற்கு வேறு ஒருவரும் கிடைக்கவில்லை என்றால் உன்

விஷயங்களைப் பற்றி நீயே ஆராய்ந்து முடிவு செய்து கொள். புத்திசாலிகளைப் போல நடக்கிறவர்களிடத்திலும் ஆலோசனை கேட்காதே. இன்னொன்று, சுயநலத்திற்காக மட்டும் எப்போதும் எதையும் செய்து கொண்டிருக்காதே! பிறர் நலத்தையும் கவனிப்பாயாக!

□□ கருணை உள்ளவன் பிறர் நன்மைக்காகவே பாடுபடுவான். அதற்கேற்ற சந்தர்ப்பத்தைத் தேடித் திரிவான். துன்பத்தில் சிக்கிக் கொண்டவர்களை அதனின்றும் மீட்டு விடுவான். கருணை உள்ளவன் கடவுளின் அருகில் இருக்கிறான் என்று உணர்ந்து கொள்.

□□ அறிவுள்ள மகனே! நான் சொல்வதைக் கெள்! காமம், காதல் என்ற இரண்டு வார்த்தைகள், பொருள் தெரியாமலே பல இடங்களில் பேசப்படுகின்றன. 'காதல் வேறு; காமம் வேறு' என்பதைப் பலர் அறிவதில்லை. ஒருவனும் ஒருத்தியும் ஒருவரை ஒருவர் அன்பைத் தவிர வேறு எவ்விதக் காரணமும் இன்றி விரும்புகின்ற விருப்பத்திற்கே காதல் என்று பெயர். அது புனிதமானது. ஆனால் காமம் என்பது இந்திரிய உணர்ச்சியால் ஈடுபட்டு அதைப் போக்கிக் கொள்வதற்காக ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் விரும்புவதாகும். கடவுளின் மேல் பேரன்பு கொள்வதைக் கூட காதல் என்று சொல்லலாம். ஆனால் காமம் ஆண், பெண் உறவில்தான் முற்றுப் பெறுகிறது.

□□ இன்பமும் துன்பமும் கலந்ததே வாழ்க்கை. அவை வினைப் பயனால் வருவன என்பதை அறிந்தோம். அவ்வின்ப துன்பங்களை அனுபவிப்பதற்காகச் செய்யும் வினைகள் மேலும் பாவ புண்ணியங்களாக உயிரைத் தொடரும். இயல்பாக உயிர் இன்பத்தையே நாடும்.

அவ்வின்பத்தை நுகர்வதற்குத் துன்பப்பட வேண்டும். அவ்வாறு பெற்ற இன்பமோ நிலையானதன்று. அதன்பால் சிறிது நேரத்தில் வெறுப்புத் தோன்றி விடும். அதனால் அவை சிற்றின்பம் எனப்படும். என்றும் குறையாத இன்பத்தைக் கொடுப்பதே பேரின்பம். அதனை அடைவதற்கு ஒரே வழிதான் உண்டு. சிற்றின்பத்தின் மீதான பற்றை விட்டால் பேரின்பத்தை எய்த இயலும்.

□□ உண்மை நிலையாகிய சொரூப நிலையில் ஏகனாக நிற்கும் இறைவனைச் சிவம் என்று கூறுவர். அதே இறைவனைப் பொது நிலையாகிய பரந்த நிலையில் சக்தி என்று கூறுவர். சக்தி என்றால் ஆற்றல் என்பதே பொருள். இதனால் சிவம் வேறு, சக்தி வேறு அல்ல என்பதும், இரண்டும் ஒரே இறைவனின் வெவ்வேறு இயல்பைக் குறிப்பனவேயாகும் என்பதைத் தெரிந்து கொள்ளவும்.

□□ சரியை, கிரியை, யோகம் இம் மூன்றும் ஞானத்தை அடைவதற்கான படிகளே. ஞானம் ஒன்றே முடிவான பக்தி. முரமுத்தியைக் கொடுப்பது என்பதே சித்தாந்த முடிவாகும்.

□□ சினங் கொள்ளுதல் எளிது. சினத்தை அடக்குதல் அரிது. ஆதலின் அரியதைச் செய்தலே பெருமையாகும். இன்சொல்லினாலன்றி வன்சொல்லினால் ஒருவரும் மகிழ்ச்சியடையார்.

□□ தாய் தந்தையர்களை இழந்து, திக்கற்றவர்களாய் இருந்து உண்ணும் உணவுக்கும் வழியற்ற அனாதைக் குழந்தைகளுக்கு ஆதரவு அளியுங்கள். கணவனை இழந்து வாழ வகையறியாத ஏழைக் கைம் பெண் மானம்

கெடாமல் வாழ வழி காட்டுங்கள். பொதுவாக ஆதரவற்றவர்களுக்குக் கை கொடுத்து உதவி செய்யுங்கள். அந்நிலையில் கடவுள் உங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யப் பக்கத்திலேயே காத்திருப்பார்.

□□ ஓ மனிதனே! வாழ்க்கையின் எந்த நிலையிலும் நேர்மையாக நடக்கக் கற்றுக்கொள். எந்த மாறுதல் ஏற்பட்ட போதிலும் மனத் திருப்தியுடன் இருக்கப் பழகிக்கொள். இவற்றால் எந்த நிகழ்ச்சியிலும் நீ நன்மையே பெறுவாய். அந்த நன்மைகளெல்லாம் பிறர் புகழக்கூடியனவாகவே இருக்கும் அதனால் இறைவனின் கண் பார்வையும் ஏற்படுமே!

□□ தான் வாழ நினைக்கிறவன் மற்றவர்களும் வாழ வேண்டும் என்று நினைக்க வேண்டும். மற்றவர்களை வதைக்கின்றவன் தான் மட்டும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து விட மாட்டான். மற்றும் இறைவன் தண்டனையும் அவனுக்கு உண்டு.

□□ அறிவின் துணைகொண்டு மனத்தை நல்ல வழியில் செலுத்தி ஆன்மாவை எப்போதும் பரிசுத்தம் உள்ளதாக வைத்துக் கொண்டு இருப்பாயாக! மனத்தை அறிவினால் அடக்கி ஆள வேண்டும். சில சமயங்களில் அது முரட்டுக் குதிரையைப் போலச் செல்லக் கூடியதே! அது கேடான வழியில் செல்லாதபடி அறிவாகிய கடிவாளத்தைக் கொண்டு அதை அடக்கி நடத்த வேண்டும். அதுவே தர்மம்.

□□ உங்கள் கட்டளையில் நியாயம் கலந்திருக்க வேண்டும். உங்கள் அதிகாரத்தில் அன்பு பெருகி இருக்க வேண்டும். அப்போது வேலைக்காரர்களின் மனத்தில்

அச்சத்திற்கு மாறாக ஆனந்தம் தோன்றும். அவர்கள் உழைப்பின் மீது அவர்களுக்கு இன்பம் உண்டாகும். இதுவே தர்மமான வழி.

□□ கொலை செய்தவன் தன் விரோதியைத் தீர்த்துக் கட்டி விட்டதாகத் தனக்குள் மகிழ்ச்சி அடையலாம். குற்றம் வெளியாகும் போது உண்டாகின்ற கேவலம் அளவு கடந்ததாகும். குற்றம் வெளியாகவில்லை என்றாலும் கொலையாளியின் மனசாட்சி அவனைச் சும்மா விடாது. பழிக்குப் பழி வாங்குவது சிலருக்குச் சுலபமாக இருக்கலாம். ஆனால் தீமை செய்தவனை மன்னித்து விடுவதனால் உண்டாகும் பெருமை அளவு கடந்ததாகும்.

□□ நீதி அல்லது நேர்மை என்ற அடிப்படையில்தான் மக்கள் சமுதாயம் வாழ வேண்டும். நீதியை அடிப் படையாகக் கொண்டிருந்தால்தான் தனிப்பட்டவரின் வாழ்க்கையும் இன்பம் உள்ளதாய் இருக்கும். மனிதர் களுக்கு ஆசை இருக்கலாம். ஆனால் பேராசை இருக்கக் கூடாது. நீதி உள்ள மனத்தில் எப்போதும் பேராசையைக் காண முடியாது. மகனே! மற்றவர்களின் பொருளைப் பொறாமையுடன் பார்க்காதே! அந்நியர்களின் பொருளின் மீது ஒரு போதும் ஆசை கொள்ளாதே! மகனே! ஆசைக்கு அடிமைப்பட்டு விடாதே! அவை போலவே கோபத் திற்கும் இடங்கொடுத்து விடாதே! துன்பத்திற்கு இடமான எந்தச் செயலிலும் இறங்கிவிடாதே! அது கடவுள் விரும்பாத தர்மம். அதை ஏன் நீ கடைபிடிக்க வேண்டும்?

□□ ஓ மனிதனே! நீ அவ்வப்பொழுது உனக்குள்ள வேலையைச் செய். தற்புகழ்ச்சியை விரும்பாதே! நீ

ஏமாற்றப்பட மாட்டாய். தற்பெருமையை விரும்பாமல் உன் வேலையை நீ செய்கின்றபடியால் நீ உயர்வடைவாய். கடவுள் உனக்குத் துணை இருப்பார்.

□□ ஒரு வினையைச் செய்ய வேண்டுமாயின் முதற்கண் அதன்பால் விருப்பம் பெற வேண்டும். அடுத்து அதைப்பற்றிச் சிந்திக்க வேண்டும். முடிவில் செயலில் ஈடுபடவேண்டும். இதனை முறையே விருப்பம், அறிவு, வினையாற்றல் எனக் கூறலாம். இச்சை, ஞானம், கிரியை என்பது இதுவே. இம்மூன்றையும் இறைவனின் சக்திகளாகக் கருதுவர். இவற்றுள் இச்சா சக்தி மட்டும் எப்பொழுதும் ஒரே நிலையாக இருக்கும். ஒரு பொருளின் மேல் விருப்பம் ஏற்பட்டால் அது மனத்தில் மாறுபடாது நிற்பது இயல்பு. ஏனைய ஞானசக்தியும் கிரியாசக்தியும் ஒரே நிலையில் நிற்காது. கூடியும் குறைந்தும் இருக்கும். விரும்பிய பொருளைப் பெறுவதற்குப் பல வழிகள் அறிவுக்குத் தோன்றும். அது போன்று அதனை அடைவதற்கான முயற்சிகளும் பலமாக இருப்பதும் இயல்பே! இவையனைத்தும் இறைவனின் திருவிளை யாடல்களேயாகும்.

□□ பரம்பொருள் ஒன்றுதான். விநாயகரும், முருகனும், அம்பாளும், விஷ்ணுவும் அனைத்து மூர்த்தங் களும் பரம்பொருளான ஈசனின் கூறுபாடுகளே! ஈசன் ஒருவனே என்று ஏற்றுக் கொண்ட மதம் இந்து மதம். ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பது திருமூலர் வாக்கு ஆகும். இதை நன்றாக மனத்திற் கொள்க. அவ்வாறு கொள்வீர்களானால் உங்களுக்கு மரண பயம் இல்லை. மேலும் பிறவி எடுக்கும் நிலையும் வராது. இதனை

என்றும் மறவாது நினைத்து வாழ்ந்தால் உயர்நிலை யடைவீர்!

□□ ஒருவன் தான் செய்த வினையின் பயனை எவ்வாற்றாலும் அனுபவித்தே தீர வேண்டும். உயிர்கள் பல பிறவிகள் எடுப்பதற்குக் காரணம் அவைகள் செய்த வினைகளின் பயனை அனுபவிப்பதற்கேயாகும். ஒரு பிறவியில் செய்த வினைகளின் பயன்களை அப்பிறவி யிலோ அல்லது அடுத்து வரும் பிறவிகளிலோ முழுவதும் அனுபவித்துவிட இயலாது. அனுபவித்துக் கழிந்தது போக எஞ்சிய வினைப்பயனையும் அப்பிறவியில் புதிதாகச் சேர்ந்த வினைகளின் பயனையும் அனுபவிக்க மற்றுமோர் பிறவி எடுத்தல் வேண்டும். இவ்வாறே இது ஒரு சங்கிலித் தொடர் போன்று நீண்டு கொண்டே போகும். இப்பிறவியை அறுக்கத்தான் நாம் புண்ணியம் செய்ய வேண்டும் என்று தர்மம் விதித்துள்ளது.

□□ குழந்தை பிறந்த நாலாவது மாதத்தில் ஒரு நல்ல தினத்தில் அக்குழந்தைக்கு சூரிய தரிசனம், சந்திர தரிசனம், பசு தரிசனம், தேவாலய தரிசனம் செய்விக்க வேண்டும். செவ்வாய், சனி தவிர, மீதி உள்ள கிழமை களில் பௌர்ணமி வரும் சமயம் இவைகளைச் செய்வது நல்லது.

□□ சிறு லாபத்தால் அதிக சந்தோஷமடைகிறவன், சத்துருவை அண்டிப் பிழைக்கிறவன், பெண்களின் சம்பாத்தியத்தில் குடும்பம் நடத்துகிறவன், கஞ்சனிடம் யாசிக்கிறவன், தற்புகழ்ச்சி கொள்கிறவன், நல்ல குலத்தில் பிறந்து கெட்ட காரியம் செய்கிறவன், தான் துர்பலமாக இருந்தும் பலசாலியை எதிர்ப்பவன்,

நம்பிக்கை இல்லாதவனுக்கு உபதேசம் செய்கிறவன், தன் சக்திக்கு அதிகமான பொருளை விரும்புகிறவன், நாட்டுப் பெண்ணுடன் காரணமின்றிப் பேசும் மாமனார், மருமகள் கொண்டு வந்த சீதன சாமான்களை வைத்து கடன் தீர்ப்பவன், பெண்களை அடிக்கடி தூஷிக்கிறவன், ஒருவனிடம் உபகாரம் பெற்ற பின்பு மறப்பவன், கஷ்டம் வரும் சமயம் தெய்வ பிரார்த்தனை செய்துவிட்டு பின் அதைச் செய்யாமல் இருப்பவன், கெட்டவனை நல்லவன் என்று சொல்பவன், தானம் செய்கிறதாக வாக்கு கொடுத்துவிட்டு பின் அதைச் செய்யாமல் இருப்பவன் ஆகிய இவர்கள் தான் வெட்டிய கிணற்றில் தானே விழுபவர்கள் ஆவார்கள். கடவுள் அநுக்கிரகம் இவர் களுக்கு அறவே இருக்காது.

□□ ஜோதிடர் வீடு, வைத்தியர் வீடு, குரு வீடு, தேவாலயம், சகோதரி வீடு, குழந்தைகள் வீடு ஆகிய இடங்களுக்குச் செல்லும் பொழுது வெறுங்கையோடு போகக் கூடாது, ஏதாவது வாங்கிக் கொண்டு செல்ல வேண்டும் சோதிடர்களை எந்தக் காரணம் முன்னிட்டும் சோதனை செய்வது தோஷம் ஆகும்.

□□ கன்று போட்டு பத்து நாள் ஆகாத பசுமாட்டின் பால், தேத்தாங் கொட்டை, நெய் கசண்டு, கன்று இல்லாத பசுவின் பால் இவற்றை குடும்பஸ்தன் சாப்பிடுவதை தவிர்க்க வேண்டும். அப்படிச் சாப்பிடுவது தோஷமாகும்.

□□ அதிகமாக பொறாமைப்படுகிறவனும், கடுஞ் சொற்களால் பேசுகிறவனும், திருமணம் ஆகாத பெண்ணிடம் ரகசியமாக தொடர்பு வைக்கிறவனும்,

துவேஷத்தை வளர்ப்பவனும், பிறர் துன்பப்படுவதைக் கண்டு மகிழ்ச்சி கொள்பவனும், இருவருக்கும் சண்டை மூட்டிவிட்டு வேடிக்கை பார்க்கிறவனும், இந்த ஜென்மத்திலேயே கடவுளின் தண்டனையைப் பெறுவார்கள்.

☐☐ விரோதத்தை விரோதத்தினால் வெல்ல முடியாது. கோபத்தை கோபத்தினால் அழிக்க முடியாது. உனக்குப் பைத்தியம் பிடிக்குமானால் அது ஆண்டவன் மேலுள்ள பிரேமையால் உண்டாகட்டும். உலகப் பொருள்களுக்காகப் பைத்தியம் கொள்ளாதே!

☐☐ உண்மையை நாடிச் செல்பவன் இடையே சில விசேஷ சக்திகள் பெற்றவுடன் தடைப்பட்டு நின்றுவிடாமல் அதற்கு அப்பாலும் முயற்சி செய்தால், கடைசியாக நித்திய ஞானமாகிய செல்வத்தை அடைவான்.

☐☐ க்ஷேத்திரங்களும் தீர்த்தங்களும் ஞானிகளுடைய சம்பந்தத்தைப் பெற்று விசேஷ மகிமையை அடைகின்றன. அவர்களுடைய பாதம் பட்டிருந்தால் அதற்கு ஒரு விசேஷம் ஏற்படுகிறது. ஈசுவரன் நேரே வந்ததைவிட அதிகமானது ஞானிகள் வரவு. ஈஸ்வரன் எவ்வளவு ஆனந்தமுள்ளவனாக இருக்கிறானோ, அப்படியே ஞானிகளும் இருக்கிறார்கள். ஞானி, ஈஸ்வரனே! அதிகம்கூட ஆவான். ஈஸ்வரனுக்காவது ஜீவாத்மாக்கள் மீது கருணை புரிந்து காப்பாற்ற வேண்டுமென்ற ஊர்க்கவலை உண்டு. ஞானிக்கு அதுகூட இல்லையே!

☐☐ உண்மைக் கல்வி நம்மைச் 'சத்தியமே தெய்வம்' என்று உணரச் செய்கிறது. சத்தியமே தெய்வம் என்று

உணரக்கூடிய மேல் அறிவின் மூலம் ஒருவனிடம் நல்ல குணங்களை நிறைக்க வேண்டும். சத்தியத்தை உணர்வதே அறிவின் நோக்கம். கல்வியின் முதல் பலன் தன்னடக்கமும், பணிவுமே. இந்தக் குணங்களைத் தோற்றுவிக்காத கல்வி பயனற்றது.

□□ தினசரி பிரார்த்தனை என்பது உன் வீட்டு வாயிலில் ஓடிவரும் தெளிந்த ஆறு போன்றது. எவனொருவன் அதில் தன்னைச் சுத்தி செய்து கொள்கிறானோ, அவன் தன்னை நிர்மலமாக்கிக் கொண்டவனாகிறான்.

□□ தீய எண்ணத்துடன் ஒருவன் பேசினாலும், செயலில் இறங்கினாலும், வண்டியை இழுக்கும் மாட்டின் காலை வண்டிச் சக்கரம் பின் பற்றிச் செல்வது போல, துன்பம் அந்த மனிதனைப் பின் பற்றிச் செல்கிறது. மகனே! தீய எண்ணத்தை அறவே விடு.

□□ ஆண்டுக்குப் பதினாயிரம் தரும் ஆஸ்தியைவிட, அல்லும் பகலும் சந்தோஷமாயிருக்கும் இயல்பே சாலச் சிறந்ததாகும். அதற்கே பாடுபடு. விருப்பத்திற்குக் குறைவாய்ப் பெறுபவன், தகுதிக்கு அதிகமாகப் பெறுவதாக அறியக்கடவன்.

□□ நீ மனநிறைவோடு இருந்து வருவாயாக! உழைப்பு என்ற பையைத் தோளில் தொங்கவிட்டுக் கொண்டு கடவுள் தியானம் என்ற திருநீற்றை நெற்றியில் பூசிக்கொண்டு காலமே நீ அணியும் கந்தை ஆடையாகக் கொள். உன் உடல் மாசு மறுவற்று இளமை மாறாமல் புனிதமாய் இருந்து வருவதாக. நம்பிக்கையே உனது ஊன்றுகோல். எல்லோரையும் நீ உனது இனத்தவராகக்

கருது. உன் மனத்தை வென்று விடுகையில் அகில உலகமும் உன் அடிபணியும்.

□□ ஆட்டு மந்தையைப் போல நடவாமையே அனைத்திலும் முக்கியமான விஷயம். பிறர் போகும் இடத்தை விட்டு நாம் போக வேண்டிய இடத்தை அறிவதே கடன். அதுவே தர்மம்.

□□ ஒருவனுக்குத் தன்னுடைய இதயத்தைக் காட்டிலும் இருளடைந்த சிறை வேறு எது இருக்கிறது? ஒருவனுக்கு தன் மனச்சாட்சியைப் பார்க்கினும் கடுமையான சிறைக் காவலன் எவன் இருக்கிறான்? ஒவ்வொருவரும் அதை உணர வேண்டும்.

□□ நிந்தனை செய்யாதே! பிறருக்குத் தீமை செய்யாதே! அறநெறிக்குக் கட்டுப்பட்டு வாழ். மிதமாய்ச் சாப்பிடு. ஏகாந்தமாய் உறங்கு. ஏகாந்தமாய் அமர்ந்திரு. எண்ணங்களை அலைய விடாமல் உயர்ந்த சிந்தனை லயத்தில் ஒருமைப்படுத்து. இவை தர்மமாகும்.

□□ எவனும் முதலில் தானே நல்ல நடத்தையில் நிலைபெற வேண்டும். பிறகுதான் பிறருக்கு உபதேசிக்கப் புறப்பட வேண்டும். இத்தகைய அறிஞன் கலக்கமுறுவதில்லை. ஒருவன் எதையாவது செய்ய வேண்டுமென்றால், அதைத் தளராத ஊக்கத்தோடும், உறுதியோடும் செய்யட்டும்.

□□ பணமும் பட்டமும் மனிதரால் விரும்பப் படுகின்றன என்பதற்காகத் தீமையின் துணை கொண்டு அவற்றைத் தேடிக் கொள்ளாதே! அது அதர்மமாகும். அதே போன்று, வறுமையும் தாழ்வும் மனிதரால்

வெறுக்கப்படுகின்றன என்பதற்காகத் தீமையின் துணை கொண்டு அவற்றைப் போக்கிக் கொள்ளாதே!

□□ நிறைமுறையோடு அனுபவங் கண்டு, வாழ்க்கையைப் பூரணமாய் வாழத் தெரிந்தவனே மனிதன். அத்தகையவன் கடவுளின் அன்புக்கு உரிய வனாவான். நம்முடன் சுடர்விடும் நித்தியப் பரம் பொருளை, இன்னதென்று அறியும் திறனற்று, நாம் வாழ்வில் அவதிப்படுகிறோம். என் கருத்தில் சீரான சிறந்த வாழ்க்கை யாதெனில், தன்னை உணர்ந்து உலகில் காணும் மனிதத் தன்மையோடு படாடோபமற்று வாழ்வதே - வயதான காலத்தில் மனிதன் பாவ வினைகளில் ஈடுபடாமல், ஆண்டவனின் முன் செய்த பிழைகளை எண்ணி வருந்தி, அதனால் அனுபவங் கொண்டு திருந்தி, ஏழைகளிடம் இரக்கங் காட்டி, அவர்களையும் ஈடேற்றி திருவருள் உணர்வில் வாழ்வாங்கு வாழ்வதே ஆகும்!

□□ கண்கள் யாவற்றையும் காண்கின்றன. ஆனால் தம்மைக் கண்டு கொள்ள அவற்றால் முடிவதில்லை. அதுபோல மனிதர் பிறர் குறைகளைப் பார்க்கிறார்கள். தம் குறையைக் காண்பதில்லை. இது தர்மம் ஆகாது.

□□ எவனொருவன் ஏகாந்த நோக்கத்தோடு ஒரு செயலின் மீது தன் கருத்தைச் செலுத்துகிறானோ அவன் தீர்மானமாக எல்லாச் செயல்களையும் செய்யும் திறனைப் பெறுகிறான். கடவுள் அவனுக்குத் துணை இருப்பார்.

□□ பற்றின்மை என்பதன் பொருள் ஒத்துழையாமை. எதுவரையில் மனிதன் விஷயங்களுடன் ஒத்துழையாமல் தூரத்தில் விலகி நிற்கவில்லையோ அது வரையில் அவன் அவற்றிடம் சிககிக் கொண்டு தவிப்பான்.

விஷயங்களோடு விளையாடிக் கொண்டு அதே சமயத்தில் அவற்றால் தீண்டப்படாதிருத்தல் அசாத்தியம் என்றாலும் இறைவன் அருளால் அது கைகூடும் என்றே சொல்ல வேண்டும். அப்படி நடப்பதே மேன்மை.

□□ நம்முடைய சமய தத்துவங்கள், விஞ்ஞானப் புதுமைகள் இவை இரண்டுக்கும் பொருந்தாத வேற்றுமைகள் எவையும் இல்லை. தர்ம சாஸ்திரம், விஞ்ஞானம் இரண்டும் அடைய விரும்புவது ஒரே எல்லையைத்தான் - ஸத்தியத்தை!

□□ நன்மை பயக்கும் அறமே என் தந்தை. நிறைந்து விளங்கும் அறிவு என்னுடைய தாய். அழியாத செல்வ மாகிய கல்வி என் நண்பன். தெளிந்த மனத்துணிவே என் தம்பி. இவர்கள் என்னுடைய மெய்யான சுற்றத்தார். சுற்றம் என்ற பெயரில் என்னைச் சுற்றி நிற்கும் மற்றவர்கள் அனைவரும் பொய் சுற்றத்தாரே!

□□ தன் முன்னேற்றத்தைக் கண்டு இறுமாந்து, திருப்திப்பட்டு விடாத தன்மை; மேலும் முன்னேற வேண்டும் என்கிற விழைவு; சக சமுதாயத்திடம் ஏற்படும் பரிவு; பொறாமை, பகைமை ஆகிய பொல்லாக் குணங்களுக்கு இலக்காகாமல், சுயநல மோகம் இல் லாமல் உழைக்கும் உழைப்பு; பரோபகார சிந்தனை - இந்த நற்குணங்கள் எவரிடம் நிறைந்திருந்தாலும், அவரை பூஜிக்க விரும்புகிறேன். அவரே மகா பவித்திரமான வராவார்.

□□ எல்லா இனத்தவரையும் சமமாகவே கருதுங்கள். மக்கள் சமுதாயத்திடம் அன்பும் ஆதரவும் கொண்டு

வாழுங்கள். ''எல்லாத் திசைகளும், அங்கே வாழும் ஜீவராசிகள் யாவும் எனக்கு நண்பர்களாக இருக்க வேண்டும்'' என்று பிரார்த்தனை செய்யுங்கள்.

□□ கப்பலை மூழ்க அடிக்க ஒரு சிறு ஓட்டையே போதுமானது. அதேபோல் மனிதனின் வாழ்வைக் கவிழ்க்க ஒரு சிறு தீய செயலே போதும்.

□□ வேலையை விடக் கவலையே அதிகமான மனிதர்களைக் கொல்கிறது. இதற்குக் காரணம் வேலை செய்வதைவிடக் கவலைப்படுவதிலேயே அதிகமான மனிதர் ஈடுபடுவதுதான். இனிமேலாவது கவலையை விட்டு நேர் வழிக்கு வாருங்கள்.

□□ மனிதனுக்கு வேண்டிய முதலாவது குணம் தைரியந்தான். ஏனென்றால், அதுவே மற்றக் குணங் களுக்கெல்லாம் உத்தரவாதம் அளிக்கக் கூடியது. தைரியத்தையளித்து ஆட்கொள்வது இறைவனே! உண்மையைக் காண்பது கஷ்டம் அல்ல. அதைக் கண்டதும் கைவிட்டு ஓடாதிருப்பது தான் கஷ்டம். நீ மட்டும் உன் உள்ளத்திலே தைரியத்துடனிருந்தால். உலகத்திலே எங்கிருந்தாலும் பரவாயில்லை.

□□ இல்வாழ்க்கையை இன்பமாக்குவது 'நம்' என்ற ஒரே வார்த்தைதான். அப்படி எண்ணுவதே தர்மமாகும்.

□□ பசுக்கள், பயிர் செய்த பூமி, மனைவியின் விருப்பம், கல்வி, வேலைக்காரன், செய்யும் பணி, கொதிக்கும் சாதம், நைவேத்திய பதார்த்தம் இவைகளை ஒரு மணி நேரம் கவனிக்காமல் இருந்தாலே வீண் நஷ்டமாகிவிடும்.

□□ ஒருவன் கல்வி கற்று முடிந்ததும் உபாத்தியாயரையும், திருமணம் ஆன பின்பு தன் தாயாரையும், காமம் நீங்கியவுடன் பெண்ணையும், நதியைக் கடந்தவன் ஓடத்தையும், வியாதி நீங்கியவன் வைத்தியனையும், பத்து வட்டி வாங்கியவன் தன் வாடிக்கைக்காரனையும் எளிதில் மறந்து விடுவார்கள். ஆனால் கடவுள் இவர்களுக்குத் தண்டனை கொடுக்க மறக்கவே மாட்டார்.

□□ ஆரோக்கிய உடம்பு, வியாதியின்மை, கடன் இல்லாத வாழ்க்கை, அலைச்சல் இல்லாத வேலை, சாதுக்களின் நட்பு, தடையில்லாத வருமானம், பயமில்லாத தூக்கம், கிணறுடன் கூடி வீடு எவனுக்கு இருக்கிறதோ, அவனுக்குக் கிடைக்கும் சுகத்திற்கு அளவேயில்லை. அவன் இறைவனால் ஆசீர்வதிக்கப் பட்ட வனாவான்.

□□ காரியம் எதுவும் இல்லாமல் அடிக்கடி வெளியூர் செல்பவன், பாபிகளின் சந்தேகத்தைப் பெற்றவன், பிறர் மனைவியைத் தொட்டுப் பேசுகிறவன், குடிப்பவன், கோள் சொல்பவன், திருடும் ஆசை கொண்டவன், டம்பச் செலவு செய்கிறவன் ஆகிய ஏழுவித காரியத்தைச் செய்பவர்கள் இறைவனுக்கு ஆகாத பிள்ளையாவார்கள். தந்தையைப் போல் இறைவன் அவர்களை கண்டித்துதான் திருத்துவார்.

□□ வேடன் ஒரு பறவையை குறி பார்த்து விடும் அம்பு அந்தப் பறவையைக் கொல்லும். அல்லது கொல்லாமலும் விடும். ஆனால் மதியூகமுள்ள ஒரு ஜோதிடனின் அல்லது மந்திரியின் ஆலோசனையை புறக்கணிக்கும் அரசனின் அதிகாரம் அம்பு விழுந்த பறவை போல் போய்விடும்.

□□ மாத்ரு பக்தி எல்லோரும் காட்ட வேண்டும். பிறந்தது முதல் கடைசி வரைக்கும் மாதாதான் நம்மைக் காப்பாற்றுகிறாள். நமக்கெல்லாம் மாதா, பிதா, குரு இவர்கள் பிரத்யட்ச தெய்வங்கள் ஆவார்கள். அவர்களுக்கு கைங்கரியம் பண்ணிக் கொண்டு எல்லோரும் க்ஷேமமாய் இருக்க வேண்டும்.

□□ ஒழுக்கமுள்ள பிள்ளைகள், உண்மை பேசும் பிள்ளைகள், பிறர் பொருளை எங்கேனும் கண்டாலும் அந்தப் பொருளுக்கு சொந்தமானவரிடம் ஒப்புவிக்கும் விருப்பமுள்ள பிள்ளைகள், இன்பமாகப் பேசும் பிள்ளைகள், எளிமையாக வாழும் பிள்ளைகள், சுறுசுறுப்பாய் இருக்கும் பிள்ளைகள், கடவுள் பற்றுள்ள பிள்ளைகள், வீட்டிலும் ஆசிரியரிடமும் நற்பெயர் வாங்கும் பிள்ளைகள் இவர்களிடம் எப்பொழுதும் கடவுள் சாந்நித்யம் உண்டு. இறைவனுக்கு அன்பான வர்கள் இவர்கள். கல்வியில் மேன்மையுறப் பண்ணுவார்.

□□ ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்தவுடன் பெண்கள் இரண்டு உள்ளங்கைகளையும் உரசிப் பார்த்துவிட்டு உள்ளங்கை நுனிப்பாகத்தில் பொருளா தாரத்திற்கு அதி தேவதையான லட்சுமி தேவியான சக்தியையும், உள்ளங்கை மத்தியில் கல்விக்கு அதிபதி யான சரஸ்வதி தேவியான சக்தியையும், உள்ளங்கை அடிப்பாகத்தில் துன்பங்களையெல்லாம் அகற்றி, இன்பத்தை மோட்சத்தை அளிக்கக்கூடிய பார்வதி தேவியான சக்தியையும் நினைத்துப் பார்க்க வேண்டும். பிறகு நித்திய கன்னிகைகளான, புனிதமானவர்களான, புண்யஸ்திரீகளான அகல்யா, திரௌபதி, சீதா, தாரா.

மண்டோதரி போன்றவர்களை மனதிலே நினைத்துக் கொண்டு எழுந்திருக்க வேண்டும்.

□□ பெண்கள் நாட்டிற்குத் தொண்டு புரிகிறேன் என்று பெருமை பாராட்டிக் கொள்வதைக் காட்டிலும் தன்னுடைய குழந்தைகளையும், தன்னுடைய குடும்பத்தில் உள்ளவர்களையும், ஒழுக்கமுள்ளவர்களாகவும், தூய்மை உள்ளவர்களாகவும், பரஸ்பரம் உதவிக் கொள்ளும் சேவா மனப்பான்மை உடையவர்களாகவும் வளர்த்து தன்னுடைய குடும்பத்திற்காக தொண்டு செய்வதில் வெற்றி பெற்றால், அது உன்னதமான பணியாகும். இறைவனது ஆசீர்வாதமும் கிடைக்கும்.

□□ 'கணவனே கண்கண்ட தெய்வம்' என்று உணர்ந்து செயல்பட்டால் இறைவன் அருளால் எல்லாவற்றையும் பெற முடியும். கணவன் தெய்வமாக நினைக்கக் கூடிய நிலையில் இல்லாமல் இருந்தாலும் கூட அவரைத் தெய்வமாக மதித்தால், பெண்களுக்கு தெய்வத்தின் அருள் குன்றாது வளரும். அக்கணவனும் கடவுள் அருளால் மேன்மையடைந்து விடுவான்.

□□ பெண்கள் கண்ணீர் விடுவது நாட்டிற்கு நல்லதல்ல! ஆகவே எந்த ஒரு காரியத்திலும் பெண்கள் மனம் கலங்கும்படி, கண் கலங்கும்படி வாழக் கூடாது. சமுதாயம் அப்படி வாழ விடவும் கூடாது. அது தர்மம் ஆகாது.

□□ விஷயங்களைச் சிந்திப்பதற்கு புத்தியிலும் ஒரு விதமான சக்தி இருக்கிறது. உண்ட உணவு ஜீரணம் ஆவதற்கு உடம்பிலே ஒருவித சக்தி வேண்டியிருக்கிறது. நாலு பேரிடம் பேசி விஷயங்களைச் சாதிப்பதற்கு

செல்வாக்கெனும் சக்தி வேண்டியிருக்கிறது. பேசும் பொழுதே பலரைச் சிரிக்க வைக்க, நகைச்சுவை சக்தி வேண்டியிருக்கிறது. துன்பங்களைத் தாங்கிக் கொள்வதற்கு இதயத்தில் ஒருவித சக்தி தேவைப்படுகிறது. இப்படி எதிலும், எதற்கும் சக்தி ஊட்டுபவள் பராசக்தியே யாவாள். அவள் அருளைப் பெற்றால் அனைத்தையும் பெறலாம்.

□□ பூமியிலிருந்து கிளம்பிய தூளியானது மேல் நோக்கித்தான் செல்லும். அதேபோல் இறைவனுடைய திருவடியை பக்தி செய்தால், இறைவனுடைய தூளி மகிமையானது நம்முடைய வாழ்க்கையை மேலே உயர்த்தும்.

□□ மத அடிப்படையில் வெளிப்படையாகச் செய்யும் காரியங்கள் எல்லாம், ஆத்ம சுத்திக்கு ஒருவனை அழைத்துச் செல்வதாகும். வாழ்க்கையில் மனிதன் உயர்மட்டத்தை அடைய வழி கூறுகின்றன. எங்கும் ஒரே பரமாத்மாவைக் காணும் நிலை கடைசியில் கிடைக்கும். உன் கடன் பணி செய்து கிடப்பதே ஆகும்.

□□ நமது உள்ளம் கண்ணாடி போன்றது. அதில் இறைவனுடைய பிரதிபிம்பம் தெரிய வேண்டும் என்றால் பக்தி, தூய்மை, ஒழுக்கம் என்ற ரசம் பின்பக்கம் பூசப்பட வேண்டும். அப்பொழுதுதான் இறைவனைக் காணலாம். கஷ்டம் வரும் காலத்தில் மட்டும் இறைவ்னத் தொழுவது சரியாகாது.

□□ தர்மம் எது, அதர்மம் எது என்பதை, மனிதர்கள் வகுக்கும் சட்டதிட்டங்களைக் கொண்டு நாம் நிர்ண

யிக்கக் கூடாது. இதுபற்றி சாஸ்திரங்கள் என்ன சொல்லியிருக்கின்றன என்பதைத் தெரிந்து கொண்டு அதன்படி அனுசரிக்க வேண்டும். செய்யத் தகுந்தது எது, செய்யத் தகாதது எது என்பதை நிச்சயிக்க சாஸ்திரமே நமக்கு பிரமாணமாகும். சாஸ்திரம் ஆக்ஞாபித்திருப்பதை அறிந்து தர்மத்தைச் செய்யக் கடவாய்.

□□ மாயையானது மிகவும் சக்தி வாய்ந்தது. அந்தச் சக்தியானது நம்முடைய சுய தன்மையை அறிந்து கொள்ளாமற் செய்து விடுகிறது. அப்படி அறிந்து கொள்ளாமலிருப்பதுதான் அஞ்ஞானம் - இருட்டு. அதைப் போக்க, அதாவது நமது சுய தன்மையை அறிந்து கொள்ள ஞானதீபம் உதவுகிறது. ஆதலின் நாமெல் லோரும் இந்த ஞான தீபத்தை ஏந்திக் கொண்டிருக்கும் பரப்ரஹ்மத்தை நோக்கி 'தமஸோமா ஜோதி ரம்ய' - இருட்டிலிருந்து வெளிச்சத்திற்கு அழைத்துக் கொண்டு போ, என்று பிரார்த்தனை செய்ய வேண்டும். அது தர்மம்.

□□ எழுந்ததிலிருந்து படுக்கப் போகும் வரை நாம் செய்கிற பலவிதமான காரியங்களையும் இறைவனின் திசையில் திருப்புவோமாக. நம் இதயத்தில் சாந்தி காண இதுவே வழி. நாம் பேசுகிற பேச்செல்லாம் பகவத் விஷயமாக்குவோம். நம்முடைய பேச்சு அனைத்தும் ஐம்பத்தியொரு அட்சரங்களில் அடங்கும். பராசக்தியான பரதேவதை இந்த அட்சரங்களின் ஸ்வரூபமாவாள். எனவே நம் பேச்சு எல்லாம் அவள் விஷயமாகவே ஆகவேண்டும்.

□□ சமயங்களின் கொள்கைகள் வேறுபடலாம், அவைகள் ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றலாம்.

ஆனால் சமய மனப்பான்மை அவைகளுக்கெல்லாம் ஒன்றுதான். கொள்கைகள் நம்மைப் பிரிக்கலாம். ஆனால் பக்தி நம்மை ஒன்று சேர்க்கும். நாமெல்லோரும் ஒரே கடவுளின் குழந்தைகளே!

☐☐ பொதுவாக கர்மம் என்பது மனிதனைக் கட்டிப்போட்டு பிறப்பு இறப்புச் சூழலில் தள்ளுவதாகும். இவ்விதம் ஆளாகாமலிருக்க வழி அதை யோகமாகச் செய்வதே! அதாவது வெற்றி தோல்விகளில் சமபுத்தி யோடு எல்லாத் தர்மங்களையும் ஈஸ்வரார்ப்பணமாகச் செய்வதே!

☐☐ மக்களின் மனம் பல தவறான வழிகளில் செல்வதற்குத் தூய்மைக் குறைவான உணவு ஒரு மிக முக்கியமான காரணமாகும். நாம் சீரிய சிந்தனையும். சத்வ குண வளர்ச்சியும் பெறும் பொருட்டு சாத்வீக உணவுப் பழக்கத்தையே மேற்கொள்ள வேண்டும். வீட்டிலேயே மனைவி பரிமாறுவதைவிடத் தாயார் பரிமாறும் உணவுக்கு விசேஷம் அதிகம்.

☐☐ வெறும் முயற்சி இருந்தால் மட்டும் வெற்றி கிடைக்காது. கூடவே திருவருள் இருந்தால் தான் அந்த வெற்றி முழு வெற்றியாக அமையும். அதைப் போலவே திருவருள் ஒன்றை மட்டுமே நம்பி முயற்சி செய்யாமல் இருந்தாலும் வெற்றி கிடைக்காது. ஆகவே முயற்சியும் திருவருளும் சேர்ந்திருந்தால்தான் காரியம் நல்லதாக நடக்கும். அதுவே தர்மம்.

☐☐ இந்த பாரத நாட்டிலே தர்மத்தைத் தவிர, கடமையைத் தவிர, வேறு எதுவும் ஏற்பட்டிருக்க

முடியாது. தர்மம் என்று சொல்லும்போது எவன் ஒருவன் தன் கடமையைச் செய்கிறானோ அதுவே தர்மம்.

□□ சமுத்திர அலை ஓய்ந்தாலும் காம அலை ஓயாது. ஆசை என்பதை ஒரு பண்டம் என்கிறார் ஆதிசங்கரர். ஆசை மனிதனை அழித்துவிடும். ஆசை நிறைவேறா விட்டால் அதுவே கோபமாக மாறுகிறது. கோபம் குடியைக் கெடுக்கும். எத்தனை பூஜை புனஸ்காரம், புண்ணியம் பண்ணினாலும் அவை எல்லாம் ஒரே நிமிஷத்தில் கோபத்தினால் பஸ்பம் ஆகிவிடும். அதனால் கோபத்தைக் கைவிடு.

□□ கல்கண்டு இனிப்பாக இருக்கும். ஆனால் அந்த இனிப்பு எப்படி இருக்கும் என்று சொல்ல முடியாது. அதுபோல, பக்தி அனுபவத்தால்தான் தெரியும். இது போன்ற அனுபவத்தில் இறைவனைக் காணலாம்.

□□ எந்த ஒரு பிரச்னை வந்தாலும் மனசுக்கு அது முக்கியமானதாகக் கருதப்படுகிறது. ஆகையால் மனசு நமக்குத் தூயதாக இருக்க வேண்டும். அந்த மனசுதான் வாழ்க்கைக்கு இன்பம் தரக்கூடியது. வழி முறையோடு பூஜை புனஸ்காரம் என்று தொடங்கி தியானம் பண்ணுவது மூலம், பிரச்சினைகளோடு உட்கார்ந்து இருந்தாலும் மனம் அமைதியாக இருக்கும்.

□□ நல்ல காரியங்கள் செய்வதற்கு எப்போதும் பலன் உண்டு. வாழ்க்கையில் சில சமயம் கெடுதல் வருவதை நமது பகுத்தறிவால் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். நல்ல விஷயத்தில் மனசைச் செலுத்தினால் இந்த ஜன்மம் மட்டும் அல்லாமல் அடுத்த ஜன்மாவிலும் நல்ல பலன்

கிடைக்கும். நம் இஷ்டத்திற்குக் காரியம் செய்ய முற்பட்டால் நீதி நேர்மை இல்லாமல் போய்விடும்.

□□ நீ வாழ்வதற்காக எதை வேண்டுமானாலும் செய்துவிடாதே! கூட்டில் அடைக்கப்பட்டிருக்கும் பறவையைக் கொல்வது கடினமல்ல! அதைப் போல, உன்னிடத்தில் சிக்கிய எளியவர்களை வதைப்பதும் சுலபந்தான்! ஆனால் நீ அந்த வேலையைச் செய்யாதே! ஆண்டவன் உனக்குக் காட்டிய நல்வழியில் நடந்து நீ உயர்வதற்கு மேலும் மேலும் முயற்சி செய். குறுக்கு வழியில் மேன்மையடைய நீ ஒரு போதும் நினையாதே! அந்த வழி உனக்கு நல்ல பலனைத் தராது; தந்தாலும் அதன் பலன் முடிவில் தீமையைத்தான் தரும்.

□□ குழந்தை பிறந்த ஆறாவது மாதத்திலோ அல்லது எட்டாவது மாதத்திலோ ஒரு நல்ல சுபதினத்தில் அஷ்டம சுத்தியுள்ள லக்னத்தில் பொன் ஊசியினால் காது குத்தவேண்டும். ஆண் குழந்தைக்கு முதலில் வலது காதும், பெண் குழந்தைக்கு முதலில் இடது காதும் குத்த வேண்டும். இது மாதிரி ஆறாவது எட்டாவது மாதத்தில், கர்ணபூஷணம் செய்தால், வைரம் அணியும் யோகம் வரும்.

□□ ஒரு நாட்டை சுபிட்சமாகக் கொண்டு செல்ல விரும்பும் அரசனுக்கும் மந்திரிக்கும் தெளிந்த அறிவும் எதிரியை மடக்கும் சாமர்த்தியமும் இருக்க வேண்டும். குடிமக்களின் நன்மைக்காக அரசன் பொய் சொல்லுவதால் தவறு ஏதும் இல்லை.

□□ எந்த அரசனுக்கு தன் சத்ருவை எதிர்த்து அடக்கத் தைரியம் இல்லையோ, எந்த தேவ பிராமணன் வசதியிருந்தும் தீர்த்த யாத்திரை செய்யவில்லையோ அவர்கள் இருந்தும் இல்லாதவர்களுக்கு ஒப்பாவார்கள். கடமை தவறியவர்களுக்கு கடவுள் துணை போக மாட்டார்.

□□ எவன் ஒருவன் தான் தப்பு செய்பவனாக இருந்து கொண்டு பிறர் செய்யும் குறைகளைக் கண்டு பிடித்து கண்டிருக்கிறானோ, எவன் தன் சக்தியை இழந்து பலவீனமான இருதயத்துடன் இருந்து கொண்டு கோபப்படுகிறானோ அவன் விவேகமில்லாதவன் ஆவான்.

□□ கேலியைக் கண்டு பயப்பட வேண்டாம். உன் மீது ஒருவன் உப்பை அள்ளிப்போட்டால், உன் மீது புண்கள் இருந்தாலன்றி உனக்கு ஒரு தீங்கும் நேராது. மனிதன் கட்டுறுவதற்கும் விடுதலை பெறுவதற்கும் காரண மாயிருப்பது அவனுடைய மனமே. அதற்கு அவனது உடலோ, உயிரோ, இயந்திரங்களோ பொறுப்பல்ல.

□□ குறைந்த பட்சத் தீமையும், கூடிய பட்ச நன்மையும் விளையும்படி வாழ்வதே உலகில் தலை சிறந்த ஞானமாகும். அன்புள்ளம் கொண்ட சான்றோருக்குத் தொண்டு செய்யும் மனப்பான்மை பெற்று விட்டால், இன்ப நிலை தானே வந்து வாய்க்கும்.

□□ எல்லா நூல்களையும் கற்றிருந்தாலும், கற்ற வற்றை மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லியிருந்தாலும் தான் மட்டும் திருந்தாதவனாக ஒருவன் இருந்தால் அவனைவிட அறிவில்லாதவன் யாரும் இல்லை.

□□ கடலில் திசை காட்டும் துருவ முள்ளைச் சரியாக் வைத்துக் கொண்டிருக்கும் வரையில் கப்பலுக்கு அபாயமில்லை. காந்தமுள் எப்போதும் வடதுருவத்தை நோக்குவதுபோல் மனம் இடைவிடாமல் ஆண்டவனை நோக்கியே நின்றால் வாழ்க்கை என்னும் கப்பல் கரையைப் போய் அடையும். பயமில்லை. இறைவனும் துணை நிற்பான்.

□□ நம் மனம் நமக்கு வசமாக வேண்டும். மனம் அடங்கிவிட்டால் பின்னர் வேறொன்றும் தேவை யில்லை. ஒவ்வொரு நாளும் சிறிது நேரமாவது மனத்தை அமைதியாக வைத்துக் கொண்டு, புலன்களைக் கண்ட வழியிலும் சிதறவிடாமல் தியானத்தில் அமரவேண்டும். அப்படித் தியானம் செய்வதால் புத்தி தெளிவடையும். ஆசையையும் கோபத்தையும் அடக்குவதற்கு இது ஒப்பற்ற சாதனம் ஆகும். சித்தத்தை இப்படிச் சுத்தம் செய்து கொண்டாலே ஆத்ம ஞானம் உண்டாகும்.

□□ ஒவ்வொரு நோக்கமும் உலகம் முழுவதையும் சூழும் அளவு விரிவடைய வேண்டும். ஒவ்வொர் அவாவும் மனித இனம் முழுமையும், உலக உயிர் அனைத்தையும் தன் நோக்கத்தோடு பொருந்தும் அளவு வளர வேண்டும். அதுவே தர்மம்.

□□ சாப்பிட்டவுடன் உட்காருவதால் வயிறு உபாதையும், வேகமாய் நடந்தாலும், ஓடினாலும், தூங்கினாலும் சத்ரு பயம் ஏற்படுகிறது. சாப்பிட்டவுடன் மெதுவாக எழுந்து நின்று மெதுவாக சிறிது நடந்த பின்பு உட்கார்ந்தால் ஆயுள் விருத்தி உண்டாகும்.

□□ ஒரு பந்தியில் பலர் உட்காரும்போது, முன்னதாக சாப்பிடுதல் கூடாது. சாப்பிடலாம் என்று பெரியவர்கள் கூறிய பின்னோ அல்லது அவர்கள் சாப்பிட ஆரம்பித்த பின்போ சாப்பிட வேண்டும். பெரியவர்கள் எதிரில் கால் மீது கால் போட்டுக் கொண்டோ, தொடையை ஆட்டிக் கொண்டோ, தாளம் போட்டுக் கொண்டோ சாப்பிடக் கூடாது.

□□ பிற உயிர்களைக் கொல்வது பிறவித்தளை, மோக மயக்கம், அறிவு ஆகியவற்றுக்கு வித்து ஆகும். இதை அறிந்தவர்தான் நல்ல மனிதராக வாழத் தகுதி பெற முடியும். மனிதன் பிற உயிர்களிடம் அலட்சியம் காட்டக் கூடாது. பிற உயிர்களிடம் அலட்சியம் கொண்டவன், தன் ஆத்மாவையே அலட்சியம் செய்கிறவனாகிறான். அவனுக்கு எந்த லட்சியமும் ஈடேறாது.

□□ இலையில் உள்ள பதார்த்தத்தை கொஞ்சமாவது மீதி வைத்துதான் சாப்பிட்டு முடிக்க வேண்டுமே தவிர இலையைத் துடைத்து சாப்பிடுவதும், விரலில் ஒட்டிக் கொண்டுள்ள பதார்த்தத்தை நக்கி நக்கி சாப்பிடுவதும் தரித்திரத்தை வளர்க்கும். ஆகையால் மேற்கண்ட பழக்கங்களை கைவிட வேண்டும். தனது மனைவி இஷ்டப்படி புசித்துக் கொண்டு இருக்கும்பொழுது இமை கொட்டாமல் பார்ப்பதும், அவளை ருசித்து சாப்பிட விடாதபடி தொடர்ந்து பேசுவதும் கூடாது. கர்ப்பமான மனைவி உண்ணும் பொழுது கோபித்தால் புஷ்டியில்லாத குழந்தை பிறக்கும்.

□□ பந்தியில் உட்கார்ந்து சாப்பிடும்பொழுது பெரியவர்களுக்கு வலது பக்கம் உட்கார வேண்டும்.

அவர்களை நெருக்கி முண்டியடித்து கொண்டு உட்கார்ந்து சாப்பிடக் கூடாது.

□□ திடீரென்று கோபம் அடைந்து தூஷிப்பவனை பதிலுக்கு தூஷிக்கக் கூடாது. இவனது பொறுமைக் குணமும், சகிப்புத் தன்மையும், மௌனமுமே அவனுக்கு நல்ல பாடம் புகட்டி விடும். அவனது புண்ணியத்தில் பெரும் பகுதியையும் இவன் அடைந்து விடுவான்.

□□ புலன் வேட்கைக்கு அடிமையானவர்கள் நீர், நிலம், காற்று முதலிய ஐம்பூதங்களில் நிறைந்திருக்கும் ஜீவன்களையும் வதைக்கிறார்கள். அவர்களுக்குத் தாம் ஜீவஹிம்ஸை செய்கிறோம் என்கிற உணர்வு கூட ஏற்படுவதில்லை. இந்த நிலை அவர்களுக்குத் தீமையே தரும். மெய்யறிவு பெறும் தகுதி ஏற்படாது.

□□ விவேகமும், விவரமும், பக்தியும் உள்ளவர்களின் குற்றங்களை குரு போக்கிவிட முடியும். துஷ்டனுடைய குற்றங்களை அரசன் போக்கிவிட முடியும். இவ் விருவர்களின் குற்றங்களை எமன் போக்கி விடுவான். ஆனால் கணவனின் குற்றங்களை மனைவியின் கற்பே போக்கி விடும்.

□□ குருடனை ஒருவன் அடித்தால், அடித்தவனைக் குருடனால் பார்க்க முடியாவிட்டாலும் துன்பத்தை அனுபவிக்கிறான். அதே போல எளிய ஜீவன்களையோ, நீர், நிலம் முதலிய பூதப்பொருள்களையோ வதைத்தால், அவை துன்பப்படுகின்றன. அந்தத் துன்பத்தை, வதைப்பவர் காணவோ, உணரவோ முடிவதில்லை.

ஆசை காரணமாகவே ஹிம்ஸை ஏற்படுகிறது. ஆசை இருக்கும் வரையில் பிறருடைய துன்பத்தை உணரும் அறிவு ஏற்படாது. ஆனால் அஹிம்ஸையைக் கடைப்பிடிக்கும் பண்பாளர்கள் ஹிம்ஸையால் பிற ஜீவன்களோ, பூதப் பொருள்களோ படும் துன்பத்தை உணர்கிறார்கள். அந்த அறிவு அவர்களுக்கு ஏற்பட்டு விடுகிறது. அவர்கள் செயல்களின் பாகு பாட்டை, நன்மை தீமைகளை, நன்கு அறிந்திருக் கிறார்கள்.

□□ தனது வாழ்க்கையும் வசதியும் சம்பத்தும் உயரவேண்டுமென்று விரும்புகிறவர்கள், உத்தமர்களை யும் ஜோதிடர்களையும் ஆலோசிக்க வேண்டும். அதர்மம் செய்பவர்களிடம் ஆலோசனை கேட்கவே கூடாது.

□□ கிழத்தனத்தால் அழகு போய் விடுகிறது. ஆசையானது தெய்வ சிந்தனையை மறக்கடிக்கிறது. அசூயையானது நல்நடத்தையைப் போக்கடிக்கிறது. கோபமானது ஐஸ்வரியத்தைப் போக்கடிக்கிறது. துஷ்டர்களின் சேர்க்கையானது ஒழுக்கத்தைகக் குலைக் கிறது. காமமானது வெட்கத்தைப் போக்கடிக்கிறது. அகங்காரமானது எல்லாவற்றையுமே போக்கடிக்கிறது. கங்கா ஜலத்தைக் குடிப்பது பாபத்தைப் போக்கடிக்கிறது.

□□ சுத்த தண்ணீரில் உப்பைப் போட்டால், சுத்த தண்ணீரும் உப்பாகி விடும். அதேபோல் நாம் நல்ல மனிதராய் இருந்தாலும் கெட்டவர்களுடன் சகவாசம் செய்தால் நாமும் கெட்டவர்களாகி விடுவோம். அதனால் எப்பொழுதும் நல்லவர் சகவாசத்தைப் பெறவும்.

□□ நதிகளின் தண்ணீரெல்லாம் சமுத்திரத்தை அடைவதற்கு முன்பாக பல விதமான சுவைகளுடன் இருக்கும். ஆனால் சமுத்திரத்தை அடைந்த உடன் ஒரே உப்பாகத்தான் இருக்கும். அதுபோல வழிபாட்டு முறைகள் பலவாக இருந்தாலும் அந்த வழிபடும் முறையில் பலவித அனுபவங்கள் இருந்தாலும் கடைசியாக இறைவனுடைய நிலையை அடைந்தவர்களுக்கு ஒரே ஆனந்தந்தான் இருக்கும்.

□□ நெருப்பைத் தண்ணீரால் அணைத்துங்கூட சிறிது நேரம் வரை சுடும். புகையும் இருக்கும். அதுபோல இறைவன் அருளைப் பெறுவதற்கு சாதனை செய்பவர்களிடம் கூட சோதனையும், துன்பமும் கொஞ்ச காலம் இருக்கத்தான் செய்யும்.

□□ ஒரு மாமரத்தைப் பார்த்து குழந்தைகள் மாங்காய் வேண்டுமென்று நினைப்பார்கள். தச்சு ஆசாரிகள் இந்த மரத்தின் பலகை நன்கு உபயோகப்படுமென்று நினைப்பார்கள். வெய்யிலிருந்து வந்தவர்கள் நிழல் கிடைத்ததே என்று சந்தோஷப்படுவார்கள். இதுபோல் இறைவனிடம் தங்கள் தேவைக்கேற்றவாறு பலவாறாக அவரவர் பிரார்த்தனை செய்து கொள்வார்கள். இறைவன் அனைவருக்கும் உதவி செய்வதென்றே சங்கல்பித்துக் கொண்டிருக்கிறான்.

□□ தண்ணீரிலேயே தாமரை இலை கிடந்தாலும் தண்ணீர் அதில் ஒட்டாது. அதுபோல இறைவன் அருளைப் பெற்றவர்கள் உலகிலேயே வாழ்ந்தாலும் உலக பந்தங்கள், சுகதுக்கங்கள் அவர்களைப் பாதிக்காது.

□□ வினைகள் தீரவேண்டுமானால், செய்கின்ற காரியங்கள் செம்மையாக நடைபெற வேண்டுமானால் விநாயக மூர்த்தியை வணங்கு. அழகும் வீரமும் ஞானமும் வேண்டுமானால் முருகப் பெருமானை வணங்கு. இவ்வுலகத்திலே எல்லா விதமான இன்பங்களும் அடைய உன் மனம் விரும்பினால் திருமாலை வணங்கு. எல்லா சக்திகளையும் பெற்று தீரனாக, தைரியவானாக விளங்க வேண்டுமானால் அம்பிகையை வணங்கு. கல்வியைப் பெற விரும்புகிறாயா? சரஸ்வதியைப் போற்றி வணங்கு. செல்வத்தை விரும்பி யாசிக்கின்றாயா? திருமகளை வணங்கிப் போற்று. முக்தியை விரும்பி நிற்கின்றாயா? சிவபெருமானைத் துதித்து அருள் பெறுவாயாக!

□□ நாம் கோயிலைப் பார்த்தாலும் பார்க்கா விட்டாலும் கோபுரம் நம்மைப் பார்த்துக் கொண்டே யிருக்கிறது என்பதை மனதில் வைக்க வேண்டும். அதனால்தான் 'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்', 'கோபுர தரிசனம் பாவ விமோசனம்' என்ற வாக்கியங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

□□ ஆன்மீக வளர்ச்சிக்கு மனச் சுத்தமும், ஏகாக்கிரதையும் மிகவும் அவசியம். இவை வளர்வதற்கு இந்திரியங்களின் கட்டுப்பாடு ஓர் அளவு அவசியம். இந்திரியங்கள் கட்டுப்பட வேண்டுமானால் அதற்கு விஷயங்களின் எண்ணம் வராமல், ஆசை வராமல் அவற்றை அனுபவிக்காமல் இருக்கும்படி இந்திரியங் களைச் செய்ய வேண்டும். இதற்கு அனுசரணையாகத் தான் விரதங்கள், உபவாசங்கள் முதலியவைகள் சொல்லப் பட்டிருக்கின்றன.

□□ மந்திரங்கள் அனைத்தும் அட்சர வடிவமானவை, எழுத்து வடிவமானவை. மந்திரங்களுக்கு முக்கியமானது உச்சரிப்பும் ஸ்வரமும். இவை மந்திரங்களுக்கு சக்தியை கொடுக்கக் கூடியவை. ஆகவே ஒரு மந்திரத்தை உச்சரிப்பவரின் தகுதியைப் பொறுத்தும், உச்சரிக்க வேண்டிய முறைகளினாலுமே அந்த மந்திரத்தின் சக்தியால் பலன் ஏற்படுகிறது. அப்படி இந்த மந்திரங்களைச் சரியான முறையில் உச்சரிப்பதன் மூலம் நாம் புனிதத் தன்மையை அடைய முடியும்.

□□ ஓ மனிதனே! தீமைகளை ஒழிக்கவும், நன்மைகளை நிலைநாட்டவும் வேண்டிய சக்தியைக் கடவுள் உனக்குக் கொடுத்திருக்கின்றார். அந்தச் சக்தியை நீ வீணாக்காமல் நல்ல வழியில் பயன்படுத்துவாயாக!

□□ திருப்தியுள்ளவன் செல்வத்தைக் கண்டு மயங்கி, நியாயத்தையும் நல்ல குணத்தையும், அடக்கத்தையும் தருமத்தையும் விட்டுவிட மாட்டான். அவனிடத்தில் எவ்வளவு அதிகமாகச் செல்வம் இருந்தாலும் அதனால் அவன் ஆணவம் கொள்ளமாட்டான். கடவுளும் அவனுக்கு மிகவும் துணையாயிருப்பார்.

□□ காமப் பாதையில் செல்கிறவன், வேறு எத்தனையோ நல்ல செயல்களில் அனுபவிக்க வேண்டிய இன்பத்தை அனுபவிக்க முடியாதபடி, உடல் உறுதி குன்றி விடுகிறது. உடலுக்கு உறுதியைத் தரக்கூடிய இந்திரிய ஊற்றை வற்றச் செய்தவனுக்கு இந்த உலகில் எந்த இன்பமும் கிடைக்காமற் போகும். அதனால் எதிலும் அளவோடு இரு.

□□ இரக்கமுள்ள மனத்தில் மகிழ்ச்சி குடிகொண்டிருக்கும். அந்த மனத்தில்தான் அன்பும், அறமும் தோன்றும். அன்பாகிய ஊற்றிலிருந்து ஆறுகளைப் போல பல நன்மைகள் பெருகிச் செல்லும். அவைகள் மக்களுடைய நன்மைக்காகப் பெருகிக் கொண்டே இருக்கும். அதனால்தான் 'அன்பே சிவம்' என்று சொல்லப்படுகிறது.

□□ காலம் சரியாய் இல்லை என்று சிலரைப் போல நீயும் சொல்லாதே! காலம் சரியாய் இருப்பதும் இல்லாததும் உன் எண்ணத்தையும் செயலையும் பொருத்திருக்கின்றது. அதனால்தான் நல்லதும் கெட்டதும் எங்கிருந்தோ வருவதாக எண்ணுவது தர்மமாகாது.

□□ மன உறுதி உள்ளவர்கள் எதைப் பற்றியும் சரியாகத் தீர்மானிப்பார்கள்: எவ்வளவு துன்பம் நேர்ந்தாலும் தீர்மானித்த வேலையை செய்தே முடிப்பார்கள். மன உறுதி உள்ளவர் தாம் எடுத்துக் கொண்ட வேலை நல்லதென்று தோன்றினால் உலகமே எதிர்த்தாலும் அதைச் செய்தே முடிப்பார்கள். மனஉறுதி உள்ளவர்களுக்கு முன்னால் உள்ள மலையும் அணுவாகும்; கடலும் நீர்த்துளியாகும். இப்படியெல்லாம் நடப்பதற்குக் காரணம், உறுதியாயிருப்பது கடவுளின் சாந்நித்தியமே!

□□ வறுமை வந்தபோது, அதாவது தரித்திரம் வந்தபோது கலங்கக் கூடாது. ஓ! மனிதனே! நான் சொல்வதைக் கேள்! கடவுளைத் தவிர குறைபாடு இல்லாதவைகள் உலகத்தில் ஒன்றும் இல்லை. எப்பொழுதும் வறுமை நீடிக்காது என்பதை நம்பு.

□□ உயிர் வாழ்வதற்குத்தான் உடம்பு படைக்கப் பட்டிருக்கிறது. ஆகவே நெடுநாள் உயிர் வாழ வேண்டுமென்று நினைக்கின்றவர்கள் எல்லோரும் தங்கள் உடம்பைப் பாதுகாக்க வேண்டும். உடம்பு இருந்தால் உயிர் இருக்கும். உயிர் இருந்தால் அறிவை வளர்க்கலாம். அறிவு நாம் இறந்த பிறகும், நம்மைத் தொடர்ந்து வரும். நாம் என்பது ஆன்மா. உயிர் என்பதும் ஆன்மா என்பதும் ஒன்றுதான். ஆகவே உயிருக்கு ஆதாரமாய் இருக்கும் உடம்பை இழிவு படுத்துவது தர்மம் ஆகாது.

□□ ஆடம்பரம் இல்லாமல் வாழ்கின்றவர் அமைதியாகவே இருக்கின்றனர். தான தருமங்களைச் செய்து பேரும் புகழும் பெற்றவர் பெரும்பாலும் மகிழ்ச்சியுடன்தான் இருக்கின்றார். மரணம் நம்மை என்றைக்காவது இந்த உலகத்திலிருந்து பிரிக்கப் போகின்றது என்று நினைத்து வாழ்கின்றவர் கிடைத்த வரையில் திருப்தி அடைவர். மரணத்தை மறந்து வாழ்கின்றவன் பேராசைக்காரனாக, எதிலும் திருப்தி இல்லாமல் இருப்பான். அவன் திருப்தியினால் உண்டாகக்கூடிய இன்பத்தை அடைய மாட்டான்.

□□ ஈரக் களிமண்ணை சூரியனுடைய வெப்பம் இறுகச் செய்கிறது. அதே சூரியனுடைய வெப்பம் மெழுகை உருகச் செய்கிறது. இதைப் போலவே கடவுள் ஒவ்வொரு ஆன்மாவையும் அதனதன் தன்மைக்கு ஏற்றவாறு நடைபெறச் செய்கிறார். மேகங்களால் மறைக்கப்பட்ட சந்திரன் அந்த நேரத்துக்கு உலகத் தாருக்குப் பயன்படா விட்டாலும், அது தன் நிலைமையி

லிருந்து மாறுபடுவதில்லை. அறியாமையால் மறைக்கப் பட்டாலும் ஒருவனிடத்தில் உள்ள ஆன்மா, அவனுக்கு அப்போது பயன்படாவிட்டாலும் அது தன் நிலைமை கெடாமல்தான் இருக்கிறது. ஆன்மாவே இறைவன் என்பதை மறவாதே!

□□ பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று நினைக்கும் போதே வேதனை உண்டாகிறது. செயலில் இறங்கினால் அபாயம் உண்டாகிறது. நாம் மரத்தை வெட்ட உபயோகிக்கும் கோடாரி சில சமயங்களில் நமது காலிலேயே விழுவது போல, நாம் பிறருக்குச் செய்ய ஆரம்பிக்கும் தீமை நமக்கே கெடுதலாய் முடிந்தாலும் முடியலாம். அதனால் அந்த எண்ணத்தை அடியோடு விடு. உன்பால் கடவுள் கருணை கொள்வார்.

□□ விருப்பு வெறுப்பற்றுத் தனக்கு ஏற்படுத்தப்பட்ட காரியங்களைச் சிறிது கூட வழுவாது செய்து வருபவன் நிஷ்காமிய கர்மாவைக் கடைப்பிடிப்பவன் ஆகிறான். இதுபோன்று நிஷ்காமிய கர்மாவைச் செய்தவனோ. தத்துவ விசாரத்தின் மூலம் உண்மை அறிவைப் பெற்றவனோ. யோக அப்பியாசத்தின் மூலம் மனத்தை ஒருமைப்படுத்தி இறைவனையே அடைந்தவனோ, பக்தி மூலம் கரைந்து உருகி இறைவனோடு இரண்டறக் கலந்தவனோ. இறந்து விட்டால் அவனுக்கு மாத்திரமே மறுபிறவியோ, துன்பமோ, கவலையோ, கிடையாது. இது உறுதி.

□□ கஷ்டம் என்பது தங்களுடைய வினையினால் வந்ததுதான். அவைகளை அவரவர்கள் அனுபவித் துத்தான் தீர வேண்டும். ஆனால் பரஸ்பரம் சகாயம் செய்து

கொள்வதின் மூலமாகவும் இறைவழிபாட்டின் மூலமாக வும் கஷ்டங்களை குறைத்துக் கொள்ள முடியும்.

□□ கேட்பது என்பது மனிதனுடைய உரிமை. கொடுப்பது என்பது இறைவனுடைய தன்மை. எவ்வளவு இருந்தாலும் நம்முடைய மனம் திருப்தியடைவதில்லை. ஆகவே கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைய வேண்டும். நம்மைக் காட்டிலும் இன்னும் கஷ்டப்படு கிறவர்களைப் பார்த்து மனதை திருப்தி செய்து கொள்ள வேண்டும். திருப்தியுடன் வாழ்வதுதான் மனித வாழ்வின் பூரணத்துவம். இந்த பூரணத்துவத்தைப் பெற பெரி யோர்களுடைய வாழ்க்கையை அறிந்து அவர்கள் அருளிய உரைகளைப் படித்து இறைவன் அருளைப் பெற வேண்டும்.

□□ ஒற்றையடிப் பாதை நடக்க நடக்கத்தான் ஒளிவிட்டு நன்றாகப் பிரகாசிக்கும். அது போல இந்து சமயமானது மனிதர்களுக்குச் சொல்லப்பட்ட கடமை களைச் செய்யச் செய்யத்தான் நன்றாக வளர்கிறது. ஒற்றையடிப் பாதையில் விபத்துகளோ நெரிசல்களோ, திடீர் என்று முடிவடையாமல் நின்று விடுவதோ கிடையாது. அதுபோல இந்து சமயமானது எவ்வித விபத்தும் இல்லாது ஒழுங்காக கட்டுப்பாடாக சந்தேக மில்லாத ஒரு லட்சியத்தோடு முடியக் கூடியது. எப்பொழுது ஒற்றையடிப் பாதையில் நடக்கவில்லையோ அப்பொழுது அந்தப் பாதை மறைந்துவிடும். அதனால் இந்து தர்மங்களை தவறாமல் கடைப்பிடித்து வாருங்கள்.

□□ எவன் ஒருவன் பிறர் துயரங்களை உணர்வானோ, பிறர் கஷ்டங்களைக் களைந்து உதவுவானோ, அகத்தில்

அகந்தைக்கு இடமே கொடுக்க மாட்டானோ, அவனே உண்மையான வைஷ்ணவன் ஆவான். எவன் சமநோக்கு உடையவனோ, வேட்கையை விட்டொழித்தவனோ, பிற மாதர்களைத் தாயாக வணங்குபவனோ, எவன் பொய்யே பேசமாட்டானோ அவனே உண்மையான வைஷ்ணவன். எவன் பேராசையும் கபடமும் இல்லாதவனோ, எவன் காமத்தையும் கோபத்தையும் விட்டொழித்தவனோ அவனே உண்மையான வைஷ்ணவன் ஆவான். நெற்றியில் திருநாமம் அணிந்து கொண்டிருந்தால் மட்டும் போதாது. மேற்கண்ட நடத்தை இருக்க வேண்டும்.

□□ எவனை மோகமும் மாயையும் அணுகாவோ, எவன் மனத்திலே திட வைராக்கியம் குடி கொண்டிருக்குமோ, எவன் வாய் ராம நாமத்தையே ஓயாது ஓதிக் கொண்டிருக்குமோ, அவனுடைய உடல் எல்லாப் புனித தீர்த்தங்களுக்கும் உறைவிடம் ஆகும்.

□□ குரு, முனிவர், ஆச்சாரியர்கள், குல புரோகிதர்கள், குடும்ப ஜோதிடன், குடும்ப வைத்யன், மகான்களின் சரித்திரம், கெட்ட ஸ்தீரியின் நடத்தை ஆகியவைகளைப் பற்றி வீண் ஆராய்ச்சியில் ஈடுபடவோ, இவர்களுக்கு குற்றம் கற்பிக்கவோ இவர்களிடம் உள்ள அற்ப தவறுகளை பகிரங்கப்படுத்தி விமரிசனம் செய்யவோ கூடாது. இவர்கள் செய்வது சற்றுத் தவறாகத் தென்பட்டாலும் அதற்கு களங்கம் கற்பிக்காமல் மௌனமாக இருப்பதே நல்லது.

□□ காலை எழுந்தவுடன் சொர்ணம், கண்ணாடி, சுமங்கலி, கன்னி, மஞ்சள், நவரத்னம், பழம், பசு

ஹோமம் செய்தவன், உள்ளங்கை, தெய்வ பிம்பம் இவைகளைப் பார்ப்பதால் இரவில் செய்த பாபம் செய்யாமல் இருக்க மனம் செயல்படும். பல நன்மை களும் கிட்டும்.

□□ அலங்காரச் சொற்களும் அடுக்கு மொழிச் சொற்களும் பேசுவது கேட்பவர்க்கு இனிமை தரும். ஆனால் இச்சொற்களால் நல்ல விஷயங்களைப் பேச வேண்டுமே தவிர, பிறர் மனம் புண்படும்படி சொற்களை உபயோகித்துப் பேசக்கூடாது.

□□ வயது அதிகமாய்விட்ட காரணத்தினாலும், நரைத்த மயிர் தோன்றிவிட்ட காரணத்தினாலும், ஒருவர் மதிப்புக்குரியவராக ஆகமாட்டார். அவரால் மக்களுக்கு உண்டாகக்கூடிய பயனைக் கருதியே அவர் மதிக்கப் படுவார். ஒருவர் வாலிபராய் இருந்தாலும் அவரால் உலகம் நன்மை பெறுமானால். அவர் ஒழுக்கமுள்ள உத்தமராய் இருப்பாரானால், அவரைப் போற்றலாம். அறிவும் நல்ல நடத்தையும் உள்ளவர்கள் இளைஞர்களாய் இருந்தாலும் அவர்களைப் போற்றலாம்.

□□ நல்ல குணங்களையுடைய மனைவி தலைவியாக இருக்கும் வீட்டில் எப்போதும் சாந்தம் குடிகொண் டிருக்கும். அவள் சொல்வதை எல்லோரும் ஏற்றுக் கொள்வார்கள். நல்ல மனைவி இருக்கும் இடத்தில் ஒழுங்கும் சிக்கனமும் நிலைத்திருக்கும்.

□□ கடவுளுடைய கண்கள் ஒவ்வொருவனுடைய இருதயத்திலும் உள்ள இரகசியங்களைப் பார்க்கக் கூடியதாய் இருக்கின்றன. கடவுள், தாம் அறிந்தவற்றை ஒருபோதும் மறக்கக் கூடியவரல்லர். கடவுள் மனிதனை

யும் அவன் தன்மையையும் ஒரு போதும் மறக்க மாட்டார். உயர்ந்தவனோ, தாழ்ந்தவனோ, ஏழையோ, பணக்காரனோ, அறிஞனோ, மூடனோ, வேறு எவனாய் இருப்பினும் சரியே! அவனவன் ஆண்டவனால் கவனிக்கப்படுகின்றான் என்பதைத் தெரிந்து கொள்ளவும்.

□□ கத்தியால் குத்தப்பட்ட புண் ஆறிவிடும். கோடாரிகொண்டு வெட்டப்பட்ட மரம் துளிர் விடும். கெட்ட சொற்களால் ஒருவனது மனதில் ஏற்பட்ட புண் ஆறவே ஆறாது. எனவே ஒருவன் பேசும் போது பிறர் மனம் நோகாதவாறு பேசவேண்டும். அதாவது அம்பை ஒருவன் மீது எய்தாலும் அவன் அதைப் பிடுங்கி எறிந்துவிடலாம். ஆனால் அவனை கடுஞ் சொற்களால் பேசினால் அதை அவன் மனதை விட்டு பிடுங்கி எறிய முடியாது. நல்லது பேசுவதே தர்மம்.

□□ எவன் உலகத்தின் உயிரினம் அனைத்தையும் வணங்குகிறானோ, எவன் பிறரை நிந்திக்கவே மாட்டானோ, எவன் மனம், வாக்கு, காயம் ஆகியவற்றைச் சலனமின்றி வைத்துக் கொள்பவனோ, அவனைப் பெற்ற அன்னை மிகவும் கொடுத்து வைத்தவள். தர்ம மாதா என்றே சொல்லலாம்.

□□ மற்றொருவனுடைய மனைவியின் அழகையும் செயலையும் கண்டு ஆனந்தப்படுகிறவன், தன் மனைவியின் அழகையும் செயலையும் கண்டு வேறொருவன் ஆனந்தப்பட்டால் அப்போது தனக்கு எப்படி இருக்குமென்பதைப் பற்றி நினைத்துப் பார்க்க வேண்டும். அப்பொழுது அவன் மனத்தின் நிலையை அறியட்டும்.

□□ ஒரு முறை மணந்து கொண்ட ஒருவன் வேறு திருமணம் செய்து கொண்டு வரும்போது முதல் மனைவி எவ்வளவு துயரப்படுவாளோ, எவன் சூதாட்டத்தில் ஆயிரக்கணக்கில் செலவழித்து தன் சொத்தை இழந்து நடுத்தெருவில் இருக்கும்போது எவ்வளவு வேதனைப் படுவானோ, தூக்க முடியாத சுமையை பகல் முழுவதும் பாலைவன மார்க்கமாக சுமந்து வந்தவன் எவ்வாறு இரவு முழுவதும் கால், உடம்பு வலியால் கஷ்டப்படுவானோ அதே போல், பொய் சாட்சி சொன்னவனும், பொய்யாக தீர்ப்பு கூறியவனும் துயரப்படுவார்கள். ஆகையால் இதை அனுசரித்து நடப்பது நல்லது.

□□ பனை மரத்து நிழலில் இருந்து பாலைக் குடித்தாலும் அது கள் தான் என்று பார்ப்பவர்கள் நினைப்பது போல், தப்பு செய்பவர்களுடன் நல்லவர்கள் சேர்ந்தாலும் அவர்கள் செய்யும் குற்றங்களுக்கு இவனும் காரணமாகிறான். அதாவது கெட்டவனைத் தொட்டால் தொட்டவனும் கெட்டான் என்பதே ஆகும்.

□□ ஓ மனிதனே! நீ எதைச் செய்தாலும் அதில் உண்மை கலந்திருக்க வேண்டும். உண்மை கலந்த செயலில்தான் அழகைக் காணமுடியும். உண்மை கலந்த செயலைச் செய்கிறவன் மனத்தில் எப்போதும் இன்பம் குடி கொண்டிருக்கும். உண்மை நிறைந்த மனத்தில் எப்போதும் தைரியம் நிறைந்திருக்கும். அந்த தைரியத்தை எவராலும் அடக்க முடியாது. உண்மை நிறைந்தவரின் தலையில் புகழ் என்னும் முடி சூட்டப்படும். உண்மை நிறைந்தவருடைய நாக்கு அவருடைய பரிசுத்தமான

இருதயத்துடன் கலந்திருக்கும். வார்த்தையில் வஞ்சனை கலந்திருக்காது. அவனைக் கடவுளே போற்றுவார்.

□□ ஒருவனுடைய பொருளைக் கண்டு அதிக பொறாமை கொள்பவன், ஒருவனது முன்னேற்றத்தைக் கண்டு பொறுக்காதவன், அழகைக் கண்டு அசூயைப் படுபவன். வீரத்தைக் கண்டு வெறுப்பவன், பெருமை யைக் கண்டு தூற்றுபவன், பூஜையைக் கண்டு தூஷிப்பவன் ஆகியோர் எப்பொழுதும் பிணியுற்று இருப்பார்கள். அவர்களுக்கு ஆரோக்கியம் கிடைக்காது.

□□ நல்ல ஆகாரத்தை விரும்பும் ஒருவன் வீட்டில் பசு இல்லாமல் இருக்காது. தாமதமில்லாமல் ஒரு காரியத்தை முடிக்க எண்ணுபவன் வாகனம் இல்லாமல் இருக்க மாட்டான். இவ்விரண்டும் பூர்வ புண்யத்தால் ஒருவனுக்கு வருபவை ஆகும்.

□□ தரித்திரம் அதிகமுள்ளவர்களுக்கு பசியும் அதிகமிருக்கும். அவன் தரித்திரமாயிருப்பதே, கடவுள் தண்டனை. அதிலும் அதிகப் பசியைக் கொடுப்பது தண்டனைக்கு மேல் தண்டனை ஆகும். அவன் போன ஜன்மத்தில் யாருடைய உணவைப் பறித்தானோ! அப்படியெல்லாம் அவன் எண்ணிப் பார்த்து இப்பொழு தேனும் நேர்மைக்குத் திரும்ப வேண்டும்.

□□ தரித்திரக்காரனுக்கு உணவும் அதன் ருசியும்தான் முக்கியமாகும். ஆனால் பணக்காரர்களுக்கு இந்தப் பசியும், ருசியும் அதிகமிருக்காது. இவர்களுக்கு பணத்தின் மீது பசியும், சொத்தின் மீது ருசியும்தான் இருக்கும். பணம் அதிகமுள்ளவர்கள் சாப்பிட்டால் ஜீரண சக்தி அதிகம்

இருக்காது. கஷ்டப்படுகிறவன் மரக்கட்டை சாப்பிட்டாலும் ஜீரணமாகிவிடும். இதுதான் உலக நீதி. இதன் தாத்பர்யம் என்னவென்றால் பண வசதி படைத்தவன் தரித்திரர்களின் அன்னத்திற்கு உதவவேண்டும் என்பதே ஆகும்.

□□ எவ்வளவு விறகுக் கட்டைகளைப் போட்டாலும், அக்னி திருப்தி அடையாது. எத்தனை நதிகள் கலந்தாலும் சமுத்திரம் திருப்தி அடையாது. எவ்வளவு பணம் வந்தாலும் கஞ்சன் திருப்தி அடைவதில்லை. அதேபோல் மனிதர்களும் பெண் ஆசையில் திருப்தி அடைய மாட்டார்கள். இதை ஜெயித்தால் மனிதன் எதையும் ஜெயித்து விடுவான். கடவுள் பக்தியினால் அது கைகூடும். கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.

□□ மன நிம்மதி தருவதும், சந்தோஷத்தைக் கொடுப்பதும் பாவத்தை நீக்கி புண்ணியத்தைத் தருவதும் தர்மம் ஆகும். தர்மம் என்றும் அழியாதது. மனிதன் இறந்த பின்பு காதில் உள்ள கடுக்கனையும் கையில் உள்ள மோதிரத்தையும் கூட கழட்டி வைத்துக் கொண்டுதான் மயானத்துக்கு அனுப்புகிறார்கள். ஆனால் அவன் செய்த தர்மத்தை எவராலும் கழட்ட முடியாது. இவ்வுலகத்தில் பணத்தைச் சேர்ப்பதைவிட, மேலுலகத்தில் சேர்க்க வேண்டும். அங்கு போனால் அது உதவும். ஆனால் இந்தப் பணம் அங்கு செல்லாது. அதனால் அப் பணத்தை இங்கு தர்மமாகவும், பிறருக்கு உதவியாகவும் செய்து அனுப்ப வேண்டும். மேலுலகத்தில் இவைகளைச் செலவழித்துக் கொண்டு சௌக்கியமாக இருக்கலாம். மனிதா! உன் நிலையை நன்கு யோசித்துப் பார்.

□□ பார்வை இல்லாதவர்களும், அவயவப் பழுதுள்ளவர்களும், முன் ஜன்மத்தில், ஆண்டவனை வணங்காதவர்களே! அவர்கள் இப்பொழுதாவது ஆண்டவனை வணங்கட்டும். அடுத்த ஜன்மத்திலாவது சுத்தமாய் பிறக்கலாமே!

□□ ஆண்டவனால் மனிதர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கின்ற அளவற்ற நன்மைகள் எல்லாவற்றிலும் மேலானது நினைக்கும் சக்தியே ஆகும். அதிலும் எதைப் பற்றியும் நினைத்துச் சரியான தீர்மானத்திற்கு வரக்கூடிய சக்தியே உயர்ந்தது என்று சொல்லலாம். ஆகையால் ஓ மனிதனே! எந்த வேலையானாலும் சரியே! அந்த வேலையைப் பற்றிய உன் தீர்மானம் சரியானதாயிருக்கட்டும். அப்பொழுதுதான் கடவுள் உனக்கு மகிழ்ச்சியளிப்பார்.

□□ பக்தர்கள் தினசரி அல்லது வெள்ளிக்கிழமைகளில் சிவ-விஷ்ணு தரிசனம் கட்டாயம் செய்ய வேண்டும். திருச்சின்னம் அணிவது அவரவர் கடமையாகும். கோவிலுக்குச் செல்லும்போது கையில் எந்த வித பணமும் இல்லாதவன். கோவில் பிரகாரத்தில் உள்ள செத்தை, குப்பைகளையேனும் கையில் கிடைக்கும் அளவு எடுத்து வெளியில் போட வேண்டும். கையில் ஏதும் கொண்டு வராத பாபத்தை இந்தச் செய்கை நிவர்த்தி செய்து விடுகிறது.

□□ தேவாலய நந்தவனங்களில் துளசிச் செடியையும், வில்வ மரத்தையும் வைத்து தினசரி நீர் ஊற்றி வளர்ப்பவன் 'அஸ்வமேத யாகம்' செய்த பலன் அடைவதுடன் தனது கோத்திரம் விருத்தியடைந்து

லோகத்தில் ஐஸ்வரியங்களையும் பெற்று புகழுடன் வாழ்கிறான்.

□□ இறைவனுக்கு அமைந்துள்ள சொரூப லட்சணங்களுள் சுந்தரம் என்பது ஒன்று. அழகன் என அது பொருள்படுகிறது. உலகனைத்துமாய் இலங்குபவ்ன் இறைவன். காரணப் பொருளாயிருக்கும் கடவுள் காரியமாயுள்ள உலகாக இயங்குகிறான். காரணமே மற்றொரு வடிவில் காரியமாயிருப்பது கோட்பாடு. ஆதலால் பிரபஞ்ச முழுவதுமே அழகு வடிவெடுத் திருப்பது வெளிப்படை. அழகு தெய்வம் சிவனாகக் கருதப்படும் போது சுந்தரேஸ்வரன் என்றும், மகா விஷ்ணுவாக வைத்துக் கொள்கிற பொழுது சுந்தரராஜன் என்றும், அம்பிகையாக இலங்குகின்ற பொழுது திரிபுரசுந்தரி என்றும் பெயர்கள் பெற்றுள்ளது என்பதை அறியவும்.

□□ கோவிலுக்குச் செல்லுகையில் வெறுங் கையோடு போகக் கூடாது என்பதற்கேற்ப, சிறிது கற்பூரமாவது கொண்டு போகலாம். அல்லது தம் சக்திக்கு ஏற்ற பணத்தை உண்டியலில் போடலாம். அப்படி உண்டி யலில் சேரும் பணம் கோவில் சத்காரியங்களுக்குப் பயன்படுவது, பக்தர்களின் அபிலாட்சைகள் பூர்த்தி யடைய உதவுவதோடு கோவில் உற்சவங்கள் அனைத் திற்கும் பயன்படும்.

□□ எதையும் எதிர்பாராமல் கொடுத்துக் கொண்டே இருத்தல் வேண்டும். கொடுக்கக் கொடுக்க அது பன்மடங்கு பெருகுவதைக் காணலாம். ஆனால் அதை எதிர்பாராது அதில் கவனம் செலுத்தாது கொடுத்துக்

கொண்டே இருப்பதுடன் நம் வேலை முடிந்து விடுகிறது. வழங்க மறுக்கும் பொழுதெல்லாம் இயற்கை அடிகொடுத்துக் கொண்டே இருக்கிறது. விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் கொடுப்பதற்கு மனிதன் கட்டாயப் படுத்தப்படுவதால், மனம் உவந்து வழங்குதல் நல்லது. அதுவே தர்மம் ஆகும்.

□□ க்ஷேமத்தை எப்பொழுதும் விரும்புகின்றவன் தான் செய்யும் ஒவ்வொரு சுபகாரியங்களுக்கும், தெய்வ காரியங்களுக்கும், விரத சடங்குகளுக்கும், மத காரி யங்களுக்கும் தன் பெண், உடன் பிறந்த சகோதரி ஆகியவர் களுக்கு ஆடை, ஆபரணம், பொருள் முதலியன கொடுத்து உபசரிக்க வேண்டியது கடமையாகும். வசதியில்லாதவன் தன் வசதிக்குத் தகுந்தபடி உபசரிக்க வேண்டும். எப்படி யும், குடும்பத்தில் திருமணம் போன்ற சுபகாரியங்களை நடக்கும் போது சுமங்கலிகள் வருத்தமடையும்படி கர்த்தாவானவர் நடந்து கொள்ளுதல் கூடாது.

□□ பிறருக்கு உன்னால் இயன்றதைச் செய்யும் நிலையிலேயே இரு. அன்பைக் கொடு. உதவியைக் கொடு. பணிவைக் கொடு. ஆனால் பேரம் பேசுவதை ஒழித்துவிடு. பதிலாக ஒன்றையும் எதிர்பாராதே!

□□ 'கிருஷ்ணார்ப்பணம்' என்றால் உடல், மனம், புத்தி, சம்பத்து அனைத்தையும் சமூகத்துக்கென்றே சமர்ப்பித்து விட்டு அதன் பணியாட்கள் ஆவதே! உணவில்லாதவனுக்கும், துணி இல்லாதவனுக்கும் பிணியால் வாடும் நோயாளிக்கும் சேவை செய்யாமல் கடவுளைச் சந்தோஷப்படுத்த எண்ணினால் அது வஞ்சனை ஆகும்.

□□ இயற்கையின் நடைமுறையில் ஒழுங்குபாடு இருக்கிறது. அந்த ஒழுங்குபாடு சில வேளைகளில் மனிதனுக்குப் பேருதவி பண்ணக் கூடியதாக வந்தமைகிறது. இரவும் பகலும் சந்திக்கிற நேரத்தை சந்தியா வேளை என்கிறோம். அந் நேரத்தைக் கடவுள் வழிபாட்டில் பயன்படுத்தினால் மனிதன் அதில் அடையும் நன்மையானது மிக அதிகம். அதே போன்று உஷத்கால வேளையும் மேலானது.

□□ ஆத்மா வேறு; பிரபஞ்சம் வேறு. பிரபஞ்சம் அழியும் பாங்குடையது. ஆத்மா அழியாதது. வீடும், வீட்டில் குடியிருக்கும் மனிதனும் வெவ்வேறானவர்கள். குடியிருக்கும் மனிதன் தன்னையும் தான் குடியிருக்கும் வீட்டையும் அறிய முடிகிறது. அப்படி அறியும் பாங்குடையது ஆத்மா. அது அழியாப் பொருள், ஆத்மா ஆனந்த சொரூபம். நாம் ஆத்மா என்பதற்கு அத்தாட்சி நாமே! உடலோ ஜடப் பொருள். தூங்கும் பொழுது உடல் தன்னைத் தான் அறிந்து கொள்ளுதல் இல்லை. குடியிருப்பதற்குத் தகுதியற்ற உடலை ஜீவாத்மா புறக்கணிக்கிறது. அப்பொழுது அது வெறும் சடலம். ஆகவே ஆத்மாவின் வடிவம் சத்சித் ஆனந்தமாம்.

□□ உலகத்தில் தெய்வ சாந்நித்தியம் இருக்கிறது. தெய்வத்தின் பிரதிநிதிகளே சாதுக்கள். சாது தரிசனத்தினால் ஜன்ம சாபல்யம் கிடைக்கிறது. சாஸ்திர விசாரம் செய்த பெரியோர்களையும் அனுபூதிமான்களையும் பார்ப்பதினாலேயே, பாபம் தொலைந்து போய் சாந்தியும் சந்தோஷமும் கிடைக்கும். 'ஸாதுனாம் தர்சனம் புண்ணியம் ஸ்பர்ஸனம் பாபனாசனம்'. சாதுக்களின்

தரிசனத்தினால் புண்ணியம் கிடைக்கிறது. தொடுவதினாலேயே பாபம் நாசமடைகிறது; தெரிந்து கொள்ளவும்.

□□ பரமாத்மா ஒன்று; அதன் தோற்றங்களாக வந்திருப்பவை ஜீவாத்மாக்கள். ஜீவாத்மாக்கள் எணணிக்கையில் அடங்கா. அவை சூட்சுமமாயிருக்கும் மனதிலும், ஸ்தூலமாயிருக்கும் உடலிலும் கட்டுண்டு இருக்கின்றன. அப்படிக் கட்டுண்டு இருக்கும் பரியந்தம் அவைகளுக்கு பிறப்பும் இறப்பும் உண்டு. பல பிறவிகளுக்குப் பிறகு ஜீவாத்மன் ஒருவனுக்குப் பிரபஞ்ச வாழ்வில் சலிப்புத் தட்டுகிறது. அப்பொழுது அவன் உலகப்பற்றை நீக்கிவிட்டுத் தன்னுடை நிஜ சொரூபமாகிய ஆத்மாவை அடைய முயலுகிறான். மனதை தெளிவுபடுத்துவது ஆத்ம சாதனம். மலினப்பட்டுள்ள மனதுக்கு எது உலகாகத் தோன்றுகிறதோ அதே பொருள் சுத்த மனமுடையவனுக்குத் தெய்வமாகக் காட்சி கொடுக்கிறது. ஆக உலகம் வேறு. கடவுள் வேறு அன்று. இந்த மனதை ஒதுக்கித் தள்ளுதலே துறவியின் உட்பொருளாகிறது. மனதை ஒதுக்கித் தள்ளியவன் நிர்விகல்ப சமாதி அடைகின்றான். அவனே பிறவிப் பெரும் கடலைத் தாண்டியவனாகிறான்.

□□ ஒருவனுக்கு அறிவைக் கற்பிப்பவன் பரமாத்மாவாகவும், தன் சிருஷ்டிக்குக் காரணமான தந்தை பிரம்மமாகவும், தன்னை பத்து மாதம் சுமந்து கஷ்டப்பட்ட தாய் பூமிதேவியாகவும், உடன் பிறந்த சகோதரன் ஆத்மாவின் உருவமாகவும் எண்ணிப் போற்றத்தக்கவர்கள் ஆவார்கள். அதனால் இவர்கள் எது சொன்னாலும் எதிர்த்துப்

பேசாமல் கேட்டு அதன்படி நடக்க வேண்டியது தர்மமாகும்.

□□ அமிர்தம் விஷத்தில் இருந்தாலும், உயர்ந்த சாஸ்திர விஷய புஸ்தகங்கள் மூடனிடம் இருந்தாலும், நல்லொழுக்கம் சத்ருவினிடத்தில் இருந்தாலும், சொர்ணம் நரகலில் இருந்தாலும் எடுத்துக் கொள்ளலாம். அதில் தவறு இல்லை.

□□ வாசனையுள்ள இடத்தில் மகாலட்சுமி வாசம் செய்கின்றாள். மகாலட்சுமி இருக்குமிடம் வாசனையுள்ள இடமாக இருக்கும். வாசனையுள்ள இடத்தில் தான் வசதி பெருகும். அதனால் ஒருவன் தன் வீட்டில் தினசரியோ அல்லது வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளிலோ சாம்பிராணி தூபம் காண்பித்து தெய்வத்தைப் பிரார்த்திக்க வேண்டும்.

□□ கணவனானவன் தன் தர்மபத்தினியை புஷ்பம் போல் காத்துக் காப்பாற்ற வேண்டியது என்பதுடன் தன் மனைவிக்கு விபச்சார தோஷம் வராமல் பாதுகாக்க வேண்டியதுதான் கணவன் மனைவிக்குச் செய்யும் மேலான தர்மமாகும். ஒருவன் மனைவி விபசாரியாக மாறினால் அதற்கு கணவனே முழுப் பொறுப்பை ஏற்கவேண்டும்.

□□ வேதத்தினால் ரிஷிகளையும், ஹோமத்தினால் தேவர்களையும், சிரார்த்தத்தினால் பிதுர்க்களையும், அன்னத்தினால் அதிதிகளையும், மலர் மூலம் பூதங்களையும், உழைப்பினால் தன் எஜமானனையும், தரிசனத்தால் தெய்வங்களையும், பிரியத்தால் பெற்றோர்

களையும், அன்பால் மனைவியையும், கண்டிப்புடன் கூடிய பாசத்தால் பிள்ளைகளையும் திருப்தி செய்ய வேண்டியது தர்மமாகும்.

□□ கெட்ட எண்ணங்களையெல்லாம் உள்ளத்தை விட்டு ஒதுக்கி விடு. தூய நல்ல எண்ணத்தில் நிலைத்திரு. பிறகு உன் மனதைக் கட்டியாள உனக்கு இயலும். மனிதன் செய்வது இன்னதென்று தெரியாது, திணறிக் கொண்டிருக்கும் பொழுது இறைவன் அருள் அவனுக்குக் கிட்டுகிறது என்பதை அறியவும்.

□□ ஏமாற்று வித்தையின் மூலம் பெரிய காரியம் ஒன்றையும் சாதிக்க முடியாது. சிறந்த காரியங்கள் அன்பினாலும், சத்தியத்தின் மீதுள்ள ஆர்வத்தினாலும், ஆற்றலினாலும் சாதிக்கப்படுகின்றன. மனிதத் தன்மையையும் தெய்வத் தன்மையையும் தோற்றத்துக்குக் கொண்டு வருதல் மூலம் சிறந்த காரியங்கள் நிறைவேறுகின்றன. அதனால் இறைவன் மீது பாரத்தைப் போட்டு வாழ்க்கையை நடத்து.

□□ பல் துலக்கிய உடன் குச்சியை அலம்பி தென்மேற்கு மூலையில் அல்லது ஓடும் தண்ணீரில் விட வேண்டும். பல் துலக்க குச்சி கிடைக்காத சமயம் வாயை பத்து முறை கொப்பளித்தால் பல் துலக்கியதற்குச் சமமாகும். கோவிலில், கொட்டிலில், யாகம், ஹோமம் செய்யுமிடத்தில், ஜலத்திற்குள், இருந்து பல் துலக்கக் கூடாது.

□□ மன தைர்யம், மனதை அடக்குதல், ஐம்புலன் களை அடக்குதல், தினசரி குளித்தல், இரக்கம், கோபமில்லாத வார்த்தை, நண்பர்களுக்கு துரோகம்

செய்யாமை ஆகிய இந்த ஏழுவித காரியங்களும், ஒருவனின் செல்வத்தையும் வாழ்க்கையையும், தர்மத்தையும் விருத்தி செய்கின்றது; அறியவும்.

□□ எவன் தான் செய்யவேண்டிய அன்றாட காரியங்களைச் செய்ய சோம்பல் படுகிறானோ, எவன் பிறர் செய்யும் காரியங்களில் வேண்டுமென்றே குறை கூறுகின்றானோ, எவன் தான் உடனடியாகச் செய்ய வேண்டிய காரியத்தை வேண்டுமென்றே தாமதித்துச் செய்கிறானோ அவன் அறிவு இல்லாதவன் ஆவான். கடவுளின் அருளும் அவன்பால் செல்வதில்லை.

□□ வீட்டில் எந்த விசேடம் செய்தாலும், இடது புறமுள்ள வீட்டிலும் வலது புறமுள்ள வீட்டிலும் உள்ளவர்களை அழைத்து உணவு கொடுக்காமல் செய்கின்ற காரியம் நெய் இல்லாமல் ஹோமம் செய்த அக்னி போலாகும். அதாவது இடது புறம் நாலு வீட்டுக்காரர் எதிர்பக்கம் நாலு வீட்டுக்காரர் இவர்களை கட்டாயம் அழைக்கவேண்டும். அப்பொழுதுதான் அந்த விசேடத்தின் பலன் கிடைக்கும்.

□□ நமக்கு இன்பத்தையும் துன்பத்தையும் தருவது இந்தப் புலன்கள் அல்ல என்பதுதான் உண்மை. இவையெல்லாம் வெறும் கருவிகளே! இவற்றை இயக்கும் எஜமானன் நம்முடைய உள்ளம். அது சொன்னபடிதான் இவை பணிந்து வேலை செய்கின்றன. மனம் வேதனைப்பட்டால் மனைவியிடம் கூட சுவாரசியம் இருப்பதில்லை. மனம் ஆனந்த நிலையில் இருக்கும்போது எளிய உணவு கூட ருசிக்கிறது. இப்படி மனத்தைக் கொண்டு புலன்களைப் பயன்படுத்தும் சக்தி

மனிதனுக்கு மட்டும்தான் இருக்கிறது. இது இறைவனின் வரப்பிரசாதமாகும்.

□□ தலைவிதி என்பது ஏதோ நம் மீது நமக்கு மேலே இருக்கும் தெய்வத்தால் திணிக்கப்படும் ஒரு தண்டனை என்ற தவறான எண்ணம் நம்மை விட்டு அகல வேண்டும். 'இறைவன் திருவருள், எங்கே நம்மை எப்படி வைத்தாலும், அங்கே அமைதியுடன் நாம் இருக்கப் பழகிக்கொள்ள வேண்டும்.' அதுவே தர்மம்.

□□ இன்பம் அடைவதற்கான ரகசியம் எப்போதும் ஏதேனும் செய்து கொண்டிருப்பதுதான். நல்லவன் எப்போதும் மன்னிப்பதிலேயே இன்பம் காண்பான். பிறர் துயரைப் போக்கி அதில் நாம் காணும் இன்பத்தைக் கண்டு ஆண்டவனே இன்பமடைகிறான். பயன் கருதி நன்மை செய்வதில் மனித இன்பம் உண்டாகலாம். ஆனால் பயன் கருதாது நன்மை செய்பவர் தெய்வ இன்பம் துய்ப்பர்.

□□ எதிலும் குறை காணும் உனக்கு இறுதி வரை நிறை காணவே இயலாது. ஆகவே, குறை நீக்கி நிறை கொண்டு வாழப் பழகிக்கொள். மன அமைதியும் மகிழ்ச்சியும் ஏற்படும்.

□□ கணவன் - மனைவியை நேசிப்பது, மனைவி கணவனை நேசிப்பது, புத்திரர்கள் தந்தையை நேசிப்பது, தந்தை புத்திரர்களை நேசிப்பது, இவ்விதம் உலகில் நேசிக்கப்படும் அனைத்தும் அவைகளிடம் உள்ள இன்பத்திற்காக அல்லாமல் ஆன்மாவில் உள்ள இன்பத்திற்காகவே நேசிக்கப்படுகின்றன என்பதை உணர். அன்பும், நேசமும், கருணையும் இறைவனே!

□□ ஓர் குளத்தில் காலை விட்டவுடன் அந்த நீர் எப்படி கலங்கி விடுகிறதோ அது போல் ஒருவனுடைய பரிசுத்தமான மனத்தில் பயம் குடிகொண்டால் அங்கு தெய்வத் தன்மையே மறைந்து விடும். மனித உடலுக்கு ஆபரணங்கள் அழகுபடுத்துவது போல தெய்வத் தன்மை வாய்ந்த சிறந்த சாதகனுக்கு உண்மை, அடக்கம், அன்பு, தயை, காருண்யம் போன்றவை அழகுபடுத்துகின்றன. நிலவொளியால், உலகம் இனிமை அடைவது போல், பொறுமையே உருவான சாதகனால் மக்களுடைய உள்ளங்கள் தெய்வீகம் என்ற நிலவொளியால் குளிர்ச்சித் தன்மை அடையும்.

□□ ஓ மனிதா! ஓடி ஓடி சம்பாதித்து செல்வத்தைச் சேர்த்து வைத்தாயே! என்னவாயிற்று? மனிதன் எப்படிப் பிறக்கிறானோ அப்படியே போகிறான். ஏதாவது தூசி ஒட்டிக் கொண்டிருந்தாலும் தண்ணீர்விட்டு குளிப்பாட்டி விடுகிறார்கள். எடுத்துக் கொண்டு போவது ஏதுமில்லை. ஆனால் உனக்குத் தெரியாமல் புண்யம், பாவம் இரண்டு மட்டுமே உன்னை பின் தொடர்கின்றன. புண்யம் செய்த வனுக்கு கதிமோட்சம் உண்டு. பாபம் செய்தவனுக்கு கதிமோட்சம் இல்லை. மீண்டும், மீண்டும் பல இழி பிறவிகள்தான் அவனுக்கு. உன் நிலை என்ன? யோசித்துப் பார்.

□□ தேவைக்கு மேல் செல்வம் சேர்த்தாலும் தேவை நிற்பதில்லை. தேவைக்கு ஒரு முடிவே கிடையாது. ஆகவே தேவைக்கு மேல் செல்வம் சேர்த்தால் முடிந்த வரை வறிஞர்களுக்கு உதவி செய்து, மற்றவர்களுக் காகவும் வாழ நினை. நீ தேவையில்லை என்று

ஆண்டவன் நினைத்து விட்டால்? ஒரு நொடி சிந்தித்துப் பார்.

□□ நீங்கள் ஒளிக்கெல்லாம் ஒளி. சூரிய சந்திரரும் தாரகைகளும் எவரிடமிருந்து ஒளிபெற்றுத் திகழ் கின்றனவோ, அந்த மெய்யறிவு, மெய் உணர்வு உங்கள் இதய அரங்கில் இருக்கிறது. நீங்கள், அழியும் இந்த உடல் அல்ல. சச்சிதானந்த ஸ்வரூபமான பிரமன் அல்லது ஆத்மாவே நீங்கள். அது அழிவற்றது. பேரின்ப வடிவு டையது. அளவைக் கடந்தது. எனவே விழித்தெழுங்கள். ஆத்மாவை அறிந்து கொள்ளுங்கள். அதுதான் உங்கள் வாழ்வின் லட்சியம் ஆகும்.

□□ சாஸ்திரம் தெரிந்தவர்கள் அனுஷ்டானமுள்ள வரும், ஆசாரமுள்ளவரும், சதுர்வேதத்தை அறிந்துள்ள பிராமணர்களை வைத்து தேவாலயங்களிலும், பஜனை மடங்களிலும், புண்ய நதி தீர்த்தத்திலும் யாகங்களையும், ஹோமங்களையும் செய்ய வேண்டியது. இதனால் காலம் தவறாமல் மழை பெய்வதுடன் உலகம் க்ஷேமமடைந்து ஜனங்கள் கஷ்டமில்லாமல் இருப்பார்கள். மற்றும் பயிர் மிகச் செழித்து, பசுக்கள் பால் மிகுதியாகக் கொடுக்கும்.

□□ துளசி பத்திரத்தை பழிப்பவனும் துளசிச் செடியை காலால் மிதித்தவனும் விஷ்ணுவின் வருத்தத்துக்கு ஆளாகிறார்கள். துளசிச் செடி இருக்கும் வீட்டில் விஷ்ணு பகவான் தன் தர்ம பத்தினியான சகல ஐஸ்வர்யங்களையும் கொண்ட மகாலட்சுமியுடன் வாசம் செய்கிறார்.

□□ கோவிலுக்குள் செல்லும் பக்தன், முதலில் கோபுரத்தை வணங்க வேண்டும். பின்பு கொடி மரத்தை

அண்ணாந்து பார்த்து வணங்க வேண்டும். அதாவது மனிதனின் எண்ணங்கள் உயர்ந்து இருக்க வேண்டும். தாழ்ந்த மனப்பான்மை கூடாது. பக்தர்களின் நிலையும் தாழ்ந்து விடாமல் உயரவேண்டும் என்ற தாத்பர்யமே கோபுர, கொடி மர தரிசனம் ஆகும்.

□□ அர்ச்சகர்கள் பிரதான கோவிலிலுள்ள மூலவருக்கும் பக்தர்களுக்கும் பாலமாக இருக்க வேண்டும். கொஞ்சம்கூட அர்ச்சகர்களுக்குப் பேராசை இருக்கவே கூடாது.

□□ ஒருவனுக்கு நிற்க நிழல் தரக்கூட முடியாத மனித சரீரம் எதற்குமே பயன்படுவதில்லை. நாம் ஜீவித்திருக்கும் போதே, பலருக்கு நிழல் தரக்கூடிய நற்பணிகளைச் செய்துவிட வேண்டும். எவ்வளவுதான் சேகரித்தாலும் நம்முடன் எதுவுமே வரப்போவதில்லை. நாம் மற்றவருக்கு இடையூறாக இல்லாமலிருந்தாலே பெரிய நன்மை செய்த பலன் ஏற்படும்.

□□ தொண்டு, தருமம், விசுவப் ப்ரேமை இவற்றினால் உங்கள் இதயங்கள் பரந்து, அன்பு நிறைந்ததாகவும், தூயதாகவும் வைத்திருங்கள். ஆண்டவன் திருநாம நினைவாலும், ஜபத்தாலும் அவனே ஒவ்வொரு அணுவிலும் இருக்கிறான் என்ற உணர்வினாலும், உங்கள் உள்ளத்தைப் பிரகாசமாக வைத்திருங்கள். இப்படிச் செய்வதின் மூலம் இன்றே, இங்கேயே பரம சாந்தியும், அமரத்வமும், பேரின்பமும் நிச்சயம் பெறுவீர்கள்.

□□ பசுவானது தன் கன்றுக்குப் பால் கொடுக்கும் சமயத்திலும், தண்ணீர் குடிக்கும் சமயத்திலும் எவ்விதத் தடையும் செய்தல் கூடாது. பாவங்களில் அது பெரிய பாபமாகும்.

□□ அக்கினி, சூரியன், சந்திரன், வில்வமரம், பசு, ஜலம் இவைகளைப் பார்த்துக் கொண்டு மலஜலம் கழிப்பது கூடாது. பாம்புப் புற்றின் அருகிலும், எறும்புகள் கூட்டத்தின் மீதும் சிறுநீர் கழித்தல் கூடாது. பாவங்களில் அது பெரிய பாபமாகும்.

□□ ஆசனங்கள், பிராணாயாமம், சூரிய நமஸ்காரம் செய்தும் சத்வ உணவை உண்டும் உடலை உறுதிப்படுத்துங்கள். தூய சிந்தனைகளின் மூலம் மனதை விழிப்புடன், அமைதியுடன் வைத்திருங்கள். புண்ய நூல்களைப் படித்தும், தியானம் செய்தும் புத்தியைக் கூராகவும் நுட்பமாகவும் வைத்திருங்கள்.

□□ சித்தர், முத்தர், முனிவர்கள், அவர்களது பொன்மொழிகள், இந்த வடிவங்களிலும் ஆண்டவன் உங்களிடம் வருகிறான். படங்களில் பார்ப்பது போலவும், கோயில்களில் காண்பது போலவும் நான்கு கரங்களுடன்தான் இறைவன் வருவான் என்று எண்ண வேண்டாம். உங்கள் மனதை சுத்தப்படுத்தி வையுங்கள். அவன் சாதாரண உருவிலும் வந்து உங்களுக்கு உதவி செய்வான்.



